ஸ்ரீ ராம ஜெயம்

ஸ்ரீ ராம நவமியை முன்னிட்டு

# ஸ்ரீ சீதா ராம திருக்கல்யாண மஹோத்ஸவம்

24.3.99 (புதன்)

**ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் பேயாழ்வார் திருக்கோயில், மைலாப்பூர், சென்னை – 4.**



நிகழும் நாளது ஸ்ரீ வெகுதான்ய வருடம் பங்குனி மாதம் 10ஆம் தேதி 24.3.99 புதன் கிழமை மதியம் 3.00 மணி முதல் இரவு 9 மணி வரை ஸ்ரீ சீதாலக்ஷ்மண ஹனுமத் சமேத **ஸ்ரீ கோதண்ட ராமபிரானுக்கு ஸ்ரீ சீதா ராம திருக்கல்யாண மஹோத்ஸவம்** மிக விமர்சையாக நடைபெறும்.

**திருக்கல்யாண மஹோத்ஸவம் உபயம் கட்டணம் ரூ. 95/-**

குறிப்பு 1:

ரூ 95 செலுத்தி திருக்கல்யாண மஹோத்ஸவத்தில் கலந்து கொள்ளுபவர்களுக்கு திருக்கல்யாண உற்சவ பூஜையில் வைத்த **திருமாங்கல்ய சரடு, மஞ்சள் குங்குமம், ஸ்ரீ ராமர் டாலர், ஸ்ரீ ராமர் போட்டோ, அக்ஷதை பிரசாதம்** முதலியவை கிடைக்கும்.

குறிப்பு 2:

M.O. DD. Cheque, அனுப்பும் பக்தர்கள், தாங்கள், கோத்திரம், நட்சத்திரம், பெயர், அட்ரஸ், முதலியன தனி தனி, பெரிய எழுத்தில் எழுதவும். குறிப்பாக M.O. அனுப்பும் பக்தர்கள் எங்களுக்கு கிடைக்கும்M.O.letter இல் பெயர் அட்ரஸ் தனிதனி பெரிய எழுத்தில் எழுதவும். பிரசாதம் கூரியரில் அனுப்பி வைக்கப்படும்.

**M.O.DD. Cheque அனுப்ப வேண்டிய முகவரி**

**S. Sri Rangaraja Battachari,**
**No. 5 Kasavaperumal Sannathi Street,**
**Mylapore, Chennai - 600 004.**
**Phone: 4610179**

சுதந்திரப் போராட்டத் தியாகியாக, நாடோடியாக, இமயமலைச் சாரலில் சன்னியாசிகளோடு சன்னியாசியாக, கேரளத்து அடித்தட்டு மக்களோடு சக மனுஷனாக – இப்படி வாழ்வின் பல்வேறு ருசிகளைக் கண்டு, கலையாக்கியவர் வைக்கம் முகம்மது பஷீர் – மலையாள இலக்கிய பிதாமகர்.

எளிமையும் அழகும் நகைச்சுவையும் மிளிரும் பஷீரின் கதைகள் உலக மொழிகள் பலவற்றில் வெளியாகி கோடிக்கணக்கான வாசக நெஞ்சங்களை அள்ளிக் கொண்டவை.

'மதிலுகள்', 'பாத்துமாவின் ஆடு', 'இளம்பருவத்துத் தோழி' 'எங்கள் தாத்தாவுக்கொரு யானை இருந்தது' போன்ற பஷீரின் குறுநாவல்கள் தமிழிலும் வந்திருக்கின்றன.

இந்தக் கதை – 'அனுராகத்திண்டெ திளங்ங'ளுக்கு ஒரு தனிச்சிறப்புண்டு. இதில் பஷீரேதான் கதாநாயகன்! இந்தக் காதல் – அவரது சொந்தக் காதல்! காதல் கொண்ட உள்ளங்களின் உணர்ச்சிப் புயல்களை எதிர்கொள்ளத் தயாராயிருங்கள்!




# வைக்கம் முகம்மது பஷீரின்

# ஒரு காதல் டைரி

அடுத்த வாரம் திறக்கிறது!

**அழகுத் தமிழில் : வையவன்**


*கல்கி இன்டர்நெட் முகவரி :* www.kalkiweekly.com *ஈ மெயில் :* kalkiweekly@vsnl.com



* ஓவியர் பத்மவாசன் கை வண்ணத்தில் தபால் தலைக்கான வடிவமைப்பு

# அமரர் கல்கிக்கு அஞ்சல் துறையின் அஞ்சலி!

அண்ணல் காந்தியடிகள் மறைந்து ஓராண்டுக்குப் பிறகு மத்திய அரசு அவர் நினைவாக நான்கு தபால் தலைகளை ஒரே சமயத்தில் வெளியிட்டது.

அமரர் கல்கி அவர்கள் அந்தத் தபால் தலைகளில் இரண்டு 'செட்' வாங்கி, ஒன்றை மகள் ஆனந்திக்கும், மற்றதை மகன் ராஜேந்திரனுக்கும் பரிசளித்தார். அவர் மனம் போலவே அவருடைய குரலும் அன்று கனத்துக் கரகரத்தது. அந்த கனத்த சூழலினிடையில் தபால் தலை சேகரிப்பு என்ற பயனுள்ள பொழுதுபோக்கு பற்றியும் தமது மகனுக்கும் மகளுக்கும் அன்று எடுத்துரைத்தார் 'கல்கி'.

ஆனால் அமரர் கல்கி அவர்கள் நினைவாகவே அவரது நூற்றாண்டினையொட்டி ஒரு தபால் தலை பிற்காலத்தில் வெளியிடப் பெறும் என்று ஆனந்தியோ, தம்பி ராஜேந்திரனோ அன்றைக்கு எண்ணிப் பார்த்திருக்கவா முடியும்!

கல்கி அவர்களுடைய நூற்றாண்டு என்று தமிழ் மாநில காங்கிரஸ் தலைவர் திரு. மூப்பனார் அவர்களிடம் தெரிவித்த தருமே. "[illegible]க்குச் செய்யாமல் யாருக்குச் செய்யப் போகிறோம்" என்றார். அதற்குள் ஓராயிரம் அர்த்தங்கள் உள்ளடக்கம். சுருக்கமாகச் சொல்வதெனில், அண்ணல் காந்தியடிகளின் மெய்யான சீடர், சுதந்தரப் போராட்டத்தில் பங்கேற்று மும்முறை சிறை சென்ற தீரர்; தியாகத்துக்குக் கூலி பெற மறுத்து கடும் உழைப்பால் முன்னேறியவர்; தமது எழுத்தையும் ஒவ்வொரு சொல்லையும் செயலையும் தேச நலன் கருதியே பயன்படுத்தியவர் கல்கி. இவைதாம் நாடறிந்த அவரது பல்வேறு சாதனைகளின் அடித்தளம்.

இதை உணர்ந்திருப்பதால்தான் மூப்பனார் அவர்கள் உடனடியாக கமிட்டி அமைத்து, ஆலோசனைகள் நடத்தி, செயல் திட்டங்கள் வகுத்தார். அவை ஒன்றன்பின் ஒன்றாக நிறைவேறியும் வருகின்றன. செயல் திட்டங்களுள்

* ஜக்மோகன்



ஒன்று, அமரர் கல்கி அவர்கள் நினைவாகத் தபால் தலை வெளியிடச் செய்வது.

இது தொடர்பாக முதலமைச்சரை அவரது இல்லத்தில் சந்திக்க ஏற்பாடாயிற்று. வருவது யார், எதற்காக வருகிறார் என்பதைத் தெரிந்து கொண்ட கலைஞர், மாடிப்படி இறங்கி வந்து தோழமைக் கட்சித் தலைவரை மேலே தமது அறைக்கு அழைத்துப் போனார். பத்து நிமிஷ சந்திப்பு என்று கருதப்பட்டதானது, மேலும் நீடித்துக்கொண்டே போனது. கல்கி அவர்களைப் பற்றி இருவரும் மாறி மாறி ஆர்வத்துடன் பேசிக் கொண்டே போக, முதல்வரின் உதவியாளர் சண்முகநாதனுக்கு ஒரே தவிப்பு! நேரமாகிறதே, அடுத்த அலுவல் முதல்வருக்காகக் காத்திருக் கிறதே என்றுதான்.

'தபால் தலை திட்டம் மட்டுமின்றி, நூற்றாண்டுக் கமிட்டியின் திட்டங்கள் எல்லாமே சிறப்பாக நிறைவேற தமிழக அரசு முழு ஒத்துழைப்புத் தரும்' என்று வாக்களித்த முதல்வர் வாசல்வரை வந்து தோழமை மறவாத எதிர் கட்சித் தலைவரை வழியனுப்பி வைத்தார்.

அதன் பின்னர் காரியங்கள் துரிதமாக நடந்தேறின. சென்னை பிரதம போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் ஜெயராமன் அவர்களும் துணை டைரக்டர் பாலசுந்தரம் அவர்களும் இதில் முழு ஈடுபாடு காட்டி தபால் தலை டிசைன் மற்றும் கல்கி அவர்களின் வாழ்க்கை வரலாறு சுருக்கம் முதலானவற்றைச் சேகரித்து தில்லிக்குத் தமது ஆமோதிப்புடன் அனுப்பி வைத்தனர்.

மத்திய அமைச்சர் சுஷ்மா சுவராஜ் அவர்கள் ஃபைலில் கையெழுத்துப் போட வேண்டிய தருணத்தில் அவர் பதவி துறந்து தில்லி சட்டசபைத் தேர்தலில் நிற்க நேர்ந்தபோது, தவிர்க்க முடியாத தாமதங்கள். அவருக்குப் பதில் ஜக்மோகன் பதவி ஏற்க, கட்சிப் பாகுபாடின்றிப் பல தலைவர்களும் தாமாகவே முன்வந்து, 'கல்கி தபால் தலை விஷயம் என்னாச்சு?' என்று வினவ, அமைச்சர் சற்று அசந்துதான் போயிருப்பார்! விளைவு, தமிழக முதல்வருக்கு அவருடைய கடிதம்: "கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நூற்றாண்டினையொட்டி அவர் நினைவாக தபால் தலை வெளியிட உத்தரவு வழங்கி விட்டேன். தபால் தலையை வெளியிடும் விழாவை சம்பந்தப்பட்ட அனைவருக்கும் வசதியான தேதியில் வைத்துக் கொள்ளலாம்."

இது தமிழக முதல்வருக்கு எழுதப்பட்ட கடிதம் மட்டுமல்ல; தமிழன் ஒவ்வொருவனுக்கும் எழுதப்பட்ட கடிதம்; பெருமிதம் பொங்கும் அவன் நெஞ்சிலே வரையப்பட்ட வரிகள். ◯

## ஏமாற்றம் ஏற்படுத்திய !



● தூர்தர்ஷனில் 'புதிய பாதை' என்ற செய்திப் படம். பெண்களின் நிலையைப் பற்றியது. பொதுவாக இந்த மாதிரிப் படங்கள் 'பெண்கள் வஞ்சிக்கப்படுகிறார்கள்' என்று ஒப்பாரி வைக்கும். ஆனால் ஒருவித பாஸிடிவ் அணுகுமுறையைக் கையாண்டதோடு, பெண்கள் எந்தவிதத்தில் தோல்வி காண வாய்ப்புகள் உண்டு என்பதையும் எடுத்துக்காட்டியது. வழக்கறிஞர் அருள்மொழி கருத்துச் செறிவோடு பேசினார். பலர் பேசுவதை மட்டுமே காட்டிக் கொண்டிருக்காமல் நிறைய விஷுவல்களைச் சேர்த்திருந்தது சிறப்பு.



* இந்த வாரம் டீவி விமர்சனம் செய்பவர் நடன இயக்குனர் ராதிகா சூரஜித்.

● 'காசளவு நேசம்' தொடரில் இந்தி தெரிந்த மனைவி ஊடல்கொண்டு தொலைபேசியில் பேசும் ஒரு காட்சி தவிர மற்றவற்றில் இயக்குனர் கே. பாலசந்தரின் 'தனித்துவம்' வெளிப்படாதது அவரது பரம ரசிகையான எனக்கு ஏமாற்றம் தான்.

● ராஜ் டீ.வி.யில் 'திரை விமர்சனத்'தில் 'துள்ளாத மனமும் துள்ளும்' படம். யாரோ ஒரு மூன்றாவது மனிதர் அதிமேதாவித்தனமாக ஒரு படத்தைப் பற்றிப் பொறுப்பில்லாமல் கிழித்துப் போடுவதைவிட, படம் சம்பந்தப்பட்டவர்களே அதன் படப்பிடிப்பின்போது நடந்ததையெல்லாம் சொல்வது ருசிகரமாக இருந்தது. ஆனால் 'விமர்சனம்' என்ற பெயரை மாற்ற வேண்டும்.

● விஜய் டீ.வி.யில் 'மதுரகீதம்' பார்த்ததும் பலமுறை என் மனத்தில் ஏற்கெனவே எழுந்த கேள்வி மீண்டும் எழுந்தது. இந்த கேபிள் டீ.வி. சானல்களில் எதற்காக ல,ள,ழ உச்சரிப்புக்களைச் சரியாக ஒலிக்க முடியாத பெண்களை – அவர்கள் இளமையாகவும், அழகாகவும் இருக்கும் ஒரே காரணத்துக்காகத் தேர்வு செய்து தொலைக்க வேண்டும்? என்னிடம் நடனம் கற்றுக் கொள்ளும் ஓர் இளம் மாணவி, "அவங்களுக்கு சரியான உச்சரிப்பு வரும். ஆனா ஸ்டைலுக்காக அப்படிப் பேசறாங்க" என்றபோது அதிர்ச்சியாக இருந்தது.

தொகுப்பு: **ஜி.எஸ்.எஸ்.**

**நூற்றுக்கணக்கானவர்களை பரத நாட்டியத்துக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறது சரஸாலயா. அதன் நிறுவனர் கே.ஜே. சரஸா. ஐம்பது ஆண்டுகளாக பரதநாட்டியம் பயிற்றுவித்து வரும் அவருக்கு அண்மையில் அவரது மாணவ மாணவிகள் (இன்று அவர்களில் பலர் ஆசிரியர்கள்) மிகப் பெரிய பாராட்டு விழா நடத்தினார்கள். சரஸாவைச் சந்தித்தபோது...**

"நீங்கள் நாட்டியக் கலைஞர் ஆனது எப்படி..?"

"நான் திட்டமிட்டோ, ஆசைப்பட்டோ நாட்டியம் கற்றுக்க ஆரம்பிக்கல்லை. எங்களுடையது இசைப் பாரம்பரியம் மிக்க குடும்பம். சொந்த ஊர் காரைக்கால். பெரியப்பா கூரைநாடு நடேச பிள்ளை நாதஸ்வர வித்வான். வழுவூர் ராமையா பிள்ளை எங்களுக்கு உறவினர். அடிக்கடி வந்து போவார். கேள்வி ஞானத்தில் கொஞ்சம் பாடுவேன். அதைக் கேட்டுட்டு, நாட்டியத்துக்குப் பாட என்னைப் பழக்க ஆரம்பிச்சார். நானும் அவருடன் பயணம் செய்தபடியே நாட்டிய நிகழ்ச்சிகளுக்குப் பாடுவதில் கொஞ்சம் கொஞ்சமாகத் தேர்ச்சி பெற்றேன். அப்புறம் முறையாக ராமநாதபுரம் கிருஷ்ணனிடமும் வள்ளியூர் குருமூர்த்தியிடமும் பாட்டு கற்றுக் கொண்டேன். ராமையா பிள்ளைதான் சொன்னார்: 'நட்டுவாங்கம் கத்துக்கோ. கடைசி காலம் வரைக்கும் அது கை கொடுக்கும். பெண்களுக்கு நாட்டியம் என்கிறது அழகு இருக்கற வரைக்கும் தான்...' அதனாலே நான் ஆடணும்னு ஆசையே படலை. 1953ல் என் முதல் மாணவி ரத்னாவை அரங்கேற்றினேன். அதற்கப்புறம் எத்தனையோ அரங்கேற்றங்கள்..."

# பரதம் வேறு; சினிமா நடனம் வேறு!

"இன்றைக்கு நாட்டியம் கற்றுக் கொள்கிற அத்தனை பேரும் அரங்கேற வேண்டும் என்பது விதி மாதிரியே ஆகிவிட்டது. ஆனால் தரம் ரொம்ப நீர்த்துவிட்டது. குறிப்பாக அங்க சுத்தம் இல்லை- அகௌரவமான அசைவுகளெல்லாம் அனுமதிக்கப்படுகின்றன... இந்த வீழ்ச்சி ஏன் வந்தது...?"

"ரொம்ப கமர்ஷியல் ஆகிவிட்டது. சமுதாய அங்கீகாரத்துக்காகப் பெத்தவங்க குழந்தைகளை மேடையேற்ற அவசரப்படறாங்க. செலவு செய்யத் தயாராயிருக்காங்க. பணம் கொடுக்கத் தயாராயிருக்காங்க. மனசுல ஆதங்கம் இருக்கு. இன்னும் கொஞ்சம் வருஷம் போகட்டுமே. அஞ்சு வருஷமாவது முழுசா கத்துக்கட்டும்; முக பாவம் வரட்டும்னு சொன்னா, கேட்க யாராவது தயாரா...? 'பத்தாவது பரீட்சைக்கு முன்னால அரங்கேற்றம் பண்ணிடணும். இல்லைன்னா அப்புறம் படிப்புல பிஸி ஆயிடுவா' அப்படிங்கறாங்க... அங்க சுத்தம்... அது இல்லைங்கறதையும் நான் ஒத்துக்கத்தான் வேண்டியிருக்கு. (இதைச் சொல்லும்போது சரஸா கண்கலங்குகிறார்). ஒரு பெண் ஆடுகையில், கிருஷ்ணனைக் காட்டும்போது கைகளை இப்படிப் பிடிக்கலாமே (அபிநயித்துக் காட்டுகிறார்) கொஞ்சம் சிரிக்கலாமே என்று தோன்றத்தான் செய்கிறது. என்ன பிரயோஜனம்? சொன்னால் கேட்கிற நிலைமையில் பலர் இன்று இல்லை. குருஸ்தானம் என்பதாக ஒன்று இல்லை... (எழுந்து நின்று ஆடிக் காட்டுகிறார்.) ராமைய்யா பிள்ளை சொல்லித் தரும்போது இப்படித்தான் ஆடச் சொல்லுவார்... தொய்வில்லாத- உடல் துவளாத அசைவுகள். அப்படித்தான் செய்யணும்னு இன்னிக்கு நான் சொன்னால் புரிந்து கொள்ளத் தயா



• சரஸாவுக்கு உறுதுணையாக இருந்து வரும் இளைய சகோதரி சீதாலக்ஷ்மி.

ராயிருக்க வேண்டுமே! அரங்கேற்றத்துக்கு அவசரப்படாதீங்கன்னு சொன்னா நாளைக்கே நாற்பது குழந்தைகள் வராம நின்னுடுவாங்க! சக்தி அந்தப் பக்கம் இருக்கு. பணத்தால் எதையும் பண்ண முடியும் என்கிற காலத்திலே நாம எப்படி அதை எதிர்க்கறது? எனக்குத் தெரிந்தது இந்தத் தொழில் மட்டும்தான்.''

''இப்படியே எல்லாரும் சொல்வதனால் தானே சீரழிவு? மோசமான மாணவர்களை உற்பத்தி செய்யும் ஃபாக்டரியாக நாட்டியப் பள்ளிகள் இருக்கலாமா...?''

''எல்லாரும்- எல்லா நாட்டியப் பள்ளி ஆசிரியர்களும் சேர்ந்துதான் இதுக்குத் தீர்வு காண வேண்டியிருக்கும். ஆனால் அது நடக்கப் போறதில்லை. தெருவுக்கு நாலு டான்ஸ் கிளாஸ், எல்லாருமே அரங்கேற்றத்துக்குத் தயார் பண்றாங்க... நான் கற்றுக் கொடுக்கலைன்னா வேற இடத்துல போய்க் கத்துக்குவாங்க- அவ்வளவுதான்...''

''உங்கள் மாணவ, மாணவிகள் நிறையப் பேர் சினிமாவில் நடிக்கிறார்கள். சினிமாவில் பரத நாட்டியம் என்று அவர்கள் ஆடுவதெல்லாம் சாஸ்திரீயமானதில்லை. ஆனால் அந்த 'முத்திரை' அதற்குத் தரப்படுவதால் அந்த அசைவுகளே பரத நாட்டிய மேடையிலும் அனுமதிக்கப்பட்டவையாக ஆகிவிடுகின்றனவோ என்கிற சந்தேகம் வருகிறது.''

''சினிமா நடனம் வேறு. பரதம் வேறு என்பதிலே நான் தெளிவா இருக்கேன். ஆனால் எல்லாரும் அப்படியில்லை. தில்லானா மோகனாம்பாளில் காட்டப்பட்டது



• கே.ஜே. சரஸா




• சரஸாவின் பெண்கள் ராஜலக்ஷ்மி, மீனா லோகநாதன்: இவர்களும் வகுப்பு நடத்துகிறார்கள்

**''மிக மோசமான நிகழ்ச்சிக்குக் கூட நல்ல விமர்சனத்தை பத்திரிகையில் 'வரவழைக்க' முடியுது இந்தக் காலத்தில்... சீர்திருத்தத்தை எந்த முனையிலிருந்து எப்படி ஆரம்பிக்கறது...?''**

தில்லானா இல்லை என்று என் அபிப்பிராயத்தைச் சொன்னால் ஏன் அப்படிச் சொல்றீங்கன்னு கேட்கறாங்க!"

"சாஸ்த்ரீய இசை குறித்தும், அதன் தரம் குறித்தும் பொதுமக்களுக்கு, ரசிகர்களுக்கு இருக்கிற அறிவு பரத நாட்டியம் குறித்து இருப்பதில்லை. இதனாலேயே நாட்டியக் கலைஞர்களின் பொறுப்பும் பயிற்சி அளிக்கிற ஆசிரியர்களின் பொறுப்பும் அதிகமாகிறது, இல்லையா...? உயர்ந்ததை இனம் காட்டி, உயர் ரசனையை வளர்க்க வேண்டாமா..."

"நல்ல கலைஞர்களும் இருக்காங்க. உயர்ந்த நிகழ்ச்சிகளும் நடக்கின்றன. அடியோடு இல்லையென்று சொல்ல முடியாது. ஆனால் விமர்சனங்களைப் பற்றிச்சிந்தித்துப் பாருங்கள். அவை நேர்மையாக இருக்கின்றனவா...? மிக மோசமான நிகழ்ச்சிக்குக் கூட நல்ல விமர்சனத்தை பத்திரிகையில் 'வரவழைக்க' முடியுது இந்தக் காலத்தில்... சீர்திருத்தத்தை எந்த முனையிலிருந்து எப்படி ஆரம்பிக்கறது...? யார் ஆரம்பிப்பது...? என் காலத்தில் அது தொடங்கும்னு நம்பிக்கை எனக்கில்லை."

"சரி, சற்று மகிழ்ச்சியான விஷயத்துக்கு வருவோம். இந்த ஐம்பது ஆண்டுகளில் நீங்கள் மிகவும் பெருமிதம் அடைந்த நேரம் எது...?"

"1966ஆம் வருஷம் உஜ்ஜயினில் காளிதாஸர் ஃபெஸ்டிவல். ரொம்ப கஷ்டப்பட்டுத் தயார் செய்து சாகுந்தலத்தை அரங்கேற்றினோம்– தமிழில்... நிகழ்ச்சி நடத்தியவர்கள் தாங்கள் சமஸ்கிருத நாட்டிய நாடகம்தான் எதிர்பார்த்ததாகச் சொல்லி இடையிலேயே நிறுத்தச் செய்துட்டாங்க. ஆனால், கடைசி நாளன்று எங்கள் தயாரிப்பைத் தனியா வழங்க ஏற்பாடு செய்தாங்க. எல்லாம் முடிந்த பிறகு பார்த்தால், ஸ்வர்ண கலசம் விருது எங்கள் குழுவுக்குத்தான்! எதிர்பாராத கௌரவம் இது! இப்போ எனக்குப் பாராட்டு விழா எடுத்தபோது கூட அரங்க மேடையின் பின்னணியில் அந்த விருதை வைத்துத்தான் அலங்காரங்கள் செய்ய ஏற்பாடு பண்ணினாள் என் மாணவி லாவண்யா. கோவையைச் சேர்ந்தவள் அவள். அவளைப் போன்ற சிரத்தையும் பக்தியும் கொண்ட பல மாணவிகள் இருக்கிறார்கள்– அதில் நான் மனம் நிறைவு கொள்கிறேன்."

— ஸ்ருதி கீர்த்தி




# இந்த 4-இன்-1 வரி சேமிப்புத் திட்டம் எங்களுக்கு மிகவும் உகந்தது. உங்களுக்கு ?

ஆம்! யூலிப் வழங்கும் ஆதாயங்களில் வரி சேமிப்பு ஒன்றாகும். நீங்கள் பெறுவதனைத் தையும் சற்று நோக்குங்கள்.

முதன் முதலாக, வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு 88 ன் கீழ் நீங்கள் வரிச் சேமிப்பைப் பெறுகிறீர்கள். நீங்கள் மனைவி / கணவன் பெயரில் மற்றும் 12 வயதிற்கு மேற்பட்ட குழந்தைகளின் பெயரில் செய்த முதலீட்டின் மேலும் வரி தள்ளுபடியைப் பெறலாம்.

இதிலிருந்து பெறப்படும் ஆதாயங்களும் மிக சிலாக்கியமானவை. யூலிப் கடந்த 6 ஆண்டுகளாக ஒரு சீரான டிவிடெண்டான 16.5% ஐ வழங்கி வருகிறது. 10/15 வருடத் திட்டக் காலவரையை பூர்த்தி செய்தால் ஒரு 5% / 7.5% முதிர்வுறும் போனஸும் உங்களுக்கு.

இதற்கெல்லாம் மேலாக, ரூ. 75,000 வரையிலான ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் காப்பீடு அதுவும் ஒரு வித மருத்துவ சோதனையும் இல்லாமல்! மற்றும் ரூ. 30,000 வரையிலான ஒரு தனிப்பட்ட விபத்து காப்பீடும்!

அண்மையில் இலக்குத் தொகை அதிகரிக்கப் பட்டுள்ளதால், நீங்கள் ரூ.6,000த்திலிருந்து ரூ.75,000 வரை இரண்டு காலவரைகளுக்காக — 10 ஆண்டுகள் அல்லது 15 ஆண்டுகள் — முதலீடு செய்யலாம். நீங்கள் செலுத்த வேண்டிய இலக்குத் தொகையை நிர்ணயித்த பின், நீங்கள் இலக்குத் தொகையின் 1/10 பாகத்தை அல்லது 1/15 பாகத்தை ஒவ்வொரு வருடமும் செலுத்தலாம்.

ஆகையால், 17 லட்சம் முதலீட்டாளர்கள் இன்று யூலிப் அனுகூலத்தை அனுபவிக்கின்றனர் என்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?

இன்றே உங்கள் யூடிஐ முகவரை அணுகவும் மற்றும் வெறும் சேமிப்பை விட மேலானதைப் பெறுங்கள்.

- வரி சேமிப்பு
- கவர்ச்சிகரமான ஆதாயங்கள்
- ஆயுள் இன்ஷ்யூரன்ஸ்
- விபத்து காப்பீடு



## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

உங்கள் மேலான எதிர்காலத்திற்கு

சில அம்சங்கள் : எல்லா மியூச்சுவல் ஃபண்டுகள் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யும் முதலீடுகள் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவையாகும். மற்றும் செக்யூரிட்டிகள் மார்க்கெட்டைப் பாதிக்கும் அம்சங்கள் மற்றும் சக்திகளைப் பொறுத்து திட்டங்களின் NAV ஏறியும்/இறங்கியும் செய்யும். கடந்தகால சாதனை வருங்கால முடிவுகளைச் சுட்டிக்காட்டுவதாகாது. யூலிப் திட்டத்தின் பெயர் மட்டுமே தவிர, இது எவ்விதத்திலும் திட்டத்தின் தரத்தை, அதன் வருங்கால வளர்ச்சியை அல்லது வருமானத்தை சுட்டிக்காட்டுவதாகாது. திட்டத்தின் குறிக்கோள்கள் நிறைவேற்றப்படும் என்பதற்கு உறுதியளிக்க முடியாது. முதலீடு செய்யுமுன் ஆஃபர் பத்திரத்தைப் படிக்கவும்.

மண்டல அலுவலகம் : 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன் : 517101.
கிளை அலுவலகங்கள் : • கோயம்புத்தூர் போன் : 214973 • சென்னை போன் : 517101, 517190
• மதுரை போன் : 38186 • திருச்சி போன் : 760060

184/98 C TAM B



# 12

ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு துறையில் ஆர்வம். ஈடுபாட்டின் காரணமாக சார்ந்த துறையில் முழுமையாய்த் தங்களை ஈடுபடுத்திக் கொண்டவர்களைச் சிவராம் சந்தித்து இருக்கிறான்.

வேதாசலம் - அவன் அப்பா - கட்டடக் கலைக்கு வந்ததே வாழ்வின் பிற்பகுதியில்தான். குமாஸ்தாவாக வேலைக்குப் போனவர் திடீரென உதறிவிட்டு இதில் இறங்கினார்.

புரபசரின் ஆர்வம் எல்லாம் சோதிடத்தின் ஒரு பிரிவில் லயித்துப் போனது.

மற்றவர்கள் தளர்ச்சியுற்ற நேரத்தில் தன்னம்பிக்கை 'டானிக்'காய் எடுத்துக் கொண்ட விஷயத்தை, இவர் வெறியாகவே எடுத்துக் கொண்டார்.

'நீ ரொம்ப பெரிய ஆளா வருவே. அதற்கான அமைப்பு இருக்கு... ஆனாக் கூடவே ஒரு தடங்கல்... உன்னோட முயற்சி

## ரிஷபன்

களுக்குப் பக்கபலமா இன்னொரு நபரும்... குறிப்பா அது உன் மனைவியா இருக்கணும். அப்படி அமைஞ்சிதுன்னா... உன்னை அடிச்சுக்க ஆளே இல்லே.'

யாரோ போகிற போக்கில் - புரபசரின் இளமைப் பருவத்தில் - விசிறிவிட்டுப் போன வார்த்தைகள்.

புரபசருக்கு மனத்தில் ஆணியடிக்கப் பட்டுவிட்டது. மனப்பூர்வமாய் அதை நம்பி விட்டார்.

தற்செயலாய் இன்னொரு சம்பவமும் நிகழ்ந்தது, புரபசரின் முன்னிலையில்.

ஒரு பெண்ணின் ஜாதகம் பரிசீலிக்கப் பட்டு சொல்லப்பட்டது.

'சுத்தமான ஜாதகம். ஒரு தோஷங்கூட இல்லை. இவளோட கிரக அமைப்பால கட்டிக்கப் போறவன் ஓஹோன்னு இருப்பான்... சராசரி ஆளைக் கூட சாம்ராஜ்யம் கட்டி ஆள வச்சிரும்.'

புரபசர் அந்த வினாடியில்தான் தீர்மானித்தார். இவள்தான். இவளேதான் தனக்கு மனைவியாக வரவேண்டியவள்.

சரியான நேரத்திற்காகக் காத்திருந்தார். படிப்பு, வேலை என்று வேறு கவனங்களில் இருந்தபோதும் மனசுக்குள் அடிநாதமாய்... கல்யாண ஆசை.

நேரம் வந்தது. புரபசரின் முயற்சிக்குத் தான் பலன் இல்லை.

தன் வீட்டார் மூலம் விசாரிக்கச் சொன்னதில் உடனடி பதில் கிடைக்கவில்லை.

தளராமல் பெண்ணையே தனிமையில் சந்தித்து விட்டார்.

'உன்னைக் கல்யாணம் செஞ்சுக்க ஆசை. உன் விருப்பம் தெரியணும்.'

அவள் நாசூக்காய் சொல்லி விட்டாள்.

'எங்க வீட்டுல என்ன முடிவு எடுக்கிறாங்களோ... அதான்.'

'ஏன் உனக்குன்னு எதுவும் எதிர்பார்ப்பு இல்லையா.'

'எங்க வீட்டுல எனக்கு எப்பவும் நன்மையைத்தான் செய்வாங்க.'

இரண்டு மூன்று முறை முயன்று அவளைத் தன் வசம் இழுக்க முயன்றார்.

இவரது அதிரடி நடவடிக்கைகளில் அருவருப்படைந்தவள், ஒரு நாள் பளிச்சென்று சொல்லி விட்டாள்.

'இந்தா பாருங்க. பழகினதுக்காக பொறுத்துகிட்டேன். இனிமேல இந்த மாதிரி வந்து பேசினா... அப்புறம் எங்கப்பா கிட்டேதான் நான் சொல்லணும்.'

புரபசருக்கு உள்ளூர ஆட்டங் கண்டு போனது. பெண்ணின் தகப்பன் மகா முரடர்.

உள்ளுக்குள் கனவு கண்டு, எந்தத் தடங்கலும் இருக்காது என்று நம்பிய விஷயம் இப்படிச் சிதைந்து போனதும், வேலை பார்த்த இடத்தில் நிகழ்ந்த ஒரு தவறில் வார்னிங் மெமோ கிடைத்ததும்... புரபசருக்கு இன்னும் தீவிரமாய் விதியில் நம்பிக்கை வந்து விட்டது.

ஒரு முறை தற்கொலைக்கே முயற்சி செய்து விட்டார்.

மகனை இப்படி விட்டு வைப்பது தவறு என்று வீட்டார் வேறு முயற்சிகள் செய்ய ஆரம்பிக்க, புரபசரின் நிலை சங்கடத்திற்குள்ளானது.

எதையும் வெளிப்படப் பேச முடியாத தத்தளிப்பு. தான் நம்புகிற விஷயத்தை வெளிப்படுத்தினால் கேலி வரும் என்ற தயக்கம்.

இந்தப் போராட்டங்களின் இடையில் இவர் எதிர்பார்த்த பெண்ணுக்குத் திருமணம் நிச்சயமானது.

சந்தோஷமாய் கைப்பிடித்தவனோடு கிளம்பிப் போனவளைப் பார்த்து எரிச்சலும் பொறாமையும் விஷ விதையாக ஊன்றிக் கொண்டது அப்போதுதான்.

வெளியே பாதிப்பு தெரியாதபடி நடித்துக் கொண்டு, பின்னால் பழி வாங்கும் வாய்ப்பிற்குக் காத்திருந்தார்.

புரபசரின் கோபத்திற்கு ஆளானவள் தனலட்சுமி. வேதாசலத்தின் மனைவி. சிவராமின் அம்மா.

தகவல் கிடைத்து, சிவராம் ஹாஸ்பிடலுக்குள் போனபோது புரபசர் ஐசியில் அனுமதிக்கப்பட்டிருந்தார்.

"எதனால சடார்னு திரும்பினாரோ... பாவம்... லாரி நல்ல ஃபாஸ்ட்டா வந்திருக்கு. கார் அப்படியே நொறுங்கிப் போச்சு."

சிவராம் படபடப்பாய் விசாரித்தான்.

"இப்ப எப்படி இருக்கார்?"

"ஸாரி... எதுவும் சொல்வதற்கில்லை. வீ டு அவர் பெஸ்ட்."

"நினைவிருக்கா."

"ப்ச். ஸெடேட்டிவ்ல இருக்கார். உங்க கூடப் பேசணும்னு சொன்னார்.. டிரிப்ஸ் ஏறிகிட்டிருக்கு. பார்க்கலாம்."

வெளியில் காத்திருந்தான்.

ஸ்வேதா, அவள் அப்பா, வேதாசலம், தெரிந்தவர்கள் என சிறு கூட்டமே கூடி விட்டது.

'பாவம்... ரொம்ப நல்ல மனுஷர். இப்படி ஆயிருச்சே.'

சிவராமுக்கு இந்த விமர்சனங்களைக் கேட்கும் நிதானம் இல்லை. புரபசர்தான் தனத்தின் அப்பா என்றால், அவர் எத்தனை மோசமானவராக இருந்தாலும் சரி, பிழைத்து விட வேண்டும்.

நர்ஸ் வெளியில் வந்தாள்.

"ஏ ஒன் பாஸிட்டிவ்... யாராவது இருக்கீங்களா?"

சிவராமின் குரூப்தான்.

"இதோ... நான் இருக்கிறேன்."

புரபசர்... நீங்கள் பிழைத்து விடுவீர்கள். பிழைக்கத்தான் வேண்டும்.

"நீ வீட்டுக்குப் போய்... ஏதாவது சாப்பிட்டுவிட்டு வாயேன் ஸ்வேதா..." என்றான் இரத்தம் கொடுத்துவிட்டு வந்ததும்.

"வேண்டாம்."

சிவராமைக் கவலையுடன் பார்த்தான்.

"உங்களுக்கு ஒன்றும் இல்லையே."

"இன்னும் எவ்வளவு பாட்டில் வேண்டும்?" என்று கை உயர்த்திக் காட்டினான்.

"இந்த வாரம் உங்கள் வீட்டுக்கு வருகிறதாய் இருந்தோம். இப்படியாகி விட்டதே."

ஸ்வேதாவின் அப்பா அருகில் வந்தார். வேதாசலமும்.

"எதுவும் நேராது. கவலைப் படாதீர்கள்..." என்றார் தைரியம் கொடுக்கிற விதமாய்.

இரவில் சிவராமும் ஸ்வேதாவின் அப்பாவும் மட்டும் தங்கினர். தனமும் ஸ்வேதாவுடன் இருப்பதாகச் சொல்லி விட்டாள்.

விடியற்காலை நான்கு மணிக்கு புரபசரின் நினைவு திரும்பியது.

நர்ஸ் டாக்டருக்குச் சொல்ல, சிவராமும் ஸ்வேதாவின் அப்பாவும் உள்ளே அழைக்கப் பட்டனர்.

"அவர் உங்களோடு பேச வேண்டுமாம். சிரமப்படுத்தி விடாதீர்கள்..."

டாக்டர் எச்சரித்தார்.

சிவராம் அருகில் வந்து நின்றான்.

"புரபசர்...."

புரபசரின் முகத்தில் பழைய புன்னகை மிக மெலிதாய் மின்னியது.

"என் கணக்கு... பொய்க்கவில்லை."

"என்ன சொல்கிறீர்கள்."

"என் மீது மோதிய லாரி... ரெஜிஸ்ட்ரேஷன் நம்பர் என்ன தெரியுமா... கூட்டுத் தொகை எட்டு. நினைவு தப்புமுன் பார்த்து விட்டேன்."

குரல் பிசிறியது. மூச்சுத் திணறிக் கொண்டிருந்தது.

"இருக்கட்டும் புரபசர். உங்களுக்கு எதுவும் இல்லை."

"ப்ச்... எனக்கு எது நேர்ந்தால் என்ன. நான் நம்பிய சாஸ்திரம் வீணாகவில்லை."

"சரி.. இப்போது நீங்கள்... குணமாகி..."

"சிவா. உன்னிடம் சில விஷயங்கள் பேச வேண்டும். மரணத்தின் வாசலை எட்டும் போதுதான் மனிதனுக்கு அகம்பாவம் அடங்கிப் போகிறது. முழு உண்மையையும் வெளிப்படுத்தத் தயங்குவதில்லை."

சிவராம் கவலையுடன் அவரைப் பார்த்தான். ஏன் இப்படிப் படபடப்பாகிறார்?



"இரு.. போகாதே. இந்த வினாடியைத் தவற விட எனக்கு விருப்பமில்லை."

ஸ்வேதாவின் அப்பா டாக்டரின் பின்னே போனவர் இன்னமும் திரும்ப வில்லை.

"உன் அம்மா... என்னை நிராகரித்த போது... அத்தனை எளிதாய் எடுத்துக் கொள்ள முடியவில்லை."

"புரபசர், பழைய நிகழ்ச்சிகள் இப்போது ஏன்? எங்களுக்கு இப்போது நீங்கள் வேண்டும். தனத்திற்கும் அப்பா வேண்டும். ப்ளீஸ்.... அமைதியாய் இருங்கள்."

புரபசரின் முகம் மீண்டும் கேலிச் சிப்பால் மின்னியது.

"முட்டாள். தனம் என் பெண்ணில்லை."

"எ..ன்ன...?"



"வேலு உன்னிடம் சொன்னது... முழு வதும் உண்மையில்லை. நான் சொல்லிக் கொடுத்ததை விசுவாசமாய் ஒப்பித்தான். குடிக்கப் பணம் கொடுத்த ஒரே விசுவாசத் திற்காக."

"அப்படியானால்..."

சிவராம் அவரையே வெறித்தான்.

"உன் அப்பாவிடம் வேலை செய்த ஆட் களில் ஒருவனுடைய மனைவிதான் அவள். மனைவி என்ன... வைத்துக் கொண்டிருந் தான். அவள் துரதிர்ஷ்டம். ஃப்ளாட்டில்... வேலை நடக்கும் போது வந்து செத்துப் போனது. ஏழைகளுக்குப் பசியே நோய்... வேலுவையும் அதனால்தானே விலைக்கு வாங்க முடிந்தது என்னால்..."

சிவராம் திகைப்புடன் பார்த்தான்.

"அவன் இயற்கையாய் செத்துப் போன தைத் திசை திருப்பிவிடப் பார்த்தேன். ஊஹூம். பலன் இல்லை. உன் அம்மாவை நேரில் பார்த்து உன் அப்பாவைப் பற்றிக் கதையளந்தேன். வேலுவை விட்டும் நாடக மாடச் செய்தேன். அதில் எனக்கு வெற்றி தான். கடைசி வரை உன் அம்மா... உன் அப்பா மீது சந்தேகப்பட்டே செத்துப் போனாள்."

புரபசரின் முகம் விகாரப்பட்டது.

"ப்ச்... இன்று யோசிக்கும்போது இவை யெல்லாம் ஏன் செய்தேன் என்றுதான் சங்கடப்படுகிறேன்."

புரபசரின் முகம் வேதனையில் ஆழ்ந்தது.

சிவராமின் முகம் இறுகியது.

"உங்களை மன்னிக்க மாட்டேன். புரபசர்."

"நான் உன்னிடம் மன்னிப்பு கேட்கப் போவதில்லை.... சிவராம்." என்றார் அவர் மனத்தைப் படித்தவர் போல.

"என்வரை... உன் அம்மா எனக்கு மனைவியாய் அமைந்திருந்தால் ஜொலித் திருப்பேன். போகட்டும். அடுத்தப் பிறவியில் எட்டி விட மாட்டேனா..."

டாக்டரும் ஸ்வேதாவின் அப்பாவும் உள்ளே வந்தனர்.

"ப்ளீஸ்.. அவரை ஓய்வெடுக்க விடுங்கள்."

தனத்தின் அப்பா என்ன ஆனான் என்று கேட்கத் திரும்பினான்.

புரபசரின் முகத்தில் சுருக்கங்கள். உடல் திடீரென அதிர ஆரம்பித்தது.

"டாக்டர்."

ஸ்வேதாவின் அப்பா அலறினார்.

"**ம்**... அப்புறம்?"

ஸ்வேதா தனத்தைத் தன் கைப்பிடிக்குள் வைத்திருந்தாள்.

"இனிமேல் நான் யாரோ. என்னை யார் வைத்துக் கொள்வார்கள்?"

விசும்பினாள் தனம்.

"என்ன சொல்கிறாள்?"

சிவராம் வேகமாய் உள்ளே வந்தான்.

"அவளுக்கென்று ஒருவரும் இல்லை யாம்."

"தனம்."

அருகில் வந்து முகத்தைக் கைகளில் ஏந்தினான்.

"நாங்கள் இருக்கிறோம்... புரிகிறதா..." என்றான் அழுத்தமாய்.

மூவரின் கைகளும் இணைந்து கொண்டன.

(முற்றும்)

# வாழப்பாடி 'கோபப்பாடி' ஆனது ஏன்?

● அ.இ.அ.தி.மு.கவில் மனம் திருந்தி இணைந்த இரு மாண்புமிகுகளுக்கு சமீபத்தில் போயஸ் தோட்டத்தில் கடுமையான அர்ச்சனை! அவர்கள் செய்த குற்றம்? "அம்மா அவர்களுக்குப் பொறுப்புகள் தர இருக்கிறார்" என்று அடிக்கடி குறிப்பிட்ட இரண்டு பத்திரிகைகளில் செய்தி வர வழைத்து அம்மாவுக்கு எரிச்சல் உண்டாக்கியதுதான். "உங்களுக்கு எப்போது பொறுப்புகள் தருவது என்று எனக்குத் தெரியும்! நீங்கள் செய்யும் கட்சிப் பணிகளைப் பொறுத்தே பலன் பெற முடியும்" என்று விட்டாராம் டோஸ்.

"அம்மா திட்டி விட்டார்கள் அல்லவா? இனி பொறுப்பு கொடுப்பது நிச்சயம்" என்று உவகையுடன் சொல்லி உலா வருகிறார்களாம் அந்த 'மாண்புமிகுகள்.

● பா.ம.கவில் பூசல் துவங்கி விட்டது. டாக்டருக்கு பிரஷர் ஏறிக் கொண்டிருக்கிறது. முக்கியமான காரணம் துவக்கத்திலேயே வன்னிய இனப் பிரதிநிதி அமைச்சரவையில் இடம்பெறும் வாய்ப்பை இழந்தது. அடுத்தது, பல ஆண்டுகளுக்கு முன்னர் நடந்த போராட்டத்தில் உயிர் இழந்த பா.ம.க. தோழர்களின் குடும்பங்களுக்கு, "ஆயிரம் இருந்தும், வசதிகள் இருந்தும்" ஒரு உதவியும் செய்யாமலிருப்பது. மூன்றாவதாக அ.தி.மு.க. பிரமுகர்களைத் தோற்கடிக்கும் விதமாக போயஸ் தோட்டத்தை நோக்கிக் கும்பிடு போடுவது.

"அடுத்த முறை எப்போது தேர்தல் வந்தாலும், பா.ஜ.க. அணியில் நாங்கள் இருந்தால் படுதோல்வி நிச்சயம்! ம.தி.மு.க. விலகியிருக்கிற நிலையில், அ.தி.மு.க.வுடன் நாங்கள் கூட்டணி அமைத்தாலும், வோட்டுக்களைப் பிரித்து, தி.மு.க. வெற்றி பெற வாய்ப்பு அளித்ததாகத்தான் முடியும்" என்று தமது தீர்க்கதரிசனத்தைச் சொன்னார் ஒரு பா.ம.க. பிரமுகர். டாக்டரின் ரத்தத்தின் ரத்தங்களான சிலர், மத்திய அரசில் பா.ம.கவின் செல்வாக்கைப் பயன்படுத்திக் காரியங்கள் சாதித்து வருவது பற்றியும் பா.ம.க.வில் முணுமுணுக்கப்படுகிறது.

● "ஒரு நபர் கட்சி" என்று ராஜீவ் காங்கிரஸை ஜெயலலிதா விமர்சித்ததற்கு எதிரொலியாக அம்மாவை ஒரு பிடிபிடித்தார் அல்லவா வாழப்பாடி? இதற்கு மற்றொரு காரணமும் இருக்கிறதாம். சமீபத்தில் அம்மா பிரதமருக்கு மிகவும் ஸ்ட்ராங்கான கடிதம் ஒன்று எழுதியிருக்கிறாராம். வாழப்பாடியார் பெட்ரோலியத் துறை அமைச்சரானதிலிருந்து சில குறிப்பிட்ட நபர்களுக்கு அவர் கொடுத்த சலுகைகள், பெட்ரோல் பங்க், கேஸ் ஏஜென்ஸி விவகாரம் எல்லாம் அதில் அடங்கியிருக்கிறதாம்.

இந்தக் கடித விவகாரம்தான் அவரது ஆத்திரத்தைக் கிளப்பியதாம். வாழப்பாடியாரின் மோதல் போக்கை ராஜீவ் காங்கிரஸ் பிரமுகர்கள் கொஞ்சம் சங்கடத்துடன்தான் நியாயப்படுத்துகிறார்கள்.

"அ.தி.மு.க. கூட்டணியில் தொடர்ந்தால், சட்டமன்றத் தேர்தலின்போது நான்கு இடங்களைக் கேட்டுப் பெறலாம். எங்கள் கட்சி ஆட்களுக்கும் எதாவது பதவி கிடைக்கும்; ஆனால் இப்போது அதற்கான வாய்ப்புகள் குறைந்து வருகிறது" என்றார் 'ஒரு மாவட்டப் பிரமுகர். இருந்தாலும் தேர்தல் சமயத்தில் வெற்றி பெறும் காம்பினேஷனில் இடம்பெறும் சாணக்கியம் தலைவருக்கு உண்டு" என்றார் அவர். ஜெயலலிதாவை ஒரு காலகட்டத்தில் கடுமையாக விமர்சித்தாலும், சரியான சமயத்தில் கூட்டு சேர்ந்ததை எடுத்துக்காட்டினார் அவர்.

— **சஞ்சயன்**

படம்: **சௌந்தர்ராஜன்**



# ராகவ் சில்க்ஸ் பேலஸ் & கிரிஸ்டல்ஸ்

113-B, செல்லமால், 11, சர் தியாகராய சாலை, பாண்டி பஜார்,
சென்னை - 600 017.தொலைபேசி - 435 58 56

## ராகவ் ஸ்ரீ திட்டம் சேமிப்பு ஆதாயத் திட்டம்

**திட்டத்தின் விபரங்கள்:** *இத்திட்டத்தில் 1-3-99 தேதியிலிருந்து கலந்து கொள்பவர்கள் மட்டும் திட்டத்தின் இறுதியில் ஊக்கத் தொகை பெற தகுதியுடையவர்களாவர்.*

| பிரிவு | மாதம் செலுத்துவது | மொத்த மாதம் | செலுத்திய தொகை | ஊக்கத் தொகை | இறுதியாக பெறும் தொகை |
|---|---|---|---|---|---|
| A. | ரூ. 1,000/- | 15 | 15,000/- | 1,500/- | 16,500/- |
| B. | ரூ. 500/- | 15 | 7,500/- | 750/- | 8,250/- |
| C. | ரூ. 200/- | 12 | 2,400/- | 200/- | 2,600/- |
| D. | ரூ. 100/- | 12 | 1,200/- | 100/- | 1,300/- |

## ராகவ் சுப ஸ்ரீ திட்டம் அதிஷ்டக் குலுக்கல்

| பிரிவு | திட்ட விபரம் | மொத்தத் தொகை |
|---|---|---|
| A. | ரூ. 100/- (20 மாதங்கள்) | ரூ. 2,000/- |
| B. | ரூ. 200/- (20 மாதங்கள்) | ரூ. 4,000/- |
| C. | ரூ. 500/- (20 மாதங்கள்) | ரூ. 10,000/- |
| D. | ரூ. 1000/- (20 மாதங்கள்) | ரூ. 20,000/- |

★ குலுக்கலில் பரிசு விழுந்த அதிர்ஷ்டசாலிகள் அதற்கு மேல் தவணை தொகையை கட்ட வேண்டியதில்லை

★ 10-3-99 க்குள் இதில் சேரும் நபர்களுக்கு சிறப்பு பரிசு அளிக்கப்படும்.

★ இத்திட்டத்தில் சேரும் அனைத்து உறுப்பினர்களுக்கும்வாங்கும் பொருட்களுக்கு சிறப்பு தள்ளுபடி வழங்கப்படும்.

**PAY Rs. 100/- and get Rs. 2,000/- Worth articles**

**1st Draw on 15-3-99**

**PAY Rs. 1,000/- and get Rs. 20,000/- Worth articles**

EXCLUSIVE SILK SAREES, FANCY SAREES, COTTON SAREES, SALWAR SUITS, LACHAS, CHURIDHARS, READYMADE DRESSES, BLOUSE AND DRESS MATERIALS & KRYSTAL, PORCELIEN SHOW PIECES AND CROKERIE ARTICLES

**★ இந்த விளம்பரத்தை எங்களிடம் நேரில் கொண்டுவந்து தருபவருக்கு சிறப்பு பரிசு அளிக்கப்படும்.**

---

### உறுப்பினர் கூப்பன்

பெயர் ______________________

முகவரி ______________________

______________________ Pincode ________

சேரும் திட்டத்தின் பெயர் ______________________

செலுத்தும் பணம் ரூ. ____________ (Cheque / D.D. / M.O.)

பதிவு தபாலில் அனுப்பவும்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



16,காமராஜ் சாலை,பழையபெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம்,சென்னை-600063.
Tel&FAX : 2376129,Cell Ph : 9841050464
E-mail: sspeetam@md3.vsnl.net.in
& sspeetam@hotmail.com

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 50 மாணவர்களும் 20 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவ்வகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி ( 70 பேருக்கு ) | ரூ. | 500/- |
| மதிய உணவு ( இனிப்புடன் ) | ரூ. | 1,000/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 750/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 300/- |
| ஒரு மாணவனுக்கு ஓரண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு ( உணவு, உடை, கல்வி ) | ரூ. | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 60,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/DD/ MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு

இறைவன் தொண்டில்
சுவாமி சர்வாத்மானந்தர்.






1999 மார்ச் 7
வெகுதான்ய மாசி 23
மலர் : 57
இதழ் : 32

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# சரித்திரம் படைத்த பிரதமர்!

சரித்திரம் படைத்திருக்கிறார் பிரதமர். டெல்லி - லாஹுர் பஸ் பயண துவக்க தினத்தன்று இந்தோ-பாக் உறவுகள் பலப்பட, பாலமாக இயங்கியிருக்கிறார். அமிர்தஸரஸில் பஸ் ஏறி, லாஹுரில் இறங்கிய வாஜ்பாயைக் காத்திருந்து கைகுலுக்கி வரவேற்றிருக்கிறார் பாக். பிரதமர் நவாஸ் ஷெரீஃப். 'இந்தோ - பாகிஸ்தான் உறவில் இது ஓர் புதிய திருப்பம்; ஒரு அமைதி சகாப்தத்தின் துவக்கம்' என்றெல்லாம் இந்த நிகழ்ச்சி வர்ணிக்கப்பட்டிருக்கிறது. உலகமே வரவேற்றிருக்கிற நல்லுறவு முயற்சி இது. பிரதமரை வாழ்த்துவோம்.

போட்டி போட்டுக் கொண்டு அணு ஆயுதப் பரிசோதனை நிகழ்த்திக் காட்டிய இரு நாடுகளும் இதர உலக நாடுகளின் அதிருப்தியைப் பெரிதாகச் சம்பாதித்துள்ளன. அந்த அதிருப்தியைக் குறைக்க இந்த பஸ் பயணமும் பாகிஸ்தான் அளித்த வரவேற்பும் நிச்சயமாக உதவும். அணு ஆயுதப் பரிசோதனைகள் குறித்து மறுசிந்தனை செய்வோம், தடை ஒப்பந்தங்களில் கையெழுத்திடு வது குறித்து விவாதிப்போம் என்றெல்லாம் அறிவித்து போக்ரனுக்குப் பிந்தைய அபகீர்த்தியைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டிருக்கிறது பி.ஜே.பி. அரசு.

அதே சமயத்தில், இந்தியாவில் ஏக மனதாக வரவேற்புப் பெற்ற இச்சம்பவம், பாகிஸ்தானில் அவ்வாறு வரவேற்கப்படவில்லை என்பதை நாம் மறக்கலாகாது. முஸ்லிம் அமைப்புகள் சில, இந்த நல்லுறவு முயற்சியை எதிர்த்துள்ளதோடு, சம்பவ தினத்தன்று கல்லெறிந்தும் கறுப்புக் கொடி காட்டியும் அதிருப்தி தெரிவித்திருக்கின்றன. அதே சமயத்தில் காஷ்மீரில் சில படுகொலைகளும் நடந்துள்ளன.

நல்லுறவின் உருவகமான இந்த பஸ் பயணம் நிரந்தரமான அமைதியை உத்தரவாதம் செய்யாது




என்பதற்கு இந்தச் சலசலப்புகள் ஓர் அறிகுறி.

இரு நாடுகளுக்கிடையே தொழில்-வர்த்தகப் பரிமாற்றங்கள் மேம்படலாம். எல்லைகளைக் கடப்பதும் சுற்றுலாப் போக்குவரத்தும் சுலபமாக்கப்படலாம்... ஆனால், காஷ்மீர் பிரச்னைக்கு ஒரு முடிவான தீர்வு அமைகிற வரையில் இந்தியா - பாகிஸ்தான் நல்லுறவுகள் முழுமையடைய வழியில்லை.

இதைச் சுட்டிக்காட்டினால், 'காஷ்மீர் பிரச்னைக்குத் தான் காரணமல்ல' என்று பாகிஸ்தான் அரசாங்கம் உடனே மறுக்கும். காஷ்மீரில் கைவரிசை காட்டும் தீவிரவாதிகள் ஐந்தாம் படையினர் அல்ல என்று அறிக்கை வெளிவரும். சந்தர்ப்ப சாட்சியங்களை எடுத்துரைத்தாலும் அவற்றை ஏற்காது ஒதுக்கிவிடும்.

காஷ்மீர் குறித்த இரு தரப்புப் பேச்சு வார்த்தைகளுக்குத் திட்டமிடப்பட்டு, அவை நடைபெறலாம். ஆனால், எத்தனைதான் பேசிப் பேசிப் பார்த்தாலும், இரு நாட்டுத் தலைவர்களோ, அவர்களுடைய பிரதிநிதிகளோ காஷ்மீர் - வாழ் மக்களின் தலைவிதியை அவர்களுடைய ஒப்புதலின்றி நிர்ணயிக்க முடியாது. பேச்சு வார்த்தையில் அவர்களையும் சம்பந்தப்படுத்தி அவர்கள் கருத்தையும் அறியாத வரையில் தீவிரவாத ஊடுருவலுக்கு உதவும் குறுக்கு வழிப் பாதையாகவே அம்மாநிலம் விளங்கி வரும். இரு நாட்டுப் பிரதமர்களும் இதை உணர்ந்தாக வேண்டும்.

## பல்டி அடித்த சோனியா!

பல்டியடிக்கும் வித்தையில் பழம் தின்று கொட்டை போட்ட அரசியல்வாதிகளையெல்லாம் ஒன்றுமில்லாமல் செய்துவிட்டார் சோனியா காந்தி!

பீஹாரில் ரண்வீர் சேனை நிகழ்த்திய அக்கிரமங்களைக் கண்டு, 'ராப்ரி அரசுக்கு ஆட்சியில் நீடிக்க இனி தார்மிக உரிமை இல்லை!' என்று காங்கிரஸ் உடனடியாக அறிக்கை விடுத்தது.

இப்போது, பீஹாரில் ஜனாதிபதி ஆட்சி கொண்டுவரும் தீர்மானம் நாடாளுமன்றத்தில் விவாதத்துக்கு வரும் நேரத்தில், அத்தீர்மானத்தை ஆதரிக்க மறுக்கிறது காங்கிரஸ்!

'ராப்ரி அரசுக்கு ஆட்சியில் நீடிக்க உரிமை இல்லை என்று கூறியது உண்மைதான். அதனால் உடனே அரசை டிஸ்மிஸ் செய்யவேண்டும் என்று அர்த்தமில்லை. ராப்ரி, லாலு தவிர்த்து வேறு யாரேனும் முதல்வராக இருந்து பீஹார் அரசை நடத்தலாமே...' என்று இப்போது வேறு திசையில்






ஜகா வாங்குகிறது! லாலுவோ, 'எங்கள் ஆட்சி மீண்டும் வந்தால் தலைமையில் மாற்றம் ஏதும் இராது' என்று அடித்துப் பேசுகிறார்.

சில தென்னகக் கட்சிகளைப் போல 356 ஆவது பிரிவை அடியோடு எதிர்க்கும் கட்சி அல்ல காங்கிரஸ். அவசியம் நேர்ந்தால் அதனை உபயோகிக்கலாம் என்று கொள்கையளவில் ஏற்கிற கட்சிதான். அப்படியிருந்தும் பீஹாரில் குடியரசுத் தலைவர் ஆட்சியை அனுமதிக்கும் தீர்மானத்தை எதிர்க்க முடிவெடுத்திருக்கிறது - அரசியல் காரணங்களுக்காக!

மூன்றாவது அணி என்பதாக ஒன்று உண்டாகி வலுப்பெறுமேயானால், அடுத்து வரும் தேர்தலில் தனது வாய்ப்புகள் மிகவும் குறைந்துபோகும் என உணர்ந்து, அந்த மூன்றாவது அணியை உடைக்கும் முயற்சியில் இறங்கியிருக்கிறது காங்கிரஸ். இந்த நோக்கத்துடன்தான் லாலுவைச் சந்தித்துப் பேசியிருக்கிறார் சோனியா. பீஹாரில் 356 பிரயோகிக்கும் தீர்மானத்தை ஆதரிப்பதில்லை என்ற முடிவையும் அறிவித்திருக்கிறார்.

பதவிக்காக, கொண்ட கொள்கையைக் கைவிடுகிற பேடித்தனம் மீண்டும் இந்திய அரசியலில் முத்திரை பதித்திருக்கிறது! ராஜதந்திரத்துடன் செயல்பட்டிருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கும் காங்கிரஸின் தலையில் எப்படியிருந்தாலும் இடிதான் விழப் போகிறது.

லாலுபிரசாத் யாதவ், காங்கிரஸின் ஆதரவில் தப்பிப் பிழைத்த பிறகு, மூன்றாவது அணியில் சேர்ந்து இயங்கினால், சோனியா அண்ட் கோவுக்குப் படு ஏமாற்றமே ஏற்படும்.

லாலு தப்பித் தவறி காங்கிரஸுடன் கைகோக்க ஒப்புக் கொண்டாலோ, அது விபரீதமாகவே முடியும்! இத்தகைய சந்தர்ப்பவாதக் கூட்டணியின் விளைவுகளைத்தான் பி.ஜே.பி. இப்போது சந்தித்துக் கொண்டிருக்கிறது. அதே தர்மசங்கடம்தான் காங்கிரஸுக்கும் ஏற்படும். இருவிதத்திலும் சோனியா எடுத்துள்ள முடிவு சரியானதல்ல.

தேர்தல், பதவி என்றதுமே பேராசை வந்து கண்ணை மறைத்து விடுகிறது; பகுத்தறிவும் நேர்மையும் காணாமல் போகின்றன.

காங்கிரஸின் இந்த முடிவினால் ஆதாயமடையப் போவது லாலுபிரசாத் யாதவ்தான்!

ஒரு மோசமான, மோசடி அரசியல்வாதியை கைதூக்கி விட்ட 'பெருமை' மட்டுமே காங்கிரஸுக்கு மிஞ்சும். ●

# பெண்கள் தேர்ந்தெடுக்கும் பெண்'மணி'கள்!



• அனிதா ரத்னம்



• ருக்மிணி தேவி

**'உலகின் தலை சிறந்த பெண்ணாக யாரைத் தேர்ந்தெடுப்பீர்கள்? என்று சில பிரபல பெண் வி.ஐ.பி.க் களிடம் கேட்டோம். (மார்ச் 8 பெண்கள் தினம்.)**

**அனிதா ரத்னம் (நடனக் கலைஞர்) :**

ருக்மிணி தேவி அருண்டேலைத் தான் நான் சிறந்த பெண்மணியாகத் தேர்ந்தெடுப்பேன். 1920-30களில் நாட்டியத்துக்கு 'சதிராட்டம்'னு பேரு. நல்ல குடும்பப் பெண்களும், நடுத்தர வர்க்கப் பெண்களும், பரதத்தை கத்துக்கத் தயங்கின காலம். அப்போதான் ருக்மிணி தேவி தஞ்சாவூர் போய் மீனாட்சி சுந்தரம் பிள்ளைங்கற பெரிய க்லைஞரை அழைச்சுட்டு வந்து பரதநாட்டியக் கலையை அதனோட சகல நுணுக்கங்க ளோடவும் கத்துக்கிட் டாங்க. 'கலாக்ஷேத்ரா' ஆரம்பிச்சாங்க. அந்தக் காலத்திலேயே தைரியமா ஒரு ஐரோப்பியரைக் கல்யாணம் பண்ணிக்கிட்டாங்க. 1920களில் பிரிட்டிஷ்காரன் நாட்டியம் ஆடக்கூடாதுன்னு சட்டமே (official law) போட்டான். 'பரதம் ஒரு சிறந்த கலை, அதை யாரு கேவலமா பேசறது? அதை ஆட வேணாம்னு சொல்றதுக்கு பிரிட்டிஷ்காரன் யாரு?'ன்னு ரொம்ப வருத்தப்பட்டாங்க. அவங்க கத்துக்கிட்டதை, 'கலாக்ஷேத்ரா'வுல சேர்ந்த அத்தனை பேருக்கும் சொல்லிக் கொடுத்தாங்க. அவங்க காலத்துலதான்



• மீனா



• இந்திரா காந்தி

ஆண்களுக்குக் கூட பரதநாட்டியத்துல ஈடுபாடு வந்தது. சி.வி. சந்திரசேகர், தனஞ்செயன் போன்ற பிரபலமான கலைஞர்கள் எல்லாருமே 'கலாக்ஷேத்ரா' ஸ்டூடண்ட்ஸ்தான். 'கலாக்ஷேத்ரா' இப்போ உலகமெல்லாம் பிரபலமாயிருக்கு. அதுக்குக் காரணம் ருக்மிணி தேவி அருண்டேல்ங்கற ஒரு பெண்மணி.



• நித்யஸ்ரீ



• பட்டம்மாள்

**மீனா (நடிகை) :**

**ந**ம்ம சமகாலத்துல வாழ்ந்த சிறந்த பெண்மணின்னா அது அன்னை தெரஸாதான். அதுக்குக் காரணம், அவங்களோட கருணை உள்ளம். எல்லாருக்கும் கருணை இருக்குன்னாலும், அவங்ககிட்ட கொஞ்சம் ஜாஸ்தியா இருந்தது. அவங்களுக்கு அடுத்தபடியா இந்திரா காந்தியைத் தேர்ந்தெடுப்பேன். அவங்க நாட்டுக்காகத் தன்னையே தியாகம் செஞ்சவங்க. தான், தன் குடும்பம்னு இல்லாம, தேசத்துக்காக வாழ்ந்த சிறந்த பெண் மணி.

**ராஜம் கிருஷ்ணன் (எழுத்தாளர்) :**

**வை**.மு. கோதைநாயகி என்று ஒரு எழுத்தாளர். 110 நாவல்கள் தமிழில் எழுதியிருக்கிறார். கிட்டத்தட்ட இருபத்தாறு வருஷங்கள் எழுத்துத் துறையிலும் பத்திரிகைத் துறையிலும் சேவை செய்திருக்கிறார். பெண்களுக்காக 'நந்தவனம்', 'ஜகன் மோகினி' போன்ற பத்திரிகைகளை நடத்தினார். சிறுவர்களுக்காக, 'பாலர் மோகினி' என்ற பத்திரிகையைக் கொண்டு வந்தார். அவர் பாரதி காலத்தில் வாழ்ந்தவர். சுதந்தரப் போராட்டத் தியாகி. அவர் இலக்கியத்தில் தொடாத விஷயமே இல்லை. அந்தக் காலத்தில் 'ஒரு பெண் என்ன எழுதுவது?' என்று அவருடைய 'ஜகன் மோகினி' பத்திரிகையைக் கட்டுக்கட்டாகக் கொண்டு போய் எரித்திருக்கிறார்கள்! சிறைக்குச் சென்றபோது கூட அந்த அனுபவத்தை எழுத்தில் கொண்டு வந்தவர். ஆனால், அவர் பெயர் தமிழில் இருட்டடிப்பு செய்யப்பட்டது. நூறாண்டுத் தமிழ் நாவல் வரலாற்றில் அவர் பெயர் குறிப்பிடப்படவே இல்லை. இந்தியப் பெண் எழுத்தாளர்கள் பற்றி ஒரு புத்தகம், இரண்டு வால்யூம்களாக வந்திருக்கிறது. அதிலும் அவர் பெயர் இல்லை! என் போன்றவர்களுக்கு, தமிழ்ப் பத்திரிகை எழுத்துத் துறையில்



• அன்னை தெரஸா

• நிர்மலா சுரேஷ்




• ராஜம் கிருஷ்ணன்


• வை.மு. கோதை நாயகி

அவர் ஒரு முன்னோடி எழுத்தாளர் பொன்னீலனின் தாயார் அழகிய நாயகி அம்மாள், தம்முடைய சமுதாய - குடும்ப வாழ்க்கை பற்றி 'கவலை' என்ற புத்தகத்தை எழுதியிருக்கிறார். வழக்குச் சொற்கள், பழமொழிகள், வார்த்தைப் பிரயோகம், மொழி எல்லாம் அற்புதமாக இருக்கிறது. சமூகவியல், நாட்டார் வழக்காற்றியல், (வட்டார வழக்கு) போன்ற துறைகளில், மிகவும் முக்கியமான நூலாக இந்த வரலாறு அமைந்திருக்கிறது. இத்தகைய நூலை வெறும் ஐந்தாம் வகுப்பு வரை படித்த ஒரு அம்மையாரால் எழுத முடிகிறது என்றால், இதைப் போல் எத்தனை பெண்களுக்குத் தங்களை வெளிக்காட்ட வாய்ப்பில்லாமல் இருந்திருக்கும்? அவர்களை நினைத்துப் பார்க்கிறேன்.


• திலகவதி

**திலகவதி (காவல் துறை அதிகாரி) :**

சென்னையில இருக்கற அகரத்தில் சுந்தராம்பாள்னு ஒரு பெண்மணி. அவங்களுக்கு நாப்பத்திரெண்டு வயசுல குடும்பத்துல பிரச்னை வந்து, தனியா பிரிஞ்சு போய் வெல்டிங் தொழில் பண்ண ஆரம்பிச்சாங்க. படிப்பு கிடையாது, எந்த பாலிடெக்னிக்குக்கும் போகாம, எந்தப் பின்னணியும் இல்லாம தானா முன்னுக்கு வந்தாங்க. இன்னும் சொல்லப் போனா, ஆசியாவிலேயே 'வெல்டிங்' தொழில் செய்யும் முதல் பெண் அவங்கதான். இப்போ தன்னோட குடும்பப் பெண்களுக்கும் தொழில் கத்துக் குடுத்துட்டு இருக்காங்க. அவங்களைத்தான் சிறந்த பெண்மணின்னு சொல்லணும்னு நினைக்கிறேன்.

**நிர்மலா சுரேஷ் (கவிஞர்) :**

அன்னை தெரஸாதான் இந்த நூற்றாண்டின் மிகச் சிறந்த பெண்மணி! அடுத்த நூற்றாண்டில் வேண்டுமானால், எவராவது பிறக்கலாம். அரசியல், சமுதாயம் எதற்கும், எந்த விதத்திலும் அடிமையாகாமல், நாடு, மொழி, இனம், மதம் கடந்து அவர்கள் தோற்றுவித்த தொண்டு நிறுவனம் உலகமெங்கும் வியாபித்து தன் சேவையைச் செய்து கொண்டிருக்கிறது. அன்னை தெரஸா தனி நபர் கிடையாது. அவரே ஒரு நிறுவனம்.

**நித்யஸ்ரீ மகாதேவன் (இசைக்கலைஞர்) :**

என் பாட்டி டி.கே. பட்டம்மாள்தான். அவங்க பாட ஆரம்பிச்சப்போ பதிமூணு வயசு. அந்தக் காலத்துல ஒரு பெண் மேடை ஏறிப் பாடறது புது விஷயம். கச்சேரிகளில் முதன் முதலா ராகம், தானம், பல்லவி பாடின பெண் பாடகர் அவங்கதான்! ○

— கே. பாலசுப்ரமணியன்

# அப்புறம் என்ன ஆச்சு?

**கை**த்தறி வேட்டி, பட்டுச் சட்டை - இவைதான் கவிஞர் கண்ணதாசனின் உடை. ஆனால் சில சமயங்களில் அவர் கோட்-சூட் அணிந்திருக்கிறார்.

அவருடைய வளர்ப்பு மகள் நிர்மலாவின் திருமணம் 63ம் வருடம் நடைபெற்றது. திருமண ரிசப்ஷன், உட்லண்ட்ஸ் ஓட்டலில் நடந்தது. அப்போது, கோட்டு சூட் அணிந்தார். லிங்கம் என்னும் காஸ்டியூமர் தைத்துக் கொடுத்தது அந்த கோட்டு.

ரத்தத் திலகம் படத்தில், கண்ணதாசனே திரையில் தோன்றிப் பாடும் 'ஒரு கோப்பையிலே என் குடியிருப்பு' பாடல் வெகு பிரபலம். அந்தப் பாடல் காட்சியிலும் கவிஞர் கோட்டு, சூட்டுதான் அணிந்திருப்பார்.

தி.மு.க.வில் இருந்தபோது, காங்கிரஸ்காரர்கள் அவரைக் குடிகாரர், ஸ்திரீ லோலன் என்றெல்லாம் கடுமையாக விமர்சனம் செய்தனர். பின்னர் தி.மு.க.வை விட்டு விலகி, காங்கிரசுக்கு வந்தவுடன், இதே பல்லவியை திமுகவினர் மறுபடி பாடினார்கள். இதற்கெல்லாம் பதிலளித்து, தன்நிலை விளக்கம் போல, கவியரசு கண்ணதாசன் எழுதிய பாடல்தான் 'ஒரு கோப்பையிலே என் குடியிருப்பு'. திரையிலும் தானே தோன்றி அந்தப் பாடலைப் பாடுவதுதான் பொருத்தமாக இருக்கும் என்று அவர் கருதினார். எனவேதான், மைக் முன்னே கம்பீரமாக நின்று, அந்தப் பாடலைப் பாடுவது போன்ற காட்சியைப் படத்தில் இடம் பெறச் செய்தார். அந்தக் காட்சியில் கறுப்பு நிற கோட்டு சூட்டு அணிந்திருந்ததை ரசிகர்கள் மறந்திருக்க மாட்டார்கள்.



70ம் வருடத்தில், ரஷ்யப் பயணம் மேற்கொண்டார் கவியரசர். இந்தோ - சோவியத் நட்புறவுக் கழகத்தின் துணைத் தலைவர் என்ற முறையில் அவருக்கு இந்த வாய்ப்புக் கிடைத்தது. சுமார் ஒருமாத கால சுற்றுப் பயணம் அது. ரஷ்ய சீதோஷ்ண நிலைக்கு ஏற்ப கோட்டு, சூட்டு அணிந்து செல்ல நினைத்தார் கவிஞர். இரண்டு செட் சூட்டுகள் தயாராயின.

"இது பற்றிய மறக்க முடியாத ஒரு விஷயம் உண்டு. புறப்படுவதற்கு இன்னும் இரண்டு நாட்களே இருந்தன. கோட்டு, சூட்டுக்குப் பொருத்தமாக 'ஷூ' வாங்க வேண்டும். சென்னை நகரத்தின் அத்தனை செருப்புக் கடைகளிலும் அலைந்து தேடி விட்டோம். அவருடைய கால் அளவுக்குப் பொருத்தமாக (பெரிய) சைஸ் ஷூ கிடைக்கவே இல்லை. கடைசியில் ஷூ இல்லாமல், செருப்பு அணிந்து கொண்டுதான் ரஷ்யா புறப்பட்டார். ரஷ்யப் பயணத்தின்போது, கவிஞர் அந்த இரண்டு சூட்டுகளையும் அணிந்து கொண்டார்.



• வெண்ணிற கோட்டு

"இது தவிர, நாடகங்களில் நடித்த சமயத்திலும் கூட கோட்டு, சூட்டு அணிந்து கொண்டிருக்கிறார். 'நகரத் தந்தை' என்ற நாடகம். அதிலே ஜெர்மன் பிரஜை பாத்திரம் கவிஞருக்கு. அப்போது ஒரு கோட்டு, சூட்டு தைத்துக் கொண்டார்" என்று பழைய நினைவுகளில் ஆழ்ந்து போகிறார் ராம கண்ணப்பன்.

"மற்ற கோட்டுகள் எல்லாம் இப்போது எங்கே என்று தெரியவில்லை. வளர்ப்பு மகள் நிர்மலா திருமணத்தின்போது, அவர் அணிந்து கொண்ட வெண்ணிற கோட்டு மட்டும் இன்னமும் என்னிடம் பத்திரமாக இருக்கிறது" என்கிறார் கவிஞரின் மகன் காந்தி கண்ணதாசன்.

— கௌதம்

படம் : ஸ்ரீஹரி

## கண்ணதாசனின் கோட்டு!



**மும்தாஜ் யாசீன்**

"ஆமீனா நாளைக்கு வர்றாளாம். சொல்லி விட்டிருக்கா..." என்றாள் மைமூன் பீவி

சிலீரென்று காற்று வீசியது போலிருந்தது மஜீது சாயபுவுக்கு. மேலே கவிந்திருந்த அலுப்பெல்லாம் கரைந்து போக, உள்ளே பூ வாசம் வீசியது. சந்தோஷம் அரும்பியது.

ஆமீனா அவரது மகள். "அம்மாடி..." என்ற குரலுக்கு "என்னத்தா..." என ஓடி வந்த பெண். முகக் குறிப்பை அறிந்து பணி விடை செய்தவள். எல்லாம் சரியாக இருந் தால் எப்படி இருக்க வேண்டிய உறவு இது?

ஆமீனா மீது அதித பிரியம் அவருக்கு. அவளது நிக்காஹ் ஒரு தவம் போலவே இருந்தது. எத்தனையோ இடம் வந்தும், கேட்டும் உள்ளுக்குள்ளிருந்து உத்தரவுக் குரல் எழும்பவே இல்லை. மனச் சஞ்சலத் துடன் தட்டிக் கொண்டே வந்தார். கல்தா ளைப் பார்த்ததும் படக்கென்று கதவு திறந்த மாதிரி இருந்தது. இத்தனைக்கும் சாதாரண ஓட்டல் சிப்பந்தி அவன். பேசும் போது துறுதுறுத்த கண்கள் அவனுள் ஒரு பொறி இருப்பதை அடையாளம் காட்டின. சுட ராக ஒளிர்ந்த அது, தன் ஆத்மாவுடன் பேசுவது போலிருந்தது. மைமூன் பீவி உட்பட யாருக்கும் இஷ்டம் கிடையாது. ஆனாலும் அவர் உறுதி குறையவில்லை. காரியத்தை நடத்தி வைத்தார்.

அல்லாவின் கருணைதான் இது.

இப்போது கல்தான் மிலிடரி ஓட்டல் முதலாளி. ஆமீனா மூன்று குழந்தைகளுக்கு அம்மா. பெரிய சம்சார வாழ்க்கை. சொந்த வீடு. வாகனம். வேலையாட்கள். ஆமீனாவும் புருஷனுக்குக் கைக்குக் கையாக இருந்தாள். எல்லாவற்றிலும் ஈடுகொடுத்தாள். அவள் இல்லாமல் அவனுக்கு வீட்டிலும், கடையிலும் எதுவும் முடியாது. அதனால் பிறந்த வீட்டுக்கு வருவது குறைந்து விட்டது.

பிள்ளைகள் எத்தனை வளர்ந்தால் என்ன? பிள்ளைகள்தானே...

கொஞ்ச நாள் சேர்ந்த மாதிரி பார்க்க வில்லை என்றால் வீட்டில் அவளது பேச் சாகவே இருக்கும். மௌனாவில் (கனவில்) கூட வந்து விடுவாள். காண வேண்டும் என்று தோன்றி விடும். ஐம்பது மைல் தூரம் தான். மைமூன் பீவியோ அவரோ போவார்கள்.

மஜீது சாயபு போன போதுதான் அப்படி நடந்தது.

**ம**த்தியான நேரம் அது. பஸ்ஸை விட்டு இறங்கி நடந்து போயிருந்தார். கதவு சாத்தியிருக்க, தட்டினார்.

"ஆரது?" சம்பந்தியம்மாளின் குரல் கேட்டது.

"நான்தாங்க..."

"நான்தான்னா.... பேரு கெடையாதா?" கடுகடுவென்று கேட்டுக் கொண்டே வந்தாள்.

அந்தம்மாவின் குரல் தனக்கு அடையா ளம் தெரிவதைப் போல, தனது குரல் அவ ளுக்கு ஏன் தெரிவதில்லை என யோசிப் பதற்குள் கதவு திறந்தது. "நீங்கதானா... வாங்க..."

குரல் வறட்சி யாக இருந்தது. புருவத் தூக்கலும், பேச்சுத் தோரணையும் அவரைத் தள்ளி நிறுத்தின. சம்பிரதாயமாக இரண்டொரு வார்த்தை பேசிவிட்டு எழுந்தாள்.

"டீ பத்ரு... சாயாப் போட்டுக் குடு..."

காலம்தான் ஒவ்வொன்றையும் எப்படிப் புரட்டிப் போடுகிறது? ஆமீனாவின் கல் யாணத்தின்போது, பஞ்சு குடோனுக்கு வேலைக்குப் போனவன்தான் சம்பந்தியம் மான். இப்போது யார் நம்புவார்கள்?

வீட்டின் விஸ்தீரணத்தைப் பெருமையு



டன் பார்த்தார். டீ.வி.யும் சோபாவும் புதிதாக இருந்தன. நாற்காலிகள் இடம் மாறி இருந்தன. கண்ணாடி அலமாரியில் அலங்காரப் பொருட்கள். சுவரில் பெரிய சைஸ் மக்கா மதீனா படம்.

"இந்தாங்க. சாயா..."

வேலைக்காரப் பெண்ணிற்கு அவரை யார் என்று தெரியவில்லை. தம்ளரைப் பக்கத்தில் வைத்தாள்.

"ஆமீனா எங்கேம்மா..."

"ஓட்டலுக்குப் போய் இருக்காக..."

"நான் வந்திருக்கேன்னு சொல்றியா?"

"சரீங்க..."

நல்ல பெண். அவர் எதிரிலேயே போனைச் சுழற்றினாள். எதிர் முனையில் யார் என்ற கேள்வி போலும். அவரைப் பார்த்தபடி, "யாரோ முக்கியமானவங்க... தாதிம்மா சாயா தரச் சொன்னாங்க. ஹால்ல உக்காந்திருக்காரு..." என்றாள்.

கொஞ்ச நேரத்தில் ஆமீனா வந்துவிட்டாள்.

"அத்தா... எப்ப வந்தீக?" அவளது முகம் ஆச்சரியத்தில் விரிந்தது. பக்கத்தில் உட்கார்ந்தாள். நிறைய விசாரித்தாள். தன் மகளாகத் தான் அறிந்திருந்த அடையாளங்கள் இத்தனை கண்ட பிறகும் அவளிடத்தில் மாறாதது திருப்தியாக இருந்தது.

''எந்திரிங்க... சாப்பிடலாம்...'' என கூப்பிட்டாள்.

"இப்ப வேணாம்மா... மாப்பிள்ளையும் வரட்டும்."

"அவரு வர நேரமாகும்த்தா..."

''பரவாயில்லை...''

அவளுக்கு சமாதானப்படவில்லை. ''களைப்பா இருக்கிங்க. வேணா சித்த படுங்க...''

"வேணாம் கண்ணு. அந்த நாக்காலியை இப்படிப் போடு போதும்."

போட்டாள். காற்றாடியைத் திருப்பி வைத்தாள். காலை நீட்டிக் கொண்டு

இலேசாகக் கண்ணயர்ந்தார்.

வாசலில் ஸ்கூட்டர் சத்தம் கேட்டது. சுல்தான் வேகமாக உள்ளே வந்தான். "யார் வந்திருக்கா..."

"எங்கத்தா..." என பதில் சொன்னாள் ஆமீனா.

"அத்தாவா.... யாரோ முக்கியமானவங் கன்னு சொன்னா அந்தப் பொண்ணு..."

"அத்தாவைத்தான் அப்படிச் சொல்லி இருக்கா...."

"பாரு.. நான் கேயெம்முன்னு நெனைச்சு ஓடி வர்றேன். கூப்பிடு அவளை..."

"பெரிய்ய கேளம்... எங்கத்தாவை விட ஒசத்தியா?"

"அதானே.... என் மாமனார் எவ்ளோ ஒசத்தி... அவசரமா ரெண்டு ரூபா வேணும். வாங்கி வைய்யி..." புறப்பட ஆயத்தமா னான்.

"சித்த பொறுங்க. அவரு இன்னும் சாப் பிடலை. நீங்க வரட்டும்னு இருக்கார். ரெண்டு வார்த்தை பேசிட்டு..."

"அதுக்கெல்லாம் நேரமில்லை. ராத்திரி பாக்கலாம்..."

"ஏங்க..."

ஸ்கூட்டர் உறுமியது. அவன் நடைக் கதவை சாத்துவது கேட்டது.

ஓசைகள் நெஞ்சில் மிதித்தன. சுல்தானி டம் இத்தனை மாற்றத்தை எதிர்பார்த்த வரில்லை. அதிர்ச்சியில் ஒன்றும் புரியாமல் கொஞ்ச நேரம் அலங்க மலங்க விழித்தார். மகள் வீட்டில் தனது ஸ்தானம் என்ன என்பது தெளிவாகப் புரிந்தது. கண்களை இறுக மூடிக் கொண்டார்.

பிறகு, எட்டு மாதங்களாகி விட்டது - மகள் வீட்டை மிதித்து.

**கா**ர்ச் சத்தம் கேட்டது.

மகளும் மாப்பிள்ளையும் இறங்குவதைக் கண்டு மைமூன் பீவி வாசலுக்கு ஓடினாள். நொடிப் பொழுதில் அவளது முகம் வெளிச்சமாகி மிட்டாய் சூப்பும் குழந்தை யின் குதூகலம் வந்து விட்டது.

''அத்தா இருக்காராம்மா...'' எனக் கேட்டபடி உள்ளே வந்தாள் ஆமீனா.

படுத்திருந்த மஜீது சாயபு, "வாம்மா... வாங்க மாப்ளை..." என எழுந்தார். ஆமீனா அவரைக் கண்ணோடு கண்ணாகப் பார்த் தாள். "ஏன்த்தா.... சொகமில்லையா... இப் படி எளச்சுப் போயிட்டீக?"

வார்த்தைகள் உள்ளேயும் ஊடுருவி தன்னை நனைப்பது போலிருந்தது அவருக்கு.

மைமூன் பீவி பாயை உதறி விரிக்க எல்லோரும் அமர்ந்தார்கள். கொஞ்ச நேரத் தில் பலகாரமும் சாயாவும் வந்தது.

ஆமீனா எழுந்து உள்ளே போனாள்.

எதற்கோ அவளும், சலீமாவும் பெருங்குரலில் சிரிப்பது கேட்டது.

சுல்தான் கைக்கடிகாரத்தில் மணி பார்த் தான்.

தன்னை அந்தச் சூழ்நிலையோடு பொருத்திக் கொள்ள சிரமப்படுகிறவன் போலிருந்தது. மஜீது சாயபுவின் கேள்வி களுக்கு பதில் சொல்வது அசௌகரியமாக இருந்தது. பக்கம் விட்டுப் போனால் எல் லாம் சிரமம்தான் என எண்ணிக் கொண் டார் அவர். இருவருக்கும் பேசுவதற்கு ஏது மில்லை போலிருந்தது.

"ஆமீனா.... நேரமாகலையா?"

"இருங்க... வர்றேன்."

இனி அதிக நேரம் தங்க விட மாட்டான் எனப் புரிந்து கொண்டாள் போலும். சலீமா வைப் பின்கட்டுக்கு அனுப்பி விட்டு அம்மாவிடம் மெதுவான குரலில் ஏதோ பேசினாள் ஆமீனா.

"நீ சொன்னா சரி. எதுக்கும் உங்கத்



''அடுத்த வீட்டு போலீஸ்காரர், யாரை திருட்டுப் பயலே, களவாணிப் பயலே'ன்னு திட்டுறாரு?''

''அவருக்குப் பிறந்த குழந் தையைத்தான் அப்படிக் கொஞ்சறாரு!''

- தேவந்தி துரைராஜ்

தாவை வந்து மத்த விஷயங்களைப் பேசச் சொல்றேன்..." என மைமூன்பீவி பதில் சொன்னது மட்டும் அவருக்குக் கேட்டது.

போய் விட்டார்கள்.

மகள் எழுப்பி விட்டுப் போன எண்ண அலைகள் மறந்து சாயபுவின் மனத்தில் இன்னும் அடித்துக் கொண்டிருந்தன. அவளது வாசம். கூந்தலிலிருந்து உதிர்ந்த மல்லிகைப் பூ. விரித்த பாய், வாய்ச் சிரிப்பு எல்லாம் இன்னும் அப்படியே இருந்தன.

ஒரு வாய் சாப்பிடக் கூட முடியாமல் புறப்பட்டுப் போனதை மைமூன் பீவி சொல்லிப் புலம்ப, "நம்ம மாதிரியா... ஏவாரக்காரங்கன்னா அப்படித்தான்..." என்றாள் சலீமா.

"பெரிய ஏவாரம். நாளைக்கு நீயும் இப்படித்தான் போவியா?" எனக் கேட்டாள் மைமூன் பீவி.

"ஆமா... உனக்கு வேற பேச்சே கெடையாது எப்பவும்" சலீமா அடுப்படிக்குப் போக எத்தனித்தாள்.

அவள் கண் மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்து விட்டு, மைமூன் பீவி அவர் அருகில் வந்தாள். குரலைத் தாழ்த்திக் கொண்டு, "ஆமீனா... சின்னவளுக்கு ஒரு மாப்பிள்ளை பார்த்து வச்சிருக்கா."

"அப்படியா?"

அவளது குரல் இன்னும் கீழிறங்கியது.

"பையன் ரொம்ப நல்லவனாம். குடும்பமும் பெரிசில்லை. அம்மா மட்டும்தான். ஒரே தங்கச்சி. அதையும் கட்டிக் குடுத்தாச்சாம்..."

"ம்...."

"பையனை உங்களுக்கும் தெரியும்ங்கிறா..."

"எனக்கா... ஆரு?" மஜீது சாயபுவுக்கும் ஆர்வம் தோன்ற, எழுந்து உட்கார்ந்தார்.

"அவுக கடையில வேலை பாக்கிறானாமே... அக்பர்னு..."

"அட... அந்தப் பையனா..."

அவருக்கு ஞாபகம் வந்து விட்டது.

சுல்தானின் நம்பிக்கைக்கு உரிய பையன். ஒல்லியான உடம்பு. சிவந்த நிறம். சுறுசுறுப்பு. சுட்டிகை.

"அவன் வயசுக்கு ஓஹோன்னு வருவான்ங்கிறா ஆமீனா..."

"வாஸ்தவம்தான்..." என்றார் மஜீது சாயபு.

"பின்னென்ன, பேசி முடிச்சுரலாமே..."

"முடிக்கலாம்... ஆனா..."




"ஆனான்னா? வசதியா? ஆண்டவன் முகம் முழிச்சா எதுதான் நடக்காது. நாம நினைச்சமா... பெரியவ இப்படிப் பொழைப்பான்னு...? ஆமீனா பையனைப் பத்தி அப்படி மெச்சிக்கறா..."

"அவன் முன்னேறுவான். சந்தேகமில்லை. என் கவலை... அப்புறம் இவளையும் பிரிஞ்சு ஒதுங்கி நிக்கனுமேன்னுதான்..."

"நல்ல கூத்து... உங்க புத்தி ஏன் விசித்திரமா இருக்கு? பொட்டப் புள்ளைகளை ஒருநாளைக்குப் பிரிஞ்சுதானே ஆகணும்..."

அவர் என்ன சொல்கிறார் என்பதைப் புரிந்து கொள்ளாமலேயே மைமூன் பீவி பதில் சொன்னாள்.

"நான் சம்மதம்னு சொல்லிட்டேன். உடனடியாப் போயி ஆக வேண்டியதைச் செய்யுங்க. அம்புட்டுத்தான்" – அவளது குரல் உறுதியுடன் ஒலிக்க, அவருக்கு பிரிவைப் பற்றிய வருத்தம் கூடியது. மேலும் கூடும் என்றும் தோன்றியது.

ஏனென்றால் சலீமாவும் அவருக்குப் பிரியமான மகள். "அம்மாடி...." என்ற குரலுக்கு "ஏன்த்தா...." என ஓடி வருகிறவள். இவளது திருமணமும் ஒரு தவம்தான் அவருக்கு.

"அல்லா..." என பெருமூச்சு விட்டார் மஜீது சாயபு. ●

# தடம் பதித்த தீபங்கள்!

பரபரப்புப் பத்திரிகைகளோட பொதுவான சைகாலஜி எப்படிப்பட்டது? லேட்டஸ்ட் 'காலச்சுவடு' இஷ்யுல (காலாண்டிதழ்) நாவரசு - ஜான்டேவிட் விவகாரத்தை முன்வெச்சு, அற்புதமான ஒரு ஆய்வுக்கட்டுரை பண்ணியிருக்காங்க. இந்தக் கட்டுரையோட ஸ்பெஷாலிட்டி என்னன்னா, கட்டுரையாசிரியர் சும்மா 'லிங்க்' குடுக்கற வேலையை மட்டும் எடுத்துக்கிட்டு, முழுக் கட்டுரையையும் கொலை நடந்த நேரத்துல வெளியான பத்திரிகைச் செய்தியை அப்படியே எடுத்து மாலை கட்டியிருக்கறதுதான்.

கொலை செய்தவன்ங்கறதுதான் ஜான்டேவிடோட ஒரே அடையாளக் குறிப்பு. இதை வெச்சுக்கிட்டு அவனை ஒரு பேயா, பிசாசா, ஆயிரம் வருஷத்துக்கு முந்தியிருந்த ஒரு ஆட்கொல்லி மிருகமா - படிப்படியா ஒரு ராட்சஸன் 'ஸ்கெட்சை' எவ்ளோ ஜாலியா, 'கற்பனை உள்ளத்தோட' வரைஞ்சிருக்காங்கன்றதை சுட்டிக் காட்டியிருக்காங்க.

உலகத்துல இருந்த - இருக்கற ஆயிரக்கணக்கான கொலைகாரர்கள்ல அவனும் ஒருத்தன்.

கண்டிக்கப்பட வேண்டியதுதான்; வருத்தப்பட வேண்டியதுதான்; கொலையாளி தண்டிக்கப்படணுங்கறதுல யாருக்கும் செக்கண்ட் ஒப்பீனியன் இருக்கப் போறதில்லை.

But, அந்த நேரத்துல பரபரப்புப் பத்திரிகைகள் ரெண்டு முகம் எடுத்ததை ப்ரில்லியன்டா கொண்டு வந்திருக்கு இந்தக் கட்டுரை.

ஜான் டேவிடை சித்திரித்தவிதம் பத்தி சொன்னேனில்லை? நெக்ஸ்ட், நாவரசு.

சின்னப் பையன், நல்லா படிக்கிற பையன். இதுதான் அவனைப் பத்தின தகவல். இதை வெச்சுக்கிட்டு, பத்திரிகையாளர்களும் கவிஞர்களும் நாவரசை ஒரு மகாத்மா லெவல்ல நிறுத்தி வெச்சுப் புகழாரம் சூட்டியிருக்கறதை சுட்டிக்காட்டி, ரெண்டையும் இணைச்சி யோசிக்கச் சொல்லுது கட்டுரை.

முக்கியமான விஷயம் - இந்தக் கட்டுரை ஜான் டேவிட் - நாவரசு விவகாரத்தை ஆராயும் கட்டுரை அல்ல. பரபரப்புப் பத்திரிகைகளோட நடவடிக்கை - தீனி கிடைக்கறபோது எப்படியிருக்கும்னு கோடி காட்டற விஷயம்தான்.

ரொம்ப அழகான கட்டுரை. ஒரு இலக்கியப் பத்திரிகைல - இப்படியொரு 'இன்வெஸ்டிகேடிவ் ஜர்னலிஸ' ரிப்போர்ட் இதுக்கு முன்னால நான் படிச்சதில்லை.

• • •

இந்த நூற்றாண்டு முடியப் போகுது. (ரெண்டு நூற்றாண்டுகளில் வாழ்ந்த சிந்தனையாளர்கள்னு யாராவது பிற்காலத்துல லிஸ்ட் போட்டு, அதுல என் பேர் சேர்ப்பாங்களா?) பல நல்ல காரியங்களும் கெட்ட காரியங்களும் சேர்ந்தாப் பலதான் நடந்திருக்கு. ஒவ்வொரு துறையிலேயும் பல சாதனையாளர்கள் பிறந்து, உபயோகமா இருந்திருக்காங்க. சிலரை ஞாபகம் வெச்சுக்கறோம். பலரை மறந்து போயிடறோம்.

But, ஒரு விஷயம். சாதனையாளர்களை மறக்கறது மகாபாபம். ஸ்விட்சைப் போட்டு லைட் எரியும் போது எடிசனை மனசுக்குள்ள வணங்கணும்னு கூட இல்லை. அட்லீஸ்ட், பவர் கட்டாகி ஒண்ணும் பண்ணாம இருக்கும்போது ஒரு செகண்ட் நினைச்சுப் பார்க்கலாமில்லியா?

இப்படித்தான், இலக்கியத் துறைல அந்தந்தப் பத்து வருஷத்துல கவனிக்கப்பட வேண்டிய சாதனையாளர்கள்னு விமர்சகர் தி.க.சி. ஒரு லிஸ்ட் தருவார். அறுபதுகளில், எழுபதுகளில், எண்பதுகளில்னு கவனமா பிரிச்சு, தொகுத்து, இன்னின்னார் இன்னின்ன காரியம் பண்ணியிருக்காங்கன்னு அடையாளம் காட்டுவார். ரொம்ப உபயோகமான விஷயம் இது.

நைன்டீஸ் முடியப் போகுது. எழுத்துத் துறைல இந்தப் பத்து வருஷத்துல தடம் பதித்திருக்கும் சாதனையாளர்கள் யார் யார்? தி.க.சி' லிஸ்டை ஆவலோட எதிர்பார்த்துட்டிருக்கேன்.

Before that, எனக்குச் சிலபேர் உடனடியா ஞாப

கத்துக்கு வராங்க. ஆயிரக்கணக்கான கலைஞர்களுக்கு நடுல, தங்களோட தனித்துவத்தைத் தொலைச்சிடாம, இந்தப் பத்து வருஷத்துல போராடி ஜெயிச்சிட்டிருக்கறவங்கன்னு இவங்களைச் சொல்லலாம்:

சிறுகதைத் துறையில்: சு.சி. சிவகுமார், ஆர். வெங்கடேஷ், ஷாராஜ், சித்ரன், நந்தன். (ஸாரி, பெண்கள் யாரும் கண்ணுல படலை)

நாவல்: சு. வேணுகோபால், ஜெயமோகன், சுப்ரா, தங்கர்பச்சான்.

கவிதை: யுகபாரதி, யூமா வாசுகி, பா. சத்யமோகன், பச்சியப்பன்.

இசைக் கலைஞர்கள்: டி.எம். கிருஷ்ணாவும் நித்யஸ்ரீயும் பிரமாதமான உயரத்தைத் தொட்டிருக்காங்க. பொடிப்பயல் அபிஷேக் ரகுராம் என்னமா பாடறான் தெரியுமா? மார்வலஸ்! வயலினிஸ்ட் மும்பை காயத்ரி, மெயின் ஆர்டிஸ்டோட mood, கற்பனையை மாத்தாம அதேசமயம் தனித்தன்மையையும் நிலை நாட்டறதுல ரொம்பக் கில்லாடி! (ரீஸண்டா, பாட வேற ஆரம்பிச்சிருக்காங்க)

சினிமா: விக்கிரமன் ரீச் பண்ணியிருக்கிற 'ஹைட்'டை வேற யாரும் பண்ணியிருக்கறதா தெரியலை – டைரக்ஷன்ல. அகத்தியன் கொஞ்சம் கிட்டக்க வரார். But அவரால இன்னும் செய்ய முடியும். ஏன் செய்யாம இருக்கார்னு புரியலை.

கொஞ்சம் கவனிச்சிப் பார்த்தீங்கன்னா, இந்த சாதனையாளர்களோட வெற்றிக்குப் பின்னால இருக்கறது ஒரே ஒரு விஷயம் தான்– கடும் உழைப்பு! அடுத்தப் பத்து வருஷத்துக்குள்ள என்னையும் உங்களையும் இப்படி சுட்டிக்காட்டற அளவுக்கு நாம உயர்ந்தே ஆகணும். என்ன பண்ணலாம்னு உட்கார்ந்து யோசிக்கலாம். (யாரப்பா அது 'ஜெயித்த கதை' எழுதறவரே! நோட் பண்ணிக்கிட்டீங்களா?)

• • •

ஒரு ஜோக்:

ஒரு டாக்டரும் கார் மெக்கானிக்கும் மீட் பண்ணாங்க. ரெண்டு பேரும் பழைய ஃப்ரெண்ட்ஸ்.

டாக்டர் அந்த மெக்கானிக்கிட்ட, "என்னப்பா, தொழில் எல்லாம் எப்படிப் போவுது?"

அதுக்கு அந்த மெக்கானிக், "உனக்கென்னய்யா, ஆதாம் ஏவாள் காலத்துல இருந்து ஒரே மாடல்! நமக்குத்தான் வருஷா வருஷம் மாடல் மாறி ஒரே பேஜார் பண்ணுது!"

– எங்கியோ படிச்சதாகச் சொல்லி, இந்த ஜோக்கை அனுப்பி, கொஞ்ச வாரமா இருந்த ஜோக் வறட்சியைப் போக்கிய புண்ணியவான், ஈரோடு ராணி குருநாதன். (புண்ணியவாணி? புண்ணியவதி?)

நம்ம மன்ற உறுப்பினர்கள் பஞ்ச் பஞ்ச்சா கவிதை அனுப்பறாங்க. அதுமாதிரி ஜோக் அனுப்பக் கூடாது?

— சுபி

# ஸ்டிரைக்!

என்னுடைய பள்ளி நாட்களைப் பற்றிய நினைவுகள் இப்போதுகூட எனக்கு அடிக்கடி வரும். அதிலும், எங்கள் பள்ளிக் கூடத்தில் பையன்களும் பெண்களும் பிரார்த்தனை, பள்ளிக்கூட விழாக்கள் போன்ற சமயங்களில் ஒன்றாக இருக்கிற போது வரும். காரணம், அந்த நாளிலேயே நான் கோ-எஜுகேஷன் பள்ளியில் படித்தவன்.

என் அப்பா, திருச்சிராப்பள்ளியில் தென்னக ரயில்வே கூட்டுறவு ஸ்டோர்ஸில் பணி புரிந்துகொண்டிருந்ததால், என் பள்ளிப்படிப்பு அங்குதான். செயின்ட் ஜான்ஸ் ஸ்கூலில் படித்தேன். அங்கே, மொத்த வகுப்பிலும் சரஸ்வதி என்று ஒரு பெண், நான் – இரண்டு பேரைத் தவிர மற்றவர்கள் எல்லாம் பையன்கள். அதிலும் பெரும்பாலானவர்கள் ஆங்கிலோ இந்திய மாணவர்கள். வகுப்பில் முதல் இரண்டு ரேங்க் நானும் சரஸ்வதியும்தான். எனவே, எங்களிடம் மற்ற மாணவர்கள் ரொம்ப நட்புடன் பழக மாட்டார்கள்.

சரஸ்வதிக்கும் எனக்கும் வகுப்புத் தோழிகள் என்பது தவிர, இன்னொரு பொதுவான விஷயமும் உண்டு. நான் சென்னையில் பத்மா சேஷாத்ரி பள்ளியை ஆரம்பித்து, நடத்தி வருவதைப் போலவே, சரஸ்வதி கொடைக்கானலில் ஒரு பள்ளிக்கூடம் நடத்தி வருகிறார்.

பள்ளி இறுதி வகுப்பு படிக்கிறபோது, எனக்குள் ஒரு வித வெறி. ரொம்ப நிறைய மார்க் வாங்க வேண்டும் என்கிற லட்சியத்துடன், படு சீரியஸாகப் படித்தேன். பிரமாதமாகப் பரீட்சை எழுதினேன். ஒவ்வொரு பரீட்சை எழுதிவிட்டு, ஹாலை விட்டு வருகிறபோதும் 'இத்தனை நான் கஷ்டப்பட்டுப் படித்ததற்கு நல்ல பலன்' என்கிற திருப்தி மனத்தில் ஏற்படும்.

பரீட்சை முடிவுகள் வெளியாயின. நான் சென்னை மாகாணத்திலேயே முதல் மாணவியாகத் தேறி இருந்தேன். சென்னை மாகாணம் என்பது தமிழ்நாடு மட்டுமின்றி, ஆந்திராவையும் உள்ளடக்கியதாக அப்போது இருந்தது. எனவே, இப்போதைய மாநில முதல் ரேங்க்கைவிட, அது பெருமை வாய்ந்தது.

மார்க் லிஸ்ட் வந்தது. அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்கள் எல்லாம், "அடுத்து எந்த காலேஜ்?" என்று கேட்டார்கள். ஆனால் என் வீட்டிலோ என்னைக் கல்லூரிக்கு அனுப்புவது பற்றிய பேச்சை யாருமே எடுக்கவில்லை.



என் தாய்வழிப் பாட்டியும், தாத்தாவும் தம் பேத்திகளுக்குப் பள்ளிக்கூடப் படிப்பை முடித்தவுடன், 'போதும் படிப்பு' என்று சொல்லி கல்யாணம் பண்ணி வைத்து விடுவார்கள். அந்த வழக்கப்படி, நானாகக் கல்லூரியில் சேர்ந்து படிக்க என் விருப்பத்தை மெதுவாகச் சொன்னபோது, "காலேஜும் வேணாம். ஒண்ணும் வேணாம். நல்ல வரனாகப் பார்த்து முடிச்சிடலாம்" என்றார்கள்.

ஆனால், அவர்களின் கருத்தை நான் ஏற்றுக் கொள்ளவில்லை என்பது ஒருபுறம் இருந்தாலும், என் அம்மாவே ஏற்றுக் கொள்ளவில்லை. காரணம் அவருக்கு என் சிறுவயது முதலே என் படிப்பின் மீது ஆழமான அக்கறை உண்டு.

பள்ளிக்கூட நாட்களில், நான் படித்துக் கொண்டிருப்பேன். என் அம்மா, என் முன்னால் என் முகத்தைப் பார்த்தபடியே உட்கார்ந்துகொண்டிருப்பார். இத்தனைக்கும்



அவர் ஐந்தாம் வகுப்போ, ஆறாம் வகுப்போ தான் படித்தவர். 'நான்தான் படிக்கவில்லை; அதற்கான சூழ்நிலைகள் இல்லாமல் போய் விட்டது. நீயாவது நன்றாகப் படி! உனக்கு என்ன வேணுமோ கேள்! நான் பண்ணி வைக்கிறேன்'' என்று சொல்லி, என்னை உற்சாகப்படுத்திக் கொண்டே இருப்பார்.

நான் படிப்பதைப் பார்த்துக்கொண்டே இருந்துவிட்டு, 'எங்கே! நீ படித்ததை இப் போது சொல்லிக்காட்டு பார்க்கலாம்' என் பார். நான் சொல்லுவது அவருக்குப் புரி யாது என்றாலும்கூட, கூர்மையாகக் கவனித்துக்கொண்டே இருப்பார். எங்காவது லேசாகத் தடுமாறினாலும் ''புஸ்கத்தைப் பார்! அடுத்து என்ன போட்டிருக்கு என்று படி! மனப்பாடம் செய்! அப்புறம் மறுபடி சொல்லிப் பார்!'' என்பார். சில சமயம், 'படித்ததை எழுதிப் பார்' என்பார். நான் எழுதியதைத் திருத்துவது அவரால் முடி யாது. எனவே, என்னையே புத்தகத்தை வைத்துக்கொண்டு, எழுதியதைச் சரி பார்க் கச் சொல்லுவார். சிலசமயம் எழுதியதைக் கொண்டு போய் ஆசிரியரிடம் காட்டச் சொல்லுவார்.

இப்படியாக, நான் படிக்க வேண்டும் என்று ரொம்பக் குறியாக இருந்தார் என் அம்மா.

எனது கல்லூரிப் படிப்பு விஷயமாய், எனக்கு சாதகமாய்க் குரல் கொடுத்தவரும் என் அம்மாதான்.

என் தாத்தாவும் பாட்டியும் சென்னை யில் வசித்தார்கள். நாங்கள் திருச்சியில் இருந்தோம். எனவே, அவர்களுடைய கெடு பிடி எடுபடாமல் போய்விட்டது. நான் திருச்சி ஹோலி கிராஸ் கல்லூரியில் சேர்ந்தேன்.

அது சுதந்தரப் போராட்டம் தீவிரமாக நடந்து கொண்டிருந்த கால கட்டம். ஒருநாள் திருச்சி நேஷனல் காலேஜில் படித் துக் கொண்டிருந்த, எனக்கு நன்றாகத் தெரிந்த மாணவன் ஒருவனைச் சந்தித் தேன்.

அவன், ''இன்னிக்கு நாங்கள் எல்லாம் ஸ்டிரைக் பண்ணப் போகிறோம்! தெரியுமா? நீங்களும்தான் காலேஜ் படிக்கிறீர்கள்! ஒரு ஸ்டிரைக் பண்ணும் தைரியம் உங்களுக் கெல்லாம் உண்டா!'' என்று கிண்டலாகக் கேட்டான். எனக்கு அதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

''இந்த தேசத்தின் மீது உங்களுக்கு எந்த

**திருமதி ஒய்.ஜி.பி**




அளவு அக்கறை உண்டோ, அதே அளவு அக்கறை எங்களுக்கும் இருக்கிறது. நாங்களும் இந்தியப் பிரஜைகள்தானே! காந்திஜி எங்களுக்கும் சொந்தம்தான்! எங்களுக்கும் தேசபக்தி உண்டு என்பதை உங்களுக்கு நிரூபிக்கிறேனா, இல்லையா பார்!'' என்று ஆவேசமாகச் சவால் விட்டேன்.

சவால் விட்ட கையோடு, இன்றைக்கு நாமும், நம் கல்லூரியில் படிக்கிற மாணவிகளும் எப்படியாவது ஸ்டிரைக்கில் கலந்து கொண்டு விட வேண்டும்; மாணவர்கள் ஊர்வலத்தில் கலந்து கொள்ள வேண்டும் என்று முடிவு செய்தேன்.

கல்லூரிக்குப் போன கையோடு, நான் நேரே கல்லூரி நிர்வாகியான சிஸ்டர் ஃபிலோமினாவைச் சந்தித்தேன். ''இன்று திருச்சி கல்லூரி மாணவர்களின் ஸ்டிரைக் நடக்கப் போகிறது. சுதந்தரப் போராட்டத்தின் ஓர் அங்கமான அதில், இந்தியப் பிரஜை என்கிற முறையில் மாணவிகள் அனைவரும் கலந்து கொள்ள வேண்டிய கடமை எங்களுக்கு இருக்கிறது. எனவே, ஊர்வலத்தில் நம் கல்லூரி மாணவிகள் அனைவரும் பங்கேற்க நீங்கள் அனுமதி தர வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டேன்.

சிஸ்டரின் முகத்தில், என்னிடமிருந்து இப்படி ஒரு கோரிக்கையை எதிர்பார்க்காததால் ஏற்பட்ட அதிர்ச்சியையும், ஒரு பெண், நம்மிடமே இப்படிப் பேசிவிட்டாளே என்கிற கோபத்தையும் ஒரு சேர என்னால் பார்க்க முடிந்தது.

அவரின் பதிலுக்காக நான் காத்திருந்தேன். ஆழமான பார்வை ஒன்றினை என் மீது படர விட்டபின், ''ஸ்டிரைக்கில் கலந்து கொள்ளுவதற்கு அனுமதி தர முடியாது. உங்கள் வேலை படிப்பது. ஒழுங்காக வகுப்புக்குப் போ. இல்லையெனில் கடுமையான விளைவுகளைச் சந்திக்க நேரிடும்'' என்று எச்சரித்தார்.

ஆனால் நான் இந்த மிரட்டலுக்கெல்லாம் பயந்துவிடவில்லை. நேரே வகுப்புக்குப் போய், தங்கம்மா என்கிற என் சிநேகிதியை அழைத்துக்கொண்டு மறுபடியும் சிஸ்டர் ஃபிலோமினாவின் அறைக்குப் போனேன். இதற்குள் விஷயம் கேள்விப்பட்டு, பல வகுப்புகளையும் சேர்ந்த மாணவிகள் அங்கே திரண்டு விட்டனர்.

நான் சிஸ்டர் ஃபிலோமினாவிடம் உறுதியான குரலில் கேட்டேன். ''எங்களை நீங்களாக அனுப்புகிறீர்களா? இல்லை, கல்லூரியின் கதவுகளைப் பூட்டி வைத்தாலும் நாங்களாக சுவர் ஏறிக்குதித்து வெளியே போய், போராட்டத்தில் கலந்து கொள்ளுவோம்! நீங்களாக அனுமதித்து விட்டால் உங்களுக்கு கௌரவம். ஹோலி கிராஸ் மாணவிகள், சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொள்ள, சுவர் ஏறிக் குதித்தார்கள் என்று நியூஸ் பரவினால் யாருக்கு அவமானம் என்று ஒருநிமிடம் சிந்தித்துப் பாருங்கள்'' என்றேன்.

அத்தோடு நிறுத்திக் கொண்டேனா? 'தேசியக் கல்லூரி மாணவர்கள், நம் கல்லூரி மாணவிகள் போராட்டத்தில் கலந்து கொள்ளாவிட்டால், கதவை உடைத்துக் கொண்டு, நம் கல்லூரி வளாகத்துக்குள் புகுந்து விடப் போகிறார்கள் என்றுகூடக் கேள்விப்பட்டேன்' என்றேன்.

சிஸ்டரின் முகம் வெளுத்து விட்டது. இன்னும் சிலரைக் கலந்து ஆலோசித்து விட்டு, கல்லூரிக் கதவுகளைத் திறந்து விட உத்தரவிட்டார்.

கதவுகள் திறந்தன! எங்கள் படை புறப்பட்டது!

(தொடரும்)

படங்கள்: ஸ்ரீஹரி



# மாறுனைப் பாராட்டும் அதிகாரி!

உமாசங்கர்-

செய்திகளில் அடிக்கடி அ(க)டிபடும் இளம் ஐ.ஏ.எஸ். அதிகாரி. அ.தி.மு.க. ஆட்சியில் நடந்த சுடுகாட்டுக் கொட்டகை ஊழலை வெளிக் கொணர்ந்தவர். கலைஞர் மீண்டும் ஆட்சிப் பொறுப் பேற்றவுடன் கண்காணிப்பு மற்றும் ஊழல் தடுப்புத் துறைக்கு மாற்றப்பட்டார்.

அ.தி.மு.க. ஆட்சியில் நடந்த பல ஊழல்களை அக்குவேறு ஆணிவேறாக ஆராய்ந்து நீதிமன்றத்தின் முன் குற்றப்பத்திரிகைகள் தாக்கல் செய்ய உறு துணையாக இருந்தவர். இந்தப் பணிகளுக்கு கணிப்பொறியைப் பயன்படுத்தி, தலைமைச் செயலகத்தில் கணிப்பொறியின் பயன் பாடுகளைப் பற்றிய விழிப் புணர்வைப் பரவலாக்கிய வர். பின் தேர்தல் துறை.

இப்போது முதல்வரின் சொந்த மாவட்டமான திருவாரூருக்கு மாவட்ட ஆட்சியாளராக மாற்றப் பட்டுள்ளார். இவர் ஒவ் வொரு பொறுப்பிலிருந்து மாற்றப்படும் போதும் அதன் பின்னணி பற்றி பல ஊகங்கள். இப்போதும் அப்படியே. குறிப்பாகத் தகவல் தொழில் நுட்பத்தில் தமிழக அரசு முனைந்து செயல்பட்டுக் கொண் டிருக்கும்போது, அதில் அதிகம் ஆர்வம் காட்டிய உமாசங்கர் மாற்றப்பட்டது ஏன்? 'அவருக்கு வேண் டாத உயர் அதிகாரிகள் செய்த சதி இது' என்று பத்திரிகைச் செய்திகள்.

திருவாரூர் மாவட்டக் கலெக்டராக பொறுப் பேற்றுக் கொண்டவுடன் ஒரே நாளில் திருவாரூர் கோயில், வேளாங்கண்ணி, நாகூர் ஆகிய இடங்களுக்கு விசிட் செய்தார் உமாசங்கர். சரியாக வேளாங்கண்ணி மாதா கோயில் முன்பு எதேச்சை யாகச் சந்தித்தோம். குழந்தை தருணிகாவை தோளில் போட் டுக் கொண்டு தோழமை யுடன் பேசினார்.

''இது எனக்கு ஒரு சந் தோஷமான போஸ்டிங். தலை மைச் செயலகத்தில் நான் எடுத்துக் கொண்ட பணிகளை செயல்படுத்திக் காட் டும் களம் மாவட்டங் கள்தான். ரேஷன் கடைகளில் நடைபெறும் தில்லு முல்லுகளை ஒழித்துக் கட்டி, மக்களுக்கு எந்தவிதப் பிரச் னையுமில்லாமல் அத்தியாவசியப் பொருள்கள் கிடைப்பதெப்படி? இது பற்றியும், மற்றும் விற்பனை வரி விதிப்பு, வசூல், ஆகியவற்றை எளிமையாக்கி, அதிக வருவாய் தேடுவது எப்படி என்பது பற்றியும் இரு பேப்பர்கள் தயாரித்தேன். என் லேப்டாப்பில் போட்டு, முதல்வர், முரசொலிமாறன் ஆகியோரிடம் இந்தத் திட்டங்களைப் பற்றி விளக்கினேன். அவர்கள் மிகவும் ஆர்வமுடன் கேட்டார்கள். மாறன் அவர்கள் பல குறிப்புகளை எடுத்துக் கொண்டார்.

''மாறன் அவர்கள் ஒரு மாறுபட்ட அரசியல்வாதி. புது முயற்சிகளுக்கு அவர் ஓர் உந்து சக்தி. 'ரேஷன்' பற்றிய பேப்பரை பார்த்த ஓர் அமைச்சர், 'நீங்கள் சொல்லியுள்ளபடி ரேஷன் துறையை சீர்படுத்தினால், ஊழியர்கள் படு அப்செட் ஆகிவிடுவார்களே' என்று சிரித்துக் கொண்டே சொன்னார். நான் சொன்ன திட்டங்களை பரீட்சார்த்தமாகச் செயல்படுத்திப் பார்க்க மத்திய அரசு நிதி ஒதுக்கீடு செய்திருக் கிறது. எனவே கோட்டையில் நான் தயாரித்த பேப்பர்களினால் மக்களுக்கு ஏதேனும் பயன் கிடைக்க வேண்டுமானால் மாவட்டங்களில்தான் பணிபுரிய வேண்டும். எனவே என் மாற்றத்தில் எந்தவித சர்ச்சை யான பின்னணியும் கிடையாது!'' என்றார் உமா சங்கர்.

— ப்ரியன்

"இன்னிக்கு சாரதா பேச்சு கா விட்டுட்டேன்..."

"அடடா! ஏன்?"

"புது ரப்பரால ஒருதடவை அழிச்சுட்டுத் தரேன்னு கேட்டா தரவே மாட்டேன்றா அம்மா!"

"அப்படியா?"

"சாரதா ரொம்ப bad girlதானே?"

– இந்தக் கேள்விக்கு மட்டும் "ஆமாம் கண்ணா!" என்று அனுதாபத்துடன் பதில் சொல்லி விடாதீர்கள்!

குழந்தைகளின் நட்பு வட்டத்துக்குள் உருவாகும் சின்ன சண்டைகளில் பெரியவர்களுக்கு இடம் கிடையாது.

பிறகு குழந்தை ஏன் நம்மிடம் வந்து தனது ஆதங்கத்தை விவரித்து நியாயம் கேட்கிறது? அனேகமாகத் தனது குற்ற உணர்வைப் புதைத்துவிட்டு, மனத்தாங்கலை நியாயப் படுத்திக் கொள்ளத்தான்!

'சாரதா bad girl இல்லை' என்று சொல்வதும் உண்மையாகாது; 'நீ அவளிடம் ஏன் போய் ரப்பர் கேட்கிறாய்? உன் பொருளை அவளுக்குத் தராதே; நீயும் அவளுடையதைக் கேட்காதே!' என்று 'அறிவுறுத்துவதும்' ஆரோக்கியமில்லை.

சாரதா ரப்பர் தரவில்லை என்பது ஒரு முழு தினத்தின் பல நிகழ்வுகளுள் ஒரு துளிதான். அதை அப்படியே எடை போட்டு பெரியவர்கள் நியாயம் வழங்க முற்படுவது சம்பந்தப்பட்ட இரு குழந்தைகளுக்குமே நல்லதல்ல.

"இதோ பாரு... இப்படியெல்லாம் வந்து என்கிட்டே புகார் பண்ணக்கூடாது. சாரதாவும் நீயும் ஒத்துமையா இருக்கணும். சும்மா சும்மா எல்லாத்துக்கும் சண்டை போடக் கூடாது."

"நான் சண்டை போடலை..."

"நீ திரும்பவும் கேட்டுப் பாரு... அவ ரப்பர் கொடுக்கலைன்னாலும் பரவாயில்லை..."

– இதோடு உரையாடல் முடிந்து போய்விடும்.

"சாரதா தராட்டி பரவாயில்லே; அதேமாதிரி நான் வாங்கித் தரேன்" என்று இன்று ரப்பர் வாங்கிக் கொடுத்தால், நாளை கட்டுப்படியாகாத பொருளுக்கு விண்ணப்பம் வரும்!

சாரதா மீது 'கண்டனத் தீர்மானம்' கொண்டு வருவதோ அபத்தம்! சின்னப் பொருள்களைப் பகிர்ந்து கொள்வதும் அவற்றுக்காகச் சண்டை போடுவதும், பின்னர் தாங்களே சமரசம் செய்து கொள்வதும் குழந்தைகளுடைய வளர்ச்சியின் ஓர் அங்கம். அதில் பெரியவர்கள் குறுக்கிடுவதால் அந்த இயல்பான வளர்ச்சிக்கு இடையூறுதான் ஏற்படும்! நாளையே மீண்டும் பிராண சினேகிதிகளாகி கலர் நூல்களால் கையில் 'ஃப்ரெண்ட்ஷிப் பாண்ட்' கட்டிக் கொண்டு மகிழப் போகும் வாண்டுகளிடையே விரோத எண்ணத்தை விதைக்கவோ வளர்க்கவோ நாம் காரணமாகிவிடலாகாது.

இன்றைய சமுதாயத்தில் மத்தியதர வகுப்பினரின் குடும்பங்களில் பெரும்பாலும் ஒற்றைக் குழந்தை தனியாக வளர்கிறது. அதனால் வீட்டுச் சூழலில் பகிர்தல் சண்டைகளும் அதைத் தொடரும் சமாசங்களும் இடம் பெறுவதில்லை. பள்ளியிலோ நண்பர்கள் வீட்டிலோ மட்டுமே குழந்தைகள் இதைச் சந்திக்க நேர்கிறது.

# வளர்ச்சிக்காகப்

அப்படி வாய்க்கும் ஒவ்வொரு சந்தர்ப்பமும் குழந்தையுடைய வளர்ச்சிக்கு உதவுகிற நிகழ்ச்சி என்று நினைத்து நிம்மதி கொள்வது உத்தமம்.

ஒற்றையாய் வளரும் குழந்தைகளை அடிக்கடி வெளியே அனுப்பியோ அழைத்துப் போயோ பிற சிறுவர்களுடன் உறவாட வைக்க வேண்டும். ஆரம்பத்தில் அவர்கள் கூச்சப்படக் கூடும். ஆனால், அதைப் பெரிதுபடுத்திப் பாராட்டாமல்

விஜி



# போடும் சண்டைகள்!

திரும்பத் திரும்ப சந்தர்ப்பங்களை உருவாக்கித் தரத்தான் வேண்டும்.

போட்டி, பகிர்தல், வெற்றி, தோல்வி எல்லாமே வாழ்க்கையின் அம்சங்கள் என்று இன்முகத்துடன் ஏற்கிற மனப்பான்மை.

யோசித்து, எடை போட்டு முடிவெடுக்கும் ஆற்றல்.

பலவிதமான சுபாவமுடையவர்களிடம் பேசிப் பழகி, தாக்குப் பிடிக்கும் வல்லமை...

– இவையெல்லாம் இந்த உறவாடல்களின் போதும் சண்டை – சச்சரவு சமாதானங்களின்போதும் குழந்தைகளுக்கு வாய்க்கப் பெறுகின்றன.

கூட்டுக் குடும்பங்களில் இயல்பாகவே கிடைத்து வந்த இந்தச் சூழலை இன்று வலியச் சென்று உருவாக்கித் தர வேண்டியிருக்கிறது. இதுவும் பெற்றோரின் பொறுப்பு.

அதே சமயத்தில், போட்டி – புகைச்சல் என்கிற பேரில் அத்துமீறலை மட்டும் அனுமதித்து விடக் கூடாது. எக்காரணம் கொண்டும் கை ஓங்கக் கூடாது, 'கெட்ட' வார்த்தைகளைப் பயன்படுத்தக் கூடாது என்ற விதி மிகக் கடுமையாக அனுசரிக்கப்பட வேண்டும். இந்த விதிகளை மீறினால் மன்னிப்புக் கிடைக்காது. தண்டனை உண்டு என்பதும் தெரிவிக்கப்பட வேண்டும்.

பொதுவாக, பெண் குழந்தைகள் வாய்ச் சண்டைக்கும் ஆண் குழந்தைகள் கைச்சண்டைக்கும் துணிவார்கள். இதை மனத்தில் கொண்டு விதிகளை உருவாக்குங்கள். உருவாக்கிய விதிகளை ஒருபோதும் தளர்த்த வேண்டாம்...

(அடுத்த வாரம் வரை)



## லாவண்யா

ஒரு நிமிடம் மலைத்துப் போய் நின்று விட்டேன். அந்த காரிடார் முழுவதும் இரு புறமும் மேடை அமைத்து செடிகள், செடிகள், மலர்கள், மலர்கள்... இந்த வண்ணம் அந்த வண்ணம் என்றிராது எல்லா நிறத்திலும் பூக்கள். அந்தச் சூழ் நிலையே ரம்யமாயிருந்தது. மூலையில் பெரிய தொட்டிகள் அமைத்து கருஞ்சிவப்பு ரோஜாக்களைக் கொத்துக் கொத் தாகச் செய்திருந்தார்கள். கூட் டம் மெதுவாக நகர, மேஜைகளில் க்ளுக்கோஸ் பாட்டில்களில் அமைத்த ரோஜாச் செடிகள், சிலது முழுதுமாய் விரிந்து, சிலது பாதி மொட்டாய் - பாதி மலராய், இலது வெட்கம் கொண்ட பெண் போலே முகம் மறைத்து மொட்டாய் - என் வர்ணிப்பில் ஏதும் தவறிருந்தால் மன் னியுங்கள். அந்தப் பூக்களையும் அது தந்த சந்தோஷத்தையும் வர்ணிக்க எனக்கு வார்த்தைகள் போதவில்லை. எல்லாமே

# மலர், மணம், மனிதர்கள்...

அழகாயிருந்தது.

பார்த்துக்கொண்டே நடந்து கொண்டிருந்தேன்.

அந்த வரிசையின் முடிவில் ஓர் அறை. அதற்குள் நுழைய, இன்னும் நிறைய பூக்கள். இங்கே மலர்களை வித விதமான அலங்காரத்தில் அமைத்து ஆளுக்கொரு பெயரும் தந்திருந்தார்கள். ஒவ்வொரு டேபிளிலும் ஒரு சேர் போட்டு அதை அமைத்தவர்கள் அமர்ந்து சோம்பலாய் புத்தகம் புரட்டிக் கொண்டிருந்தார்கள். நான்கைந்து டேபிள் கடந்த பிறகு, அந்த ரத்தச் சிவப்பு நிற ரோஜாவைப் பார்த்தேன். என்னமோ தெரியவில்லை. பார்த்த முதல் விநாடியிலேயே அது எனக்குப் பிடித்துப் போனது. திகைத்துப் போய் நின்று அதையே பார்த்துக் கொண்டிருந்தேன். பிரமிப்பாய் கீழே பார்த்த போது நான் எதிர்பார்த்தபடி அதன் அட்டையில் 'முதல் பரிசு' என்றிருந்தது. மீண்டும் அந்த மலரைப் பார்த்தேன். தான் அழகு என்று தெளிவாய் உணர்ந்த பெண்ணின் முகத்தில் இயல்பாய் ஒரு பெருமிதம் இருக்கும் பாருங்கள். அது போல இந்தப் பூவும் தலைநிமிர்ந்து கர்வமாய் நிற்பதாய்த் தோன்றியது. இதை வளர்த்தவரிடம் பேச வேண்டும் போலிருந்தது. முதலில் தயங்கினேன். பின் தைரியமாய் வரிசையிலிருந்து விலகி அந்த டேபிளினருகில் உட்கார்ந்திருந்த பெண்ணை நெருங்கினேன். மெலிதான வண்ணத்தில் ஒரு சாதாரணமான சேலையில் இருந்த அவரை நாற்பதிலிருந்து நாற்பத்தைந்து வயது மதித்தேன்.

"**கங்**கிராட்ஸ் மேடம்..."

"ஓ... தேங்க்ஸ், உட்காருங்க!"

கொஞ்ச நேரத்திற்கு இருவருக்கும் என்ன பேசுவது என்றே தெரியவில்லை. பின் நானே பேச்சை ஆரம்பித்தேன்.

"இந்த ரோஸ் ரொம்ப நல்லாயிருக்கு மேடம். எனக்கு எப்படி சொல்றதுன்னே தெரியலை. ஆனா இதை ரொம்பப் பிடிச்சிருக்கு. இதுக்கு பரிசு கிடைச்சிருக்கிறதாலே உங்ககிட்டே வந்து பேசறேன்னு நினைக்காதீங்க. எனக்கு இது பிடிச்சது, இதை வளர்த்தவரைப் பார்த்துப் பாராட்டணும்னு நினைச்சேன். வந்தேன். இதுக்குப் பரிசு கிடைக்கலைன்னாலும் வந்திருப்பேன்."

"அழகா பேசறே... இந்தப் பூவுக்குக் கிடைக்கிற மூணாவது பரிசு இது. எந்தக் கண்காட்சிக்கு இதைக் கொண்டு போனாலும் ரசிக்கிறாங்க. வயசு வித்தியாசமில்லாம எல்லோருக்கும் இது பிடிச்சிருக்கு. உன்னை மாதிரி வந்து பாராட்டிட்டுப் போறாங்க! சந்தோஷமாயிருக்கு. பெருமையாயிருக்கு."

"நீங்க எங்கே இருக்கீங்க மேடம்?"

"பெங்களூர்."

"ஓ. அங்கேயிருந்து இவ்வளவு தூரம் வந்து இந்த ஷோவிலே கலந்துக்கறீங்களா?"

"என்னம்மா இப்படிக் கேட்டுட்டே? இந்த ஊர் என்ன, வருஷத்துக்கு நாலு தரமாவது ஃபாரின் போறேன். இந்த மாதிரி ஷோக்கள்லே கலந்திட்டு வரேன். எனக்கு இதுதாம்மா உயிர். சந்தோஷம். வாழ்க்கை. பெங்களூர்லே என் வீட்டுக்கு வந்து பார்க்கணும் நீ. தோட்டம் முழுசும் ரோஜாதான். ஒரு வெரைட்டி மாதிரி இன்னொண்ணைப் பார்க்க முடியாது. எங்கெங்கிருந்தோ கஷ்

டப்பட்டுக் கொண்டு வந்து, நட்டு, பாது காத்து, டெய்லி கவனிச்சு வளர்த்து அது பூக்கிறபோது கிடைக்கிற சந்தோஷம் இருக்கு பாரு! அதுதாம்மா எனக்குச் சாப்பாடு! இந்த செடிகள், பூக்கள்தான் எனக்குக் குழந்தைகள் மாதிரி. இதுகளுக்கு இந்த மாதிரி ஒரு பெருமை கிடைக்குதுன்னா நான் எங்கேயும் போகத் தயார். எந்த ஷோவிலேயும் கலந்துக்கத் தயார்." மூக்குக் கண்ணாடியை ஏற்றிவிட்டுக்கொண்டாள்.

எனக்கு அவர் மேலிருந்த பிரமிப்பு இன்னும் கூடியது.

"பூக்கள் மேலே இத்தனை ஆர்வமா, ஆசையாயிருக்கிற உங்களைப் பார்த்தா ஆச்சர்யமாயிருக்கு. இதோ உங்களைச் சுத்திப் பாருங்க. இந்த ரூம் முழுக்க இருக்கிற அத்தனை பேரோட மனசும் தங்களோட அன்றாட வேலைகளை, கவலைகளை, கஷ்டங்களை, டென்ஷனை மறந்து ஒரு குழந்தை போலே லேசா இருக்குன்னா, அதுக்குக் காரணம் இந்தப் பூக்கள்! இந்த யந்திர உலகத்திலேயும் இதை, இத்தனை அக்கறையாய்ச் செய்கிற உங்களைப் போன்றவங்க, ரியலி கிரேட்."

அவர் முகத்தில் தானாய் ஒரு சிரிப்பு வந்து ஒட்டிக்கொண்டது.

"ரொம்ப தேங்ஸ். அப்போ நான் கிளம்பறேன்" எழுந்துகொண்டேன்.

"ஒரு நிமிஷம்: முன்னமே கேட்டிருக்கணும். உன் பேர் என்னம்மா?"

"அனு."

"என்ன கிளாஸ் படிக்கிறே?"

எனக்குச் சிரிப்பு வந்து விட்டது. "க்ளாஸா? ரெண்டு வருஷமா ஒரு ப்ரைவேட் கம்பெனியிலே வேலையிலே இருக்கேன் மேடம்."

"ஓ... என்னாலே நம்பவே முடியலை. பார்த்தா அப்படித் தெரியலை. You look very young... like this flower." ஒரு ரோஜாவை எடுத்து நீட்டினார்.

நன்றி சொல்லிப் பெற்றுக்கொண்டேன். என் முகமும் பூவைப் போல் ஆனது.

மீண்டும் வரிசையில் சேர்ந்துகொண்டு நகர்ந்தபடி அந்த ரோஜாவைப் பார்த்தேன். நல்ல சிவப்பில் அழகாய்க் குவிந்து ஒரு புதுக் குழந்தை போலச் சிரித்தது. மற்ற மலர்களைப் பார்த்தபடி நடந்தேன். ஒரு டேபிளில் கள்ளிச்செடியின் உச்சியில் வெள்ளை ரோஜா மலர்ந்தது போல் அமைத்து, அதற்கு 'அமைதி' என்று தலைப்பு தந்திருந்ததை ரசித்தேன். 'ரோஜாவைத் தாலாட்டும் தென்றல்' என்று டேப்பில் ஒலித்த ஜானகியுடன் பாடியபடி நடந்தபோதுதான் அந்த அலறல் சப்தம் கேட்டது.

திரும்பிப் பார்த்தபோது, அதே பெண்தான் கத்திக்கொண்டிருந்தாள். மளமளவென்று கூட்டம் அவர்களைச் சூழ்ந்துகொண்டது. சற்றுமுன் நான் பார்த்துப் பாராட்டிய ரோஜாச்செடி, தொட்டியோடு கீழே விழுந்து உடைந்து சிதறிப் போயிருந்தது. எதிரில் ஒரு பெண் குழந்தை - பத்து அல்லது பன்னிரண்டு வயதிருக்கும் - அதிர்ச்சியாய் நின்றிருந்தது. விசாரித்தபோது இந்தக் குழந்தை ரோஜாவைத் தொட கை நீட்டியபோது கை தவறி கிளை மேல் பட்டுத் தள்ளிவிட, தொட்டி கீழே விழுந்து சிதறியதாய்ச் சொன்னார்கள்.

"ஸாரி ஆன்ட்டி..." அந்தக் குழந்தை



மிரள மிரள விழித்தபடி கெஞ்சிக்கொண்டிருந்தது.

"என்ன ஸாரி? இப்படி செடியைப் பாழாக்கிட்டியே! கண்ணு தெரியாதா உனக்கு? பூக்களைத் தொடக் கூடாதுன்னு பெரிசா போர்ட் போட்டிருக்கோமே, படிக்க வராதா உனக்கு? படிச்சப்புறமும் இப்படி பண்ணியிருக்கேன்னா உனக்கு எத்தனை திமிர் இருக்கணும்? நீ ஸாரி கேட்கிறதாலே என் செடி திரும்பி வந்துடப் போகுதா? இது எத்தனை அபூர்வமான வெரைட்டி தெரியுமா? இதை நான் எத்தனை கஷ்டப்பட்டு வளர்த்தேன் தெரியுமா? இது எத்தனை ப்ரைஸ் வாங்கியிருக்கு தெரியுமா?"

மூச்சு விடாமல் திட்டிக்கொண்டே போனாள். குழந்தையிடம் இப்படியும் பேசுவார்களா? சற்றுமுன் என்னிடம் அத்தனை மென்மையாய்ப் பேசின பெண்ணா இவள்?

அந்தக் குழந்தையின் அப்பா தவிப்பாய்

கையைப் பிசைந்தபடி நின்றிருந்தார். இதே ஒரு நடுத்தரக் குடும்பமாயிருந்தால் இத்தனை சின்னக் குழந்தை வாங்க நேர்கிற திட்டுக் களைச் சகியாது, "என்னம்மா? இப்போ என் னாங்கிறே நீ? ஆமா... தொட்டி உடைஞ்சு போச்சு! இப்போ அதுக்கு என்ன பண்ணச் சொல்றே?" என்று சண்டை போட்டிருக்கக் கூடும். இது சற்றே உயர்மட்டம்போல; அவர் மவுனமாய் 'என் புறமும் தப்பிருக்கிறது' என் பதை முழுசாய் ஒப்புக் கொள்கிறவர் போல இந்தப் பெண்ணிடம் வந்து மன்னிப்புக் கேட்க முயன்றார்.

"ஏதோ சின்னக் குழந்தை, தெரியாம செஞ்சுட்டடா" அவர் பேசி முடிக்குமுன் அவரையும் திட்ட ஆரம்பித்தாள்.

"என்னய்யா சின்னக் குழந்தை? குழந்தை செய்யற காரியமாய்யா இது? மன் னிப்பு கேட்க வந்துட்டார், உன் மன்னிப் பாலே எனக்கென்னய்யா பிரயோஜனம்? பொண்ணைக் கூட்டிட்டு வந்தியே, ஒழுங்கா கவனிக்கிறதில்லே? எங்கேயோ பராக்குப் பார்த்திட்டிருந்திட்டு இப்போ மன்னிப்பாம் மன்னிப்பு...! நான் எதுக்குய்யா மன்னிக் கணும் உங்களை?"

அவர் முகம் தொங்கிப்போனது. அந்தக் குழந்தையின் அழுகை இன்னும் அதிகமாகி யிருந்தது. மருண்ட பார்வையுடன் கன்னம் சிவக்க அந்த சின்னக் குழந்தை தேம்பித் தேம்பி அழுததைப் பார்க்க என்னவோ போலிருந்தது.

**யா**ரோ போய் சொல்லிக் கூட்டிவர, அந்த கண்காட்சியின் செகரெட்டரி என்று ஒருவர் ஓடி வந்தார். பவ்யமாய் கை கூப்பி அவர் பேசின விதத்தில் யாருக்கும் அவர் பேச்சிலிருக்கிற நியாயத்தை மறுக்கத் தோன்றாது என்று தோன்றிற்று.

"ரொம்ப ஸாரிம்மா. ஏதோ தெரியாம நடந்துட்டது. தப்புதான். உங்க பூக்களுக்கு வேணும்னா இவரை ஏதுனா பணம் தந்துடச் சொல்றேன். இல்லைன்னா எங்க அஸோசியேஷன் சார்பா உங்க நஷ்டத் திற்கான செலவை ஏத்துக்கறோம். ப்ளீஸ், முதல்லே உட்காருங்க மேடம்."

"யாருக்கு வேணும் உங்க பணம்? என்னை என்ன பிச்சைக்காரின்னு நினைச் சீங்களா? – பணத்திமிரிலே ஆடறீங்களா?" இத்யாதி பேச்சுக்களால் இன்னும் மதிப் பிழந்து போனாள்.

அந்தக் குழந்தை இன்னும் பெரிதாய் அழுது கொண்டிருந்தது. தான் ஏதோ பெரி சாய் தப்பு செய்து விட்டோம் என்கிற சுய இரக்கத்தில் அப்பாவின் கால்களைப் பிடித்துக்கொண்டு பிடிவாதமாய் அழுதது. அந்த அப்பா செய்வது அறியாது மூக்குக் கண்ணாடியைக் கழட்டுவதும் மாட்டுவது மாய் இருந்தது பரிதாபமாயிருந்தது. அந்தக் குழந்தையின் அழுகையைப் பார்க்கிறபோது அறையின் அத்தனை பூக்களும் சோபை யிழந்து போனதாய்த் தோன்றியது.

இத்தனை நாகரிக மனிதர்கள் கேட்கக் கூச்சப்பட்டு தள்ளிப் போட்டிருந்த அந்தக் கேள்வியை வெட்டி கட்டின ஒரு பெரியவர் கேட்டே விட்டார். "சரிம்மா, இப்போ என்ன பண்ணலாம்ங்கிறீங்க?"

அதற்கும் அந்தப் பெண் பெரிதாய் ஏதும் கத்தப் போகிறாள் என்று எதிர்பார்த்தேன். இல்லை. ஏற்கெனவே முடிவு செய்து வைத் தாற்போல உறுதியான குரலில் சொன்னாள்.

"எனக்குப் பணம் முக்கியமில்லை. இவங்க தர்றதைப் போல பத்து மடங்கு காசை இவங்க மூஞ்சிலே வீசி எறிய என்னாலே முடியும். அதுக்காக இவங்களை சும்மா விட்டுட்டா என் மனசே ஆறாது. அதனாலே இவங்க எனக்கு கொடுக்கிறதா சொல்ற பணத்தை இந்த அஸோசி யேஷனுக்கு நன்கொடையாக் கொடுத் திடணும். இது தண்டனை மட்டும்தான். இந்த வேலை செஞ்சதுக்காக இந்தப் பெண்ணை நான் என் உயிருள்ள வரைக்கும் மன்னிக்க மாட்டேன்."

கோபமாய் முகம் திருப்பி அந்தப் பெண் சேரில் அமர்ந்து கொள்ள, அநேகமாய் எங்கள் அத்தனை பேர் மனத்திலும் ஒரு 'அப்பாடா...' வந்து உட்கார்ந்து கொண்டது.

எனக்கு 'ச்சீ!' என்றாகி விட்டது. அவள் எனக்கு அன்பளிப்பாகத் தந்த அழகு ரோஜா ஏனோ கறுப்பு நிறமாய்க் காட்சி யளித்தது.

**"கோர்ட்டுல என்ன குழப் பம்?"**

**"கூண்டுல நிக்கற குற்றவாளிக்கு ஏற்கெனவே தூக்குத் தண்டனை விதிச்ச ஞாபகம் நீதிபதிக்கு இருக்குதாம்!"**

**— அம்பை தேவா**




# ALL INDIA INSTITUTE OF MANAGEMENT STUDIES

No. 29, LAZARUS CHURCH ROAD, R.A. PURAM.
CHENNAI - 600 028. PH: 044 - 4933210, 4956833
FAX: 044 - 4933259, 4952692. E-mail aiimas@hotmail.com

Offers the following Six Month Diploma Courses by correspondence (Distance Education Programme). Each Diploma Course has 4 Written Papers

## DIPLOMA IN

- BUSINESS MANAGEMENT
- BUSINESS ADMINISTRATION
- INTERNATIONAL BUSINESS MANAGEMENT
- SALES & MARKETING
- FINANCIAL MANAGEMENT
- PERSONAL MANAGEMENT & INDUSTRIAL RELATIONS
- TOTAL QUALITY MANAGEMENT & ISO 9000
- INTERNAL QUALITY AUDITING & QS 9000/ISO 9000
- QUALITY ASSURANCE & QS 9000/ISO 9000
- PRODUCTION MANAGEMENT
- MATERIALS MANAGEMENT
- EXPORT & IMPORT MANAGEMENT
- ENVIRONMENTAL MANAGEMENT & ISO 14000/140001
- ADVERTISING & PUBLIC RELATIONS
- MASS COMMUNICATION
- HUMAN RESOURCES DEVELOPMENT
- OFFICE ADMINISTRATION
- QUALITY CONTROL & ISO 9000

**FOR APPLICATION AND PROSPECTUS SEND Rs. 25/- BY DD/MO/IPO IN FAVOUR OF THE ABOVE INSTITUTE.**

Application & Prospectus are also available on internet: WWW.AIIMAS.COM.

ELIGIBILITY: No formal Qualification (Open Education System) Minimum Age 16Yrs. Course Fee Rs.800/- Course Fee includes supply of Study Materials & Question Bank Book. Medium of Study Materials - English/Hindi. Medium of Examination English/Hindi. Examination will be held at about 60 centres all over india



## இனிய சருமத்தை காப்பாற்ற இயற்கை அன்னையின் ஈடில்லா பராமரிப்பு

[illegible] (Patola) [illegible] (Bhunimbha) [illegible] (Parpataka) [illegible] (Antioxidants) [illegible]

[illegible] E (Betacarotene) B [illegible] GLA, SOD [illegible]

மெடிமிக்ஸ்

## ஸ்கின் கேர்

கேப்சூல்

12 மூலிகைகள் + ஸ்பைருலினா





## எல்லா வகை இருமலுக்கும் உடனடி நிவாரணம்

**மெடிமிக்ஸ் காப் சிரப்**

பாரம்பர்ய மூலிகை கலவை

குணப்படுத்தும் நோய்கள்
- [illegible]

மருத்துவ பரிசோதனையில் எவ்வித பாதிப்பும், பக்க விளைவுகளும் அறியப்படவில்லை.

Mfd by: Sowparnika Herbal Extracts & Pharmaceuticals (P) Ltd., No. 7, Chakravarthy Nagar, Ayanavaram, Chennai - 600 023.

எல்லா மருந்து கடைகளிலும் கிடைக்கும்

Marketed by: Dorcas Market Makers Ltd., No. 7, M-Block, Anna Nagar East, Chennai - 600 102.

# பொன்னியின் செல்வன்

### ஐம்பத்திரண்டாம் அத்தியாயம்

## உடைந்த படகு



டி விழுந்ததனால் பாய் மரத்தின் உச்சியில் தீப்பிடித்து எரிவதைப் பார்த்ததும் இனி அம் மரக்கலம் தப்பிக்க முடியாது என்று வந்தியத்தேவன் நிச்சயமடைந்தான். எனவே, தானும் உயிரோடு தப்பிக்க முடியாது.

வந்தியத்தேவனுக்கு அப்போது சிறிதும் மனக்கிலேசம் உண்டாகவில்லை. உற்சாகந்தான் மிகுந்தது. கலகலவென்று சிரித்தான். பாய்மரத்தோடு தன்னைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்து விட்டான். நடுக்கடலில் தீயில் வெந்து சாக வேண்டியதில்லை அல்லவா? அதைக் காட்டிலும் குளிர்ந்த நீரில் முழுகிக் கடலின் அடியில் சென்று அமைதியாக உயிர் விடுவது மேல் அல்லவா?

ஆயுளில் மிச்சமுள்ள சிறிது நேரத்தை வீணாக்க வந்தியத்தேவன் விரும்பவில்லை. தீப்பற்றி எரிந்த கப்பலின் வெளிச்சத்தில் சுற்றுமுற்றும் நன்றாகப் பார்த்துக் கொந்தளித்த கடலின் சௌந்தரியத்தை அனுபவிக்க விரும்பினான். தன் உடல் சமாதி அடையப் போகும் இடத்தை நன்றாகப் பார்த்துக்கொள்வது நல்லதல்லவா? இம்மாதிரி அகால மரணமடைந்தவர்கள் ஆவி உருவத்தில் இறந்த இடத்தைச் சுற்றி வந்து கொண்டிருப்பார்கள் என்று சொல்

**அமரர் கல்கி**




**கல்கி கலெக்ஷன்**



வார்களே? அம்மாதிரி தன் ஆவியும் இந்தக் கடலின் மேலேயே வட்ட மிட்டுக் கொண்டிருக்குமோ! காற்றில் மிதக்குமோ? அலைகளின் மேலே உலாவுமோ? சுழற்காற்று அடிக்கும்போது தன் ஆவியும் சுற்றிச் சுற்றி வருமோ?

ஆகா! எப்போதாவது ஒருநாள் இந்தக் கடலில் அரசிளங்குமரி கப்பல் ஏறிப் போனாலும் போவாள். கப்பலை ஓட்டும் மாலுமிகள் "வந்தியத்தேவன் கப்பலோடு முழுகிய இடம் இதுதான்!" என்று காட்டுவார்கள். அவளுடைய வேல் விழிகளில் கண்ணீர்த் துளிகள் அவளது முழுமதி முகத்தில் முத்து முத்தாகச் சிந்தும். ஆவி வடிவத்திலே அதை அருகிலிருந்து தான் பார்க்கும்படி நேர்ந்தால், அவளுடைய கண்ணீரைத் தன்னால் துடைக்க முடியுமா...?

கப்பல் ஒரு பேரலையின் சிகரத்தின் மேலே ஏறியது. பாய்மரத் தீவர்த்தி போட்ட வெளிச்சத்தில் சுற்றிலும் வெகுதூரம் தெரிந்தது. கரும் பளிங்கு நிறம் பெற்றுத் திகழ்ந்த கடல் நீரில் பாய்மரத் தீயின் ஒளி விழுந்த இடம் மட்டும் பொன் வெள்ளமாகத் திகழ்ந்தது. இந்த அழகின் அற்புதத்தை வந்தியத்தேவன் பார்த்து மகிழ்ந்து முடிவதற்குள் அவனுடைய கண்ணையும் கவனத்தையும் வேறொன்று கவர்ந்

தது.

சற்றுத் தூரத்தில் அவன் ஒரு மரக் கலத்தைப் பார்த்தான். அதில் புலிக் கொடி பறக்கக் கண்டான்.

கடவுளே! உன் விந்தைகளுக்கு எல்லையே இல்லை போலும்! - அந்த மரக் கலத்திலே வருகிறவர் இளவரசர் அருள்மொழி வர்மராகத்தான் இருக்க வேண்டும். தன்னைத் தேடிக் கொண்டுதான் அவர் வருகிறார் என்று அவனுடைய உள்ளுணர்ச்சி கூறியது!

வந்தியத்தேவன் ஏறியிருந்த கப்பல் சிக்கிக் கொண்டு தத்தளித்த அதே சுழிக் காற்றில் பார்த்திபேந்திரனுடைய கப்பலும் அகப்பட்டுக் கொண்டது. ஆனால் இந்தக் கப்பலில் அச்சுழிக் காற்றின் தன்மையை அறிந்தவர்களும் கப்பலோட்டும் கலையில் வல்லவர்களுமான மாலுமிகள் இருந்தார்கள். பாய்மரங்களில் விரித்திருந்திருந்த பாய்களை அவர்கள் இறக்கிச் சுற்றி வைத்தார்கள். காற்றின் வேகம் முழுவதையும் கப்பல் எதிர்த்து நிற்பது அவசியமில்லாத வண்ணமாகக் கப்பலின் சுக்கானைப் பிடித்து இயக்கி வந்தார்கள். ஒருநிமிஷம் கப்பல் அடியோடு சாய்ந்து 'இதோ கவிழ்ந்து விட்டது' என்று தோன்றும். மறுநிமிடம் சமாளித்துக்கொண்டு நிமிர்ந்து நிற்கும். மலை போன்ற அலைகள் அந்தக் கப்பலை எத்தனைதான் தாக்கியும் அதில் இணைக்கப்பட்டிருந்த மரங்களும் பலகைகளும் சிறிதேனும் பிளந்து கொடுக்க வேண்டுமே! ஊஹூம் கிடையவே கிடையாது! சமுத்திரராஜன் அந்தக் கப்பலைப் பந்து ஆடுவது போல் தூக்கி எறிந்து விளையாடினான். சுழிக்காற்று அக்கப்பலைப் பம்பரம் சுற்றுவது போலச் சுழற்றிச் சுழற்றி அடித்தது. வானத்திலிருந்து வெள்ளம் பொழிந்து அந்தக் கப்பலைக் கடலில் அமுக்கி அழுத்திவிடப் பார்த்தது. சோழ நாட்டுத் தச்சுவேலை நிபுணர்கள் கட்டிய அக்கப்பலை - தமிழகத்தின் புகழ் பெற்ற மாலுமிகள் ஓட்டிய அக்கப்பலை - கடலும் மழையும் காற்றும் சேர்ந்து தாக்கியும் ஒன்றும் செய்ய முடியவில்லை.

"இதைக் காட்டிலும் கொடிய சுழிக் காற்றுகளையும் சண்டமாருதங்களையும் நான் பார்த்திருக்கிறேன்; சமாளித்திருக்கிறேன். ஆகையால் கவலைப் படத்தேவையில்லை!" என்று கலபதி கூறினான். ஆனால் அவன் பார்த்திபேந்திரனிடமும் இளவரசரிடமும் வேறொரு அபாயத்தைப் பற்றித் தன் பயத்தை வெளியிட்டான்.

கரிய மேகங்கள் திரண்டு வந்து வானை மூடி நாலாபுறமும் இருள் சூழச் செய்துவிட்டன. போதாததற்குச் சோனாமாரியாக மழையும் பெய்தது. கடலில் எழுந்த அலைகளோ வரிசை வரிசையான மலைத் தொடர்களைப் போல் கப்பலைச் சுற்றித் திரையிட்டு மறைத்தன. இந்த நிலையில் அவர்கள் எந்தக் கப்பலைத் தேடிச் சென்றார்களோ அது வெகு சமீபத்தில் வந்தாலும் பார்க்க முடியாது. அந்தக் கப்பலும் இதைப் போலத்தான் சுற்றிச் சுழன்று தத்தளித்துக் கொண்டிருக்கும். கப்பல்கள் ஒன்றோடொன்று மோதினால் இரண்டும் சுக்கல் சுக்கலாகிப் போய் விடும். கப்பலில் உள்ளவர்களின் கதி அதோகதிதான்!

ஆகவே சுழிக்காற்றின் அபாயத்தைக் காட்டிலும் சுற்றிலும் ஒன்றும் பார்க்க முடியாமலிருப்பதுதான் அதிக அபாயம் என்று அம்மரக்கலத் தலைவன் கூறினான்.

இது இளவரசருக்கும் தெரிந்த விஷயந்தான். ஆகவே அவர் அத்தனை காற்றிலும் மழையிலும் கப்பலின் ஓரமாக நின்றுகொண்டு தன் கூரிய

கண்களின் பார்வையை நாலாபுறமும் செலுத்திக் கொண்டிருந்தார். மின்னல் மின்னியபோதெல்லாம் அவருடைய கண்கள் அதிவேகமாகச் சுழன்று சுற்றுப் புறமெங்கும் உற்றுப் பார்த்தன. அவருடைய உள்ளம் எப்படித் தத்தளித்துக் கொண்டிருந்தது என்பதைச் சொல்ல முடியாது. தன் அருமைத் தமக்கை அனுப்பிய தூதன் முரட்டு அராபியர்களிடமும் கொலைகார மந்திரவாதிகளிடமும் அகப்பட்டுக் கொண்டிருக்கிறான். அது போதாது என்று இந்தச் சுழிக்காற்று வேறு வந்து சேர்ந்தது. ஒருவேளை அவ்வீர வாலிபன் ஏறியுள்ள கப்பலைக் கண்டுபிடிக்க முடியாமலே போய் விடுமோ! கண்டுபிடித்தாலும் அவனை உயிரோடு காண்பது சாத்தியமா? - கலபதி அஞ்சுவதுபோல் அவன் ஏறியிருக்கும் கப்பல் மேல் நம் கப்பல் மோதி இரண்டும் கடலில் மூழ்கினால் வேடிக்கையாகத்தானிருக்கும்! ஆனால் தந்தையிடம் சொல்ல வேண்டிய செய்தியைச் சொல்லுவது யார்? பார்த்திபேந்திரனிடம் அந்தக் குடும்ப இரகசியத்தைக் கூறுவது இயலாத காரியம். கூறினால், அந்தப் பல்லவனுக்கு அது கேலியாயிருக்கும்; அதன் முக்கியத்தை அவன் உணர மாட்டான்.

இதுகாறும் இளவரசர் செய்ய எண்ணிய காரியம் எதிலும் தோல்வியடைந்ததில்லை. இப்போது தோல்வி ஏற்பட்டு விடுமோ? - இல்லை, ஒரு நாளும் இல்லை. பொன்னியின் செல்வனுக்குத் தீங்கு நேருவதையோ, தோல்வி ஏற்படுவதையோ சமுத்திர ராஜன் பார்த்துக் கொண்டிருக்க மாட்டான்!

இருளையும் மழையையும் கிழித்துக் கொண்டு எல்லாத் திசைகளையும் பார்த்துக் கொண்டிருந்த இளவரசரும் அந்தப் பேரிடி முழக்கத்தைக் கேட்டார். அப்போது மின்னிய மின்னலுக்கு அவரும் கண்களைச் சிறிது மூடிக் கொள்ள வேண்டியதாயிற்று. கண்ணைத் திறந்து பார்த்தபோது மின்னல் வெளிச்சமில்லாத வேறொரு வெளிச்சத்தைக் கண்டார். சற்றுத் தூரத்தில் ஒரு கப்பல் விரித்த பாய் மரங்களுடன் பேயாடுவது போல் ஆடிக் கொண்டிருந்தது! அதன் பாய்மரத்தின் உச்சியில் தீப்பற்றி எரிந்தது! அந்தத் தீயின் வெளிச்சத்தில் இளவரசர் அதில் ஒரு மனிதன் பாய்மரத்தோடு சேர்ந்து நிற்பதைக் கண்டார்! கடவுளே! இத்தகைய அற்புதமும் நடக்கக் கூடுமா? - அவன், அந்த வீர இளைஞனாகிய வந்தியத்தேவன்தான்! அவன் மட்டும் ஏன் தனியாக நிற்கிறான்? மற்றவர்கள் என்ன ஆனார்கள்? - அதைப் பற்றியெல்லாம் யோசிப்பதற்கு இப்போது நேரமில்லை. செய்ய வேண்டியது இன்னதென்பதை ஒருநொடிப் பொழுதில் இளவரசர் தீர்மானித்துக் கொண்டார்.

அவர் பார்த்த காட்சியைக் கப்பலில் இருந்த மற்றவர்கள் பலரும் பார்த்தார்கள். "அதோ!" என்று அவர்கள் ஏககாலத்தில் எழுப்பிய பெரிய கூச்சல் காற்றின் பயங்கர சத்தத்தையும் மீறிக் கொண்டு எழுந்தது.

கப்பலோடு சேர்த்துக் கட்டியிருந்த படகண்டை போய் இளவரசர் நின்றுகொண்டு, அருகில் நின்ற மாலுமிகளைப் பார்த்து, "உங்களில் யார் என்னுடன் வருவீர்கள்?" என்று உரத்த குரலில் கேட்டார். அவர் செய்ய உத்தேசித்த காரியம் இன்னதென்று ஊகித்தறிந்து மாலுமிகள் திகைத்தார்கள். ஆயினும் பலர் போட்டியிட்டு முன் வந்தார்கள்.

பார்த்திபேந்திரனும் கலபதியும் வந்து தடுக்கப் பார்த்தார்கள்.

"இளவரசே! இது என்ன காரியம்! இந்தக் கொந்தளிக்கும் கடலில் படகு எப்படிச் செலுத்த முடியும்? எரிகின்ற கப்பலில் உள்ளவனை எப்படிக் காப்

பாற்ற முடியும்? - ஆனாலும் முயற்சி செய்து பார்க்கலாம். தாங்கள் போக வேண்டாம்; போவதற்கு எங்களில் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஜாக்கிரதை! இச்சமயம் என்னைத் தடுக்கப் பார்க்கிறவர்களை நான் ஒருநாளும் மன்னிக்க முடியாது!'' என்று இராஜ கம்பீரமான அதிகார தோரணையில் கூறினார். அதேசமயத்தில் படகை அவிழ்த்து விட்டார். ''உங்களில் இரண்டு பேர் போதும்; வாருங்கள்!'' என்றார்.

படகு கடலில் இறங்கியது. இளவரசரும் அவர் குறிப்பிட்ட இருவரும் அதில் குதித்தார்கள். மறுகணமே படகு கப்பலை விட்டு அகன்று சென்றது. அலைகளின்மேல் ஆவேசக் கூத்து ஆடியது. இளவரசரும்



மற்ற இருவரும் துடுப்புகளைப் பலங்கொண்ட மட்டும் வலித் தார்கள். சிறிது சிறிதாகப் படகு எரிகின்ற கப்பலை அணுகியது. இதற்குள் தீ உச்சியிலிருந்து பாதி பாய்மரம் வரையில் இறங்கி விட்டிருந்தது. ஆனால் வந்தியத்தேவனோ அங்கேயே நின்று கொண்டிருந்தான். அவன் தீயின் வெளிச்சத்தில் கப்பலைப் பார்த்தான்; கப்பலிலிருந்து இறக்கப்பட்டு வந்த படகையும் பார்த் தான். அந்த அதிசயத்தில் தன்னை மறந்திருந்தான். தான் ஏதே னும் செய்ய வேண்டும் என்றே அவனுக்குத் தோன்ற வில்லை.

"குதி! கடலில் குதி!" என்று கத்தினார் இளவரசர். அவன் காதில் அது விழவில்லை. செயலற்ற பதுமையைப் போல் நின்று கொண்டிருந்தான்.

ஆயிற்று; இன்னும் சிறிது நேரம் தாமதித்தால்



கப்பல் அடித்தளத்துக்கு நெருப்பு வந்து விடும்; கப்பல் முழுகி விடும். அப்புறம் அவனைக் காப்பாற்றுவது இயலாத காரியமாகி விடும்.

என்ன செய்ய வேண்டும் என்பதை மறுபடியும் இளவரசர் ஒரு நொடியில் முடிவு செய்தார். இத்தகைய சந்தர்ப்பங்களுக்கென்றே அந்த அபாயப் படகில் சேர்த்துக் கட்டியிருந்த நீளக்கயிற்றின் இன்னொரு நுனியைத் தமது இடுப்பில் சுற்றி இறுக்கிக் கட்டிக்கொண்டார். மாலுமிகள் இருவருக்கும் எச்சரிக்கை செய்துவிட்டுக் கடலில் குதித்தார்.

ஒரு பெரிய, மிகப் பெரிய அலை வந்தது! இளவரசர் மேலே அது விழுந்திருந்தால் அவரை அமுக்கிக் கடலின் அடியில் கொண்டு போயிருக்கக் கூடும்! ஆனால் அது நல்ல அலை; இளவரசருக்கு ஏவல் செய்ய வந்தது. அவரைத் தன் உச்சியில் வைத்துத் தூக்கிக் கொண்டு போய் எரிகின்ற கப்பலின் மேல் தளத்தில் எறிந்தது.

ஏற்கெனவே கட்டு அவிழ்த்துக் கொண்டிருந்த வந்தியத்தேவன் இளவரசரைப் பார்த்ததும் 'ஆ' என்று அலறி அவரை எடுப்பதற்காகத் தாவிக் குனிந்தான். இளவரசர் அவனுடைய கழுத்தை அப்படியே இறுக்கிக் கட்டிக் கொண்டார். அவன் காதுக்குள் ''என்னைப் பிடித்துக்கொண்டு வா! விட்டு விடாதே!'' என்றார். சொல்லி முடிந்த தட்சணமே இருவரும் மறுபடியும் கடலில் மிதந்து அலைகளினால் மொத்துண்டார்கள்.

மாலுமிகள் துடுப்புத் தள்ளுவதை நிறுத்திக் கயிற்றைப் பிடித்து இழுக்கலானார்கள்.

இளவரசரும் அவரை உடும்புப் பிடியாகப் பிடித்துக்கொண்டிருந்த வந்தியத்தேவனும் படகை அணுகினார்கள்.

படகைப் பிடித்து அதில் ஏறுவது எளிய காரியமில்லை. அலைகளுடன் போராடிக்கொண்டு வந்தியத்தேவனையும் தாங்கிக்கொண்டு படகில் ஏறுவதற்கு முயன்ற ஒவ்வொரு கணமும் ஒரு யுகமாக இருந்தது.

இதோ படகு கைக்கு அகப்படுவது போலிருக்கும்; அடுத்தக்கணம் எட்டாத தூரத்தில் போய்விடும்.

கடைசியாக, அதற்கும் ஒரு பெரிய அலை உதவி செய்தது. படகின் அருகில் உயரமாக எழுந்த அந்தப் பேரலையோடு அவர்களும் எழுந்தார்கள். மாலுமிகளின் உதவியுடன் படகில் குதித்தார்கள்.

''துடுப்பை வலியுங்கள்! வேகமாய் வலியுங்கள்!'' என்றார் இளவரசர்.

ஏனெனில், எரிகின்ற கப்பல் கடலில் முழுகும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது.

அப்படி முழுகும்போது ஏற்படும் கொந்தளிப்பில் படகு கவிழ்ந்தாலும் கவிழ்ந்து விடும். அது மட்டுமன்று; கப்பல் முழுகித் தீ அணைந்து விட்டாலும் பிறகு மற்றொரு கப்பலை அவர்கள் பிடிப்பதும் அசாத்தியமாகி விடலாம்.

ஆகா! அதோ கப்பல் முழுகத் தொடங்கிவிட்டது. கொழுந்து விட்டு எரிந்த பாய்மரங்களுடனே அது கடலில் முழுகிய காட்சிதான் என்ன பயங்கர சௌந்தரியமாயிருந்தது?

அதை அவர்களால் அதிக நேரம் அனுபவிக்க முடியவில்லை.

இளவரசர் எதிர்பார்த்தது போலவே கடலில் ஒரு பெரிய கொந்தளிப்பு. வானளாவி மேலெழுந்த அலைகள்.

படகு என்னமோ அலைகளைச் சமாளித்துக்கொண்டது. ஆனால் எரிந்த கப்பல் முழுகியதும் சுற்றிலும் சூழ்ந்த இருளில் மற்றொரு கப்பல் இருந்த இடமே தெரியாமல் போயிற்று. திக்குத் திசை ஒன்றுமே தெரியவில்லை.

படகும் கப்பலும் ஒன்றையொன்று நெருங்கிக் கொண்டிருக்கின்றனவோ, அகன்று போய்க் கொண்டிருக்கின்றனவோ, - அதைத் தெரிந்து கொள்ளவும் வழியில்லை.

இரண்டிலும் அபாயம் உண்டு.

இருட்டில் கப்பல் இருக்குமிடம் தெரியாமல் அதை நெருங்கிச் சென்று முட்டிக்கொண்டால், படகு துகள் துகளாகும்.

விலகிப் போய் விட்டால், கேட்பானேன்? நடுக்கடலில், காரிருளில் அந்தச் சின்னஞ்சிறு படகினால் என்ன செய்ய முடியும்?

சமுத்திர ராஜனே! உன் காதலி பொன்னி நதி தந்த அருமைச் செல்வனை நீதான் காப்பாற்ற வேண்டும்!

வாயு பகவானுடைய லீலைகள் வெகு வெகு அதிசயமானவை. அந்தப் பெரும் சுழிக்காற்று எவ்வளவு அவசரமாக வந்ததோ அவ்வளவு அவசரமாகவே போய்விட்டது. போகும் வழியிலெல்லாம் கடலைப் படாதபாடு படுத்தி விட்டுப் போய்விட்டது.

சுழிக்காற்றுப் போய் விட்டது சரிதான்; ஆனால் அதனால் கடலில் ஏற்பட்ட கொந்தளிப்பு இலேசில் அடங்கிவிடாது. ஓர் இரவும் ஒரு பகலும் நீடித்திருந்தாலும் இருக்கும். அந்தக் கொந்தளிப்பின் வேகம் நெடுந்தூரம் பிரயாணம் செய்யும். கோடிக்கரையின் விஸ்தாரமான மணற் பிரதேசத்தையெல்லாம் கடல் ஏறி மூடி விடும். நாகப்பட்டினத்தின் கடற்கரை மீது பேரலைகள் மோதி இடித்துத் தகர்க்கப் பார்க்கும். இன்னும் அக்கொந்தளிப்பு காங்கேசன் துறை - திரிகோணமலை வரையில் பரவும். மாதோட்டத்தையும் இராமேசுவரத்தையும்கூட ஒரு கை பார்த்துவிடும்.

இளவரசர் முதலியோர் ஏறியிருந்த படகு அலைகளால் மொத்துண்டு மிதந்து கொண்டேயிருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் துடுப்பு வலிப்பதையும் நிறுத்தி விட்டார்கள். திக்கும் திசையும் தெரியாதபோது, கப்பல் எங்கே இருக்கிறதென்றும் தெரியாதபோது, துடுப்பு வலித்து ஆவது என்ன?

காற்று ஓய்ந்து விட்டது; மழை ஓய்ந்து விட்டது; இடியும் மின்னலும் நின்று விட்டன.

ஆனால் அலைகளின் ஆங்காரம் மட்டும் சிறிதளவும் குன்றவில்லை.

படகு அந்த அலைகளில் தத்தளித்துக் கொண்டேயிருந்தது.

சற்றும் எதிர்பாராத ஓர் அபாயம் அதை நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருந்தது. இதோ வந்துவிட்டது!

எரிந்த கப்பல் முழுகிற்றல்லவா? அப்போது முழுதும் எரியாத ஒரு பாய்மரம் அதிலிருந்து பிரிந்தது. கடலில் அது மிதந்து மிதந்து படகுக்கு அருகில் வந்தது. இருட்டின் காரணமாக வெகு சமீபத்தில் வரும்வரையில் அதை ஒருவரும் பார்க்கவில்லை.

பார்த்தவுடனே, ''துடுப்பு வலியுங்கள்! துடுப்பு வலியுங்கள்!'' என்று இளவரசர் கூவினார்.

அவர் கூவி வாய் மூடுவதற்குள் அந்தப் பாய்மரம் படகின் அடிப்பகுதியில் இடித்தது.

இடித்த வேகத்தில் படகு 'படார்' என்று பிளந்தது. முதலில் இரண்டு பகுதிகளாகப் பிளந்தது. பிறகு சிறிய சிறிய பலகைத் துண்டுகளாகப் பிளந்து சிதறியது.

''நண்பா! பயப்படாதே! இந்தப் படகைக் காட்டிலும் அந்தப் பாய்மரம் பத்திரமானது. தாவி அதைப் பற்றிக் கொள்!'' என்றார் இளவரசர்.

(தொடரும்)

# காதலும் காமமும்!

காதல் வேறு, காமம் வேறு என்பதாக இக்காலத்துப் புதுமைப் பண்டிதர்கள் கூறுகிறார்கள். "காதல் உயர்ந்தது, தெய்வீகம் வாய்ந்தது; காமம் தாழ்ந்தது, மிருகத்தன்மை பொருந்தியது" என்பது அவர்கள் சித்தாந்தம். ஒரு சமயம் ஒரு பத்திரிகையில் "காதற் கொலை" என்று ஒரு தலைப்புப் போட்டிருந்தார்கள். அதைக் கண்ட புதுமைப் பண்டிதராகிய எனது நண்பர் ஒருவர் "ஆஹா! என்ன முட்டாள்தனம்? காதலுக்கும், காமத்துக்கும் வித்தியாசம் தெரியாதவர்களெல்லாம் இக்காலத்தில் பத்திரிகாசிரியர்களாய் வந்து விடுகிறார்களே? காதலினால் கொலை விளையுமா? காமத்தினால் தானே அது விளையும். "காமக் கொலை" என்றல்லவா போட்டிருக்க வேண்டும்?" என்றார். நானும் அச்சமயம் அவருடன் சேர்ந்து அந்தப் பத்திரிகாசிரியரின் புத்தியீனத்தைக் குறித்துச் சிரித்தேன்.

காதலுக்கும் காமத்துக்குமுள்ள வேற்றுமையை வெகு நன்றாய் அறிந்தவன்போல் அந்த நண்பர்முன் நடித்தேனாயினும், பின்னால் எவ்வளவோ யோசனை செய்து செய்து மண்டையை உடைத்துக் கொண்டும் மயிரைப் பிய்த்துக் கொண்டுங் கூட அந்த வித்தியாசம் உண்மையில் எனக்குப் புலனாகவில்லை. முற்காலத்துக் காம சாஸ்திரங்களையும், காவிய நூல்களையும், இக்காலத்து இல்லற இரகசியப் புத்தகங்களையும், நாவல்கள் எனப்படும் நவீன காதல் சாஸ்திரங்களையும் கூடியவரையில் ஆராய்ந்து பார்த்துங்கூடப் பயன் படவில்லை. இவையெல்லாம் சேர்ந்து எனது மனக் குழப்பத்தை அதிகமாக்கியே விட்டன.

உதாரணமாக, விசுவாமித்திரர் மேனகை கதையை எடுத்துக்கொள்வோம். விசுவாமித்திரர் மூடியிருந்த கண்ணை விழித்தார். எதிரில் மேனகையைக் கண்டார். உடனே காதல் கொண்டார். "கண்டவுடனே காதல்" என்னும் கொள்கைக்கு இது மிகவும் பொருத்தமாயிருக்கிறது. நியாயமாக இவர்களுடைய கூட்டுறவை தெய்வீகக் காதலால் விளைந்ததாகக் கருதிப் போற்ற வேண்டும். அதற்குப் பதிலாக விசுவாமித்திரர் ஏதோ பெரிய தவறு செய்து விட்டதாகக் கொண்டு, "கௌசிகன் கெட்டதும் பெண்ணாலே" என்று பாட்டும் பாடிவிட்டார்கள். கௌசிகன் கெட்டது உண்மையானால், அது காதலினாலா? காமத்தினாலா?

வால்மீகி சொன்ன கதையை மாற்றி,



இராமரும் சீதையும் கலியாணத்திற்கு முன்பே ஒருவரையொருவர் வீதியில் கண்டு காதலித்ததாகக் கம்பன் கற்பனை செய்திருக்கிறான். பதினாறு வயதுப் பையனுக்கும் பன்னிரண்டு வயதுச் சிறுமிக்கும் எத்தகைய காதல் உண்டாயிற்றென்பது ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். "காதல் என்பது கலியாணத்திற்கு முன்பு தான் ஏற்படவேண்டும்" என்னும் கொள்கையினால்தான் கம்பன் இச்சம்பவத்தைப் புகுத்தியிருக்கிறான். ஆனால் இதில் பல அசந்தர்ப்பங்கள் இருக்கின்றன. வீதியோடுபோன பிரம்மச்சாரி இராமன், மாதர் உலாவும் மேல் மாடங்களை அண்ணாந்து பார்த்துக் கொண்டு போனது நியாயமா? சீதைமேல் விழுந்த அவன் பார்வை வேறொரு கோதை மேல் விழுந்திருந்தால் என்ன செய்வது? சீதைதானாகட்டும், வீதியில் போகும் புருஷன் ஒருவனிடம் காதல் கொண்டது எப்படி நியாயமாகும்? ஒருவேளை இராமன் ஏற்கெனவே கலியாணமானவனாயிருந்தால் அவனுடைய கதி என்ன? அல்லது சீதை வேறொருவன் மனைவியாயிருந்தால்?



சீதையின் காதல் போற்றுவதற்குரியதானால், சூர்ப்பணகையின் காதல் மட்டும் ஏன் நிந்திக்கப்பட வேண்டும் என்பது தான் எனக்கு விளங்கவேயில்லை. உண்மையில் சீதையின் காதலைவிட சூர்ப்பணகையின் காதலே இயற்கை விதிகளுக்குப் பொருத்தமாய்க் காணப்படுகிறது. அப்போது இராமர், சீதை இருவரும் குழந்தைகள். இப்போதோ இராமரும் சூர்ப்பணகையும் வயது முதிர்ந்தவர்கள். சீதை வீதியில் பல ஜனங்களுக்கிடையில் இராமரைப் பார்த்துக் காதல் கொண்டாள். சூர்ப்பணகையோ, இராமன் தன்னந்தனியனாய் நடுக்காட்டில் உட்கார்ந்திருந்தபோது அவனைப் பார்த்துக் காதல் கொண்டாள். சூர்ப்பணகையின் காதலும் கண்டவுடன் நிகழ்ந்த காதல்தான். அவள் விஷயத்தில் இடமும் காலமும் காதலுக்கு அதிகப் பொருத்தமானவையென்றும் சொல்லலாம். ஆயினும் சூர்ப்பணகைக்கு மட்டும் அபகீர்த்தி ஏன்?

சூர்ப்பணகை மூக்கும் காதும் அறுபட்டபின்னர், ஆற்றங்கரைக்குச் சந்தியா வந்தனம் செய்யப்போயிருந்த இராமன் திரும்பி வந்து அவளைப் பார்த்து "உனக்கு இந்தக் கதி எப்படி நேர்ந்தது?" என்று கேட்கிறான். அப்போது சூர்ப்பணகை,

அந்தோவுன் திருமேனிக்
கன்பிழைத்த வன்பிழையால்
எந்தாயான் பட்டபடி யிதுகாணென்
றெதிர்விழுந்தாள்.

-சூர்ப்பணகை செய்த தவறெல்லாம் இவ்வளவுதான். அதாவது இராமனிடம் அன்பு காண்பித்ததுதான். இராமன் ஏற்கெனவே கலியாணமானவனாதலால், சூர்ப்பணகையின் காதல் தவறு என்று சொல்லுதல் நியாயமாகுமா? இராமனுக்குச் சீதையொருத்தி இருக்கிறாள் என்பது முதலில் சூர்ப்பணகைக்குத் தெரியாது. மேலும் காதல் இயற்கையாக, தெய்வீகமாக விளைகிறதென்பது உண்மையாயின், இந்த வாதம் எப்படிப் பொருந்தும்? கலியாணமாயிற்றா, இல்லையா என்பதை விசாரித்துத் தெரிந்து கொள்ளும் வரையில் காதல் காத்திருக்குமா?

நாவல்களில் வருவதுபோன்ற காதல்

சம்பவங்கள் நமது வாழ்க்கையில் இல்லை யென்றாலும் அடியோடு காதல் இல்லாமல் போய்விடவில்லை. கல்யாணத்திற்குள்ளும் காதல் உண்டென்று சொல்வேன். பெற்றோர் பார்த்துக் கலியாணம் செய்து வைத்த தம்பதிகளுக்குள் காதல் இராது என்று புதுமைப் பண்டிதர்கள் சிலர் சொல்வார்கள். ஆனால் இது தவறாகும். ஒரு கதை கேளுங்கள்:-

ஒரு விதவை ஸ்திரீ தன் ஏக புத்திரனுக்குக் கலியாணம் செய்து வைத்தாள். அந்தப் பையனுக்குத் தன் மனைவியுடன் கூடிக் குலாவி சல்லாபமாயிருக்க வேண்டுமென்று மிக்க ஆசை. ஆனால் கிழவி அதற்கிடங்கொடுப்பதில்லை. பிள்ளைக்குச் சாப்பாடு அவளேதான் போடுவாள். இரவிலோ, நாட்டுப் பெண்ணைச் சமையல் அறையில் படுக்க வைத்துத் தான் வாசற்படியில் படுத்துக் கொண்டுவிடுவாள்.

பையனுக்குக் காதல் நோய் நாள் தோறும் முற்றி வந்தது. கடைசியில் ஒருநாள் அவன் ஒரு யுக்தி செய்தான். இரவு வெகு நேரங் கழித்து வந்தான். கிழவிக்கு மிகவும் தள்ளாமையாயிருந்தது. "அம்மா! சாதம் போடு!" என்றான். "இவ்வளவு நேரங் கழித்து வந்தாயே, அப்பா! உடம்பு தள்ளாமையாயிருக்கிறது. பழைய சாதம் எடுத்துக் குதிர் இடுக்கில் வைத்திருக்கிறேன். உன் பெண்டாட்டியைத் தான் போடச் சொல்" என்றாள் தாயார். "அந்தச் சனியன் கையாலா சாப்பிடச் சொல்கிறாய், அம்மா? உன் கையால் சாப்பிட்டால்தான் எனக்குத் திருப்தி" என்றான் பையன். "இன்று ஒரு நாளைக்குச் சாப்பிடப்பா! பாதகமில்லை" என்றாள் தாயார். "என்னமோ தொலைக்கச் சொல்லு" என்றான் புதல்வன்.

சமையலறைக் குதிரின் அடியில் இரண்டு பொந்துகள் இருந்தன. இரண்டு பொந்திலும் இரண்டு கற்சட்டிகள் இருந்தன. ஒரு சட்டியில் கிழவி பையனுக்காகச் சாதம் பிசைந்து வைத்திருந்தாள். மற்றொன்றில் எருமை மாட்டுக்காகப் பருத்திக்கொட்டை ஊறப் போட்டிருந்தாள். பெண்ணுக்குத் தன் புருஷனுடன் தனியாகப் பேசப் போகிறோமென்னும் சந்தோஷத்தில் தலை கால் தெரியவில்லை. சாதச் சட்டிக்குப் பதில் பருத்திக் கொட்டைச் சட்டியை எடுத்து வைத்துக் கொண்டாள். பையனோ பரமானந்தத்தில் மூழ்கியிருந்தான். மனைவி பருத்திக் கொட்டையைப் பிடிபிடியாக எடுத்துப் புருஷன் கையில் போட்டு வந்தாள். பையன் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டே அவ்வளவு பருத்திக் கொட்டையையும் சாப்பிட்டு விட்டான்!

கிழவி காலையில் எழுந்து பார்த்த போது பருத்திக்கொட்டைச் சட்டி காலியாயிருந்தது. "அடபாவி! அவ்வளவு பருத்திக் கொட்டையையும் எப்படியடா தின்றாய்?" என்றாள். "ஓகோகோ! அதனால் தான் இராத்திரி வயிறு வலித்தது போலிருக்கிறது. குறுவை அரிசிச் சாதமென்றல்லவா நினைத்தேன்?" என்றான் பையன்.

இது கதைதான் என்றாலும் நமது சமூகத்தில் இல்வாழ்க்கைக்குட்பட்ட காதல் நிலைமைக்கு இதுவே தக்க உதாரணம் என்று தோன்றுகிறது. ஆனால் காதற் புலவர்கள் இதைக் காதல் என்பார்களா,


The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil Weekly newspaper, are published, as called for by rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

**FORM IV**

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | : | Chennai |
| 2. Periodicity of Publication | : | Weekly |
| 3. Name of Printer | : | K. Rajendran |
| Nationality | : | Indian |
| Address | : | 1, 5th Street, Lake Area, Nungambakkam, Chennai - 600 034. |
| 4. Name of Publisher | : | K. Rajendran |
| Nationality | : | Indian |
| Address | : | 1, 5th Street, Lake Area, Nungambakkam, Chennai - 600 034. |
| 5. Name of Editor | : | Seetha Ravi |
| Nationality | : | Indian |
| Address | : | 'Mangala Ganesh', Second Floor, 15, IV Seaward Road, Valmiki Nagar, Thiruvanmiyur, Chennai - 600 041. |

6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital: **Bharathan Publications Private Limited, 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1.3.1999

K. Rajendran
Publisher

● ஜப்பானுக்கு வருகை தரும் அயல் நாட்டுப் பயணியர் எந்த இடத்திலிருந்தும் ''ஜப்பான் ஹெல்ப் லைன்'' என்ற அலுவலகத்துக்கு ஃபோன் செய்து உதவி பெறலாம். ஜப்பானில் ஆங்கிலம் தெரிந்தவர்கள் மிகவும் குறைவு. அதனால் ஜப்பானியர்கள் அயல்நாட்டவர்க்கு உதவ இந்த ஏற்பாடு செய்துள்ளனர்.

ஆதாரம்: 'பொதுச் செய்திகள் 1000

தகவல்: மலர் சூர்யா

காமம் என்பார்களா என்பதுதான் தெரியவில்லை.

இல்வாழ்க்கையில் நடைபெறும் காதல் சம்பவங்கள் அதிகமாய் வெளிக்கு வருவதில்லை. அவற்றில் மற்றவர்களுக்கு அதிக ரசமும் கிடையாது. ஆதலின் கலியாணத்துக்குப் புறம்பான இரண்டொரு காதல் சம்பவங்களைக் குறிப்பிடுகிறேன். கோபாலஸாமி என்பவர் சென்னையில் மாதம் 200 ரூபாய் சம்பளத்தில் உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தார். கேவலம் மனைவியிடம் காதல் கொள்வதில் இவருக்கு ருசி எதுவும் ஏற்படவில்லை. எனவே, சங்கீதகாலட்சேபங்களில் பெயர் பெற்ற சொர்ணாபாய் என்பவளிடம் காதல் கொண்டார். சென்னையில் அந்த அம்மாளுடைய கச்சேரி எங்கே நடந்தாலும் இவரை சபையில் முன்னணியில் காணலாம். ஓயாமல் தலையசைத்தும், பல்லை இளித்தும், சபாஷ் போட்டும், தமது ஆனந்தத்தை வெளியிட்டுக் கொண்டிருப்பார். கச்சேரியில்லாத நாட்களில் தினம் ஒரு முறை சொர்ணாபாயின் வீட்டுக்குச் சென்று அவளை ஜன்னல் மூலமாயாவது தரிசனம் செய்து விட்டு வருவார். ஆனால் சொர்ணாபாய்க்கு ஏற்கெனவே ஒரு காதல் நாயகன் இருந்தபடியால் இவர் மீது அவளுக்குக் கருணை பிறக்கவில்லை. ஒருநாள் சொர்ணாபாய் சென்னையிலிருந்து மதுரைக்கு ஒரு சங்கீதக் கச்சேரிக்காகச் சென்றாள். அவள் ரயிலேறிக் கிளம்பிய பிறகுதான் நமது கோபாலஸாமிக்கு விஷயம் தெரிந்தது. "ஆஹா! எனது சொர்ணத்தைப் பாராமல் எப்படி ஒருநாளாவது ஜீவித்திருப்பேன்!'' என்று எண்ணினார். உடனே 100 ரூபாய் வாடகை பேசி ஒரு ஸ்பெஷல் மோட்டார் வண்டி அமர்த்திக் கொண்டு புறப்பட்டார். வழியில் ரயில் பாதையும், மோட்டார் பாதையும் சேர்ந்தாற்போல் சென்ற ஓர் இடத்தில், சொர்ணாபாய் சென்ற ரயிலை கோபாலசாமியின் மோட்டார் சந்தித்தது. "அடி என் கண்ணே! உன்னைத் தொடர்ந்து நான் வந்து விட்டேனே?'' என்று கூவிக் கொண்டே கோபாலஸாமி மோட்டாரிலிருந்து ரயிலுக்குத் தாவ முயன்றார். கீழே விழுந்து காலை முறித்துக் கொண்டார். சொர்ணாபாய் மதுரைக்குப் போனாள். கோபாலசாமி ஆஸ்பத்திரிக்குப் போனார். அவருடைய உத்தியோகம் இராமசாமிக்குப் போயிற்று. கோபாலஸாமி சொர்ணாபாய்க்காக எவ்வளவு மகத்தான தியாகம் செய்தார் பாருங்கள்! ஆயினும், அவர் கொண்டிருந்த நேயம் காதலா? காமமா?

கோயமுத்தூரில் வேங்கடராகவன் என்று ஒரு மாணாக்கர் இருந்தார். இவருக்குத் திடீரென்று கலைமகளிடம் காதல் குன்றி, மிஸ் ரத்தினம் என்னும் விலைமகள்மீது காதல் பெருகிற்று. ஒருநாள் இவர் தமது தாயாருடைய நகைகள், உயர்ந்த பட்டுப் புடைவைகள் எல்லாவற்றையும் சொல்லாமல் எடுத்துக் கொண்டு போய் ரத்தினத்துக்கு அர்ப்பணம் செய்தார். இவர் தகப்பனார் வக்கீல். அவருக்கு விஷயம் தெரியவே, போலீஸாரின் உதவியுடன் சென்று ரத்தினத்தை மிரட்டி எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டு வந்து விட்டார். அதிலிருந்து வேங்கடராகவன் தூரத்தில் வரக்கண்டால், ரத்தினம் வீட்டுக் கதவைத் தடால் என்று சாத்தித் தாழ்ப்பாள் போடத் தொடங்கினாள்.

மிஸ் ரத்தினாம்பாள் பெரிய நாடகக்காரி என்றும் பெயர் பெற்றிருந்தாள். ஒருநாள் தாராபுரத்தில் நாடகம் என்றும், அதில் ரத்தினம் முக்கிய ஸ்திரீ பார்ட்டாக நடிப்பாளென்றும் வேங்கடராகவன் கேள்விப்பட்டான். தன் காதலியைக் கண்டு களிக்க இதுதான் சமயமென்று அவன் தாராபுரம் போய் "ஸோபா'' டிக்கட் வாங்கிக் கொண்டு, அரங்க மேடைக்கு அருகில் அமர்ந்தான்..

நாடகத்தின் நடுவில் காதலனும் காதலியும் இரகசியமாகச் சந்தித்துப் பேசும் கட்டம் வந்தது. அந்த இடத்திற்குரிய காதற்பாட்டுக்களை இருவரும் பாடி முடித்து, காதலன் காதலியை ஆலிங்கனம் செய்து கொள்ளப் போகிற சமயத்தில், வேங்கடராகவன் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து மேடை மீதேறி ரத்தினத்தைக் கட்டிக் கொண்டு விட்டான். இராஜ பார்ட்டுக்காரன் யாரை ஆலிங்கனம் செய்து கொள்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டு நின்றான். ஒரு நிமிஷ நேரம் நாடகமேடை அல்லோலகல்லோலமாயிருந்தது. பிறகு, அமைதி காக்க வந்திருந்த போலீஸ் சேவகர் மேடைமீதேறி வேங்கடராகவனைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து வெளியே தள்ளினார்கள்.

மறுநாள் வேங்கடராகவன் மோட்டார் பஸ்ஸில் ஏறி கோயமுத்தூருக்கு வந்தபோது வழியில் ஓர் அரச மரத்தடியில் பஸ் நின்றது. அம்மரத்தினடியில் புல்கட்டு விற்கும் சில ஸ்திரீகள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருத்தி தணலைத் தண்ணீரால் நனைத்ததுபோல் கன்னங்கரேலென்றிருந்தபடியால், வேங்கடராகவனுக்கு ரத்தினத்தை நினைவூட்டினாள்போலும்! "அடி ரத்தினம்! எனக்கு முன்னால் எப்படியடி வந்தாய்?" என்று கூவிக் கொண்டே பாய்ந்தான். பாவம்! அந்தப் புல்காரி மிரண்டே போனாள். அவன் மயிரை ஒருத்தியும், கையை ஒருத்தியும், துணியை ஒருத்தியுமாகப் பிடித்து இழுத்துத் தலைக்கு நாலு அறையும் கொடுத்து அனுப்பினார்கள்.

கலியாணம் செய்து வைக்காமல் போனால் பையன் இப்படித்தான் கெட்டலைவான் என்று எண்ணி வேங்கடராகவனுடைய தகப்பனார் அவனுக்கு விவாகம் செய்து வைத்தார். இப்போது வேங்கடராகவன் யோக்கியனாகிவிட்டான். கலாசாலைக்குப் போய் வந்ததும், மனைவியை அழைத்துத் தனக்குப் பக்கத்தில் நாற்காலியில் உட்கார்ந்து கொள்ளச் சொல்கிறான். ஏதாவது காரியம் இருக்கிறது என்று அவள் சொன்னால் ராகவனுக்குக் கோபம் வந்து விடுகிறது. "வீட்டில் கிழவி இருக்கிறாளே? அவளுக்கென்ன வேலை?" என்று கேட்கிறான். "நான் வீட்டிலிருக்கும்போது நீ என் பக்கத்தில் உட்கார்ந்திருக்க வேண்டியது. நான் வெளியில் போனால் நீ ஸோபாவில் படுத்து வாசித்துக் கொண்டிருக்க வேண்டியது. வேலையெல்லாம் அம்மாதான் செய்ய வேண்டும். நீ செய்யக் கூடாது!" என்று மனைவியைக் கண்டிப்பு செய்திருக்கிறான்.

ஆனாலும், யாராவது அந்தரங்க சிநேகிதர்கள் கேட்டால், "என்னதான் இருக்கட்டும், என்னுடைய ரத்தினத்துக்கு சமானம் ஆவார்களா? அவனைப் போன்ற பெண் இந்தப் புவியிலேயே கிடையாது" என்கிறான். என்ன சொல்கிறீர்கள்? வேங்கடராகவன் கொண்டிருந்தது காதலா, காமமா?

இந்தக் கட்டுரை எதற்காக எழுத ஆரம்பித்தேன் என்பதே ஞாபகமில்லை. இந்தக் காதல் விஷயமே இப்படித்தான். அதைப் பற்றிப் பேசினாலே மனங் குழம்பிவிடுகிறது. ஆகா! ஞாபகம் வந்தது. எந்த நீதியைக் கற்பிப்பதற்காக இதை எழுதத் தொடங்கினேன் தெரியுமா? அதை நான் எடுத்துச் சொன்னாலொழிய உங்களுக்கு விளங்கப் போவதில்லை. ஏனெனில், உங்கள் மனமும் இதற்குள் குழம்பித்தான் போயிருக்கும். என் கொள்கையைச் சொல்கிறேன், கேளுங்கள்:- "காதல், காமம் என்பதெல்லாம் ஒன்றுதான். சாதாரண சிநேக பாவத்துக்கும், சகோதர பாவத்துக்கும் மேற்பட்டு விட்டால் அது காமமேயாகும். காமம் என்பது ஆண்களுக்கும், பெண்களுக்கும் இயற்கையாக உண்டாகும் மனக்கிளர்ச்சி. அறிவுள்ளவர்கள் அதை அடக்கி ஆண்டு நியாய வரம்புக்குட்படுத்துவார்கள்.. அவ்வாற்றல் இல்லாதவர்கள் வெறி கொண்டு திரிவார்கள். சமூக வாழ்க்கை சீர்கெடாமல் நன்கு நடைபெற வேண்டுமாயின், காதல் இல்வாழ்க்கையோடியைந்திருக்க வேண்டும்." ●

**(ஆனந்தவிகடன், 16.7.1931)**

# இன்றைய மங்கையர் எல்லா இடங்களிலும் அருஞ்செயலாற்றி சீரும் சிறப்புமாய்த் திகழ்கின்றனர்.



இன்றைய மங்கையரிடம் பாதுகாப்பிற்கு சேமிக்கும் இயல்பான செயல்பண்புடன் வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சமும் பிரதிபலிக்கின்றன.

எல் ஐ சி-யின்

## ஜீவன் ஸ்நேஹா

தனிப்பட்ட முறையில் இன்றைய மங்கையர்கான பாலிஸி

**சிறப்பு அம்சங்கள்:**

- விருப்பபடி பணமாக மாற்றிப் பெறும் வசதியுடன் கூடிய காப்பீடு செய்த தொகையின் காலத்தோறுமான வருமானம். எல்ஐசி-யில் வைத்திருந்தால் கவர்ச்சியான ஆதாயங்கள்.
- ஆண்டொன்றுக்கு காப்பீடு செய்த ஒவ்வொரு ஆயிரம் ருபாய்க்கும் ரூ.70/- என்ற வீதம் கேரன்டி அடிஷன்களாக கூடுதல் தொகையும் மற்றும் காப்பீடு செய்த ஒவ்வொரு ஆயிரம் ருபாய்க்கும் ரூ.55/- முதல் ரூ.535/- என்று மாறுபடும் வீதம் லாயல்ட்டி அடிஷனாகவும் கார்ப்பரேஷனின் பணி அனுபவம் மற்றும் காப்பீடு செய்துள்ள தொகையையும் பொறுத்து செலுத்துவதற்கான தன்விகரற்ற ஏற்பாடு உள்ளது.
- சில சூழ்நிலையின் கீழ் பிரிமியம் கட்டாதிருப்பினும் ஆயுள் காப்பீடு தொடரும்.
- பிரிமியம் செலுத்துவதில் சலுகை - தள்ளுபடியுடன் முன்னதாக பிரிமியம் செலுத்தும் வசதி.
- கர்ப்பமடைந்திருப்பவர் பாதுகாப்புக்கான மற்றும் குழந்தை பிறப்பு இடர்பாடுக்கான வழிவகை ஏற்பாடு—விபத்து ஆதாயத்தோடு கூட, கூடுதல் கட்டணமின்றி.
- முதிர்வின் பேரில் ஓய்வூதியத்திற்கான (ஆண்டளிப்பு) வழிவகை ஏற்பாடு.



**லைஃப் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா**

*மக்களின் மகத்தான சேவையில்*

Please visit us at www.licindia.com

SAS/LIC/99-R/TAM



மதுராந்தகத்தில் இறங்கி 'ஜமீன் எண்டத்தூர்' என்ற அந்த ஊரின் பெயரைச் சொன்னாலே, 'வெளங்காத ஸ்கூல் ஒண்ணு இருக்கே. அந்த ஊரா' என்று கேட்கிறார்கள். மதுராந்தகத்திலிருந்து கடலூர் செல்கிற சாலையிலிருந்து விலகி இரண்டு கிலோ மீட்டர் உள்ளே தள்ளி ஒதுக்குப்புறமாய் இருக்கிறது ஜமீன் எண்டத்தூர். ஒழவேட்டி, மருவளம், சின்னவெண்மணி, கல்பட்டு, பெரிய வெண்மணி, சிரல்வாடி, தென்னம் பட்டு, மேலக்கண்டை என்று சுற்றிலுமுள்ள ஊர்களில் இருக்கும் பிள்ளைகள் பத்தாவது வரை படிக்க, ஜமீன் எண்டத்தூரிலிருக்கும் அரசினர் உயர்நிலைப் பள்ளிக்குத்தான் வரவேண்டும்.



• பாலகிருஷ்ணன்



• வெங்கட பெருமாள்

ஆனால், 1989–90, 1990–91, 1991–92 ஆகிய மூன்று வருடங்களில் பத்தாவது பரீட்சை எழுதிய இந்தப் பள்ளி மாணவர்கள் யாரும் பாஸாகவில்லை! அடுத்து வந்த வருடங்களிலும் பாஸான வர்கள் எண்ணிக்கை 3 அல்லது 4 என்றே இருந்து வந்திருக்கிறது! சென்ற வருடம் எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சை எழுதிய 31 மாண வர்களில், ஒரு மாணவன் மட்டுமே பாஸ்! இதற்கெல்லாம் என்ன காரணம்?

"இந்த ஊரு ஸ்கூலுக்கு வர்ற வாத்தியாரு யாரும் நெரந்தரமா வேலை பாக்க மாட் டேங்குறாங்க. ட்ரான்ஸ்பர் வாங்கிட்டுப் போயிடறாங்க. அதனாலதான் புள்ளைங்க பாஸாக மாட்டேங்குது" என்கிறார் ஊரில் கால் வைத்ததும் நம் கண்ணில் பட்ட சடையன். கூட்டுறவு சங்கத்தில் வாட்ச் மேனாக இருப்பவர்.

"நான் 1985–ல இங்கதாங்க பத்தாவது படிச்சேன். அப்போ எங்க செட்டுல ஒம்பது பேரு. எட்டுப் பேர் பெயிலாயிட்டோம். நாங்க படிக்கிறப்போ கூட, வாத்தியார் பற்றாக்குறைதான். எல்லா சப் ஜெக்டுக்கும் ஒரே வாத்தியார். அப்புறம் எப்படி படிப்பு வரும்? அதுவு மில்லாம, வர்ற வாத்தியாருங்க வாத்தியாரா மட்டும் இருக்கறதில் லைங்க. நான் படிக்கிறப்போ ஒரு பி.டி. மாஸ்டர் இருந்தாரு. வேஸ்ட் பேப்பர்லாம் சேர்த்து வச்சுக்கிடுவாரு. எங்களையும் சேக்கச் சொல்லுவாரு. அப்புறம் மொத்த பேப் பரையும் கடைல போட்டுட்டு, சிகரெட் வாங்கிட்டு வரச் சொல்லி பசங்களும் வாத்தியாரும் ஒண்ணா பிடிப்பாங்க. அப் புறம் எப்படிங்க உருப்படும்?" என்று கேட் டார் ஆறுமுகம் என்கிற உள்ளூர்வாசி.

"என்மகன் சுரேஷ் இந்த ஸ்கூல்லதான் பத்தாவது படிக்கிறான். இந்த வருஷம் என்ன ஆகுமோ தெரியலை. இங்க இருக்குற ஸ்கூலுக்கு வர்றதுன்னாலே வாத்தியாருங்க பயப்படறாங்க. அதுக்குக் காரணம் பஸ் வசதி கிடையாது. மெயின் ரோட்லருந்து இறங்கி ஊருக்கு 2 கி.மீ. நடந்து வரணும். இப்போ இரண்டு பஸ் ஊருக்குள்ள வருதுன்னு பேரு. அதுவும் சரியான டயத்துக்கு வர்றதில்ல. வாத்தியாருங்க என்ன பண்ணுவாங்க!" என்றார் ஏழுமலை.

டெய்லர் கடை வைத்திருக்கும் மாரிமுத்து, "நான் இந்த ஸ்கூல்ல '97ல

# பள்ளித் தலைமணைத்தும் கல்வி வளர்ப்போம்!





ரிசல்ட் வரும்னு தான் நினைக்கிறேன்."

சமூக அறிவியல் ஆசிரியர் பாலகிருஷ்ணன், "அடிப்படை வசதிகள் எல்லாம் நிறைவேறிட்டாலே போதுங்க. இந்த ஸ்கூல் நல்ல பேரு வாங்கும். ஒரு நல்ல லேப் இல்லை, பசங்க விளையாட கிரவுண்ட் இல்லை. தண்ணி வசதி இல்லை. டாய்லெட் வசதி கூட இல்லை. ஒண்ணாவதுலருந்து அஞ்சாவது வரைக்கும் ஒரே டீச்சர். அவங்க என்ன செய்வாங்க பாவம்? எல்லா பசங்களையும் ப்ரமோட் பண்ண வேண்டிய சூழ்நிலை. அதுக்கப்புறம் 6,7,8 வகுப்புகள்லயும் டீச்சர்ஸ் இல்லாம பாஸ் போட்டுர்றோம். பத்தாவதுல வந்து தான், பசங்க திணறுறாங்க. இன்ஸ்பெக்ஷனுக்கு வர்றவங்கிட்டயும் இதை சொல்லித்தான் பாக்குறோம். கரண்ட் வசதி கூட இல்லாத ஸ்கூலுங்க இது" என்றார்.



• சடையன்



• ஆறுமுகம்

பத்தாவது படிச்சேன். இங்கிலீஷ், கணக்கு சொல்லிக் கொடுக்க வாத்தியாரே இல்லை. பெயிலாயிட்டேன். இப்போ டெய்லரிங் பண்றேன்" என்றார் சோகமாக.

"என் மகன் விநாயகம் இங்கதாங்க பத்தாவது படிக்கிறான். பக்கத்துல வேற எதுவும் ஸ்கூல் இல்லாததுனால இங்க சேத்துருக்கேன். இந்த வருசம் புதுசா வாத்தியாருங்க வந்திருக்காங்க. பார்ப்போம்" என்றார் முருகேசன் நம்பிக்கையுடன்.

ஜமீன் எண்டத்தூருக்கு நாம் போயிருந்த சமயம், ஊராட்சி ஒன்றியத் தலைவர் சகாதேவன், துணைத் தலைவர் செல்வராஜ் இருவரும் ஊரில் இல்லை. பள்ளிக்குச் சென்று பார்த்தோம்.

கண்ணாம்பைப் பார்த்து வருடக் கணக்கான சுவர்களுடன், மண்டையைப் பிளக்கிற வெயிலைத் தாங்கிக் கொண்டு பள்ளிக் கட்டடம். 1964–ல் துவக்கப்பட்ட இந்தப் பள்ளியில் அடிப்படை வசதிகள் இருப்பதற்கான அறிகுறி கூட இல்லை. தலைமையாசிரியர் கூட இல்லாத பள்ளி என்கிற பெருமையும் இதற்கு உண்டு! தற்போதைய பள்ளி இன்சார்ஜ் ஆக இருப்பவர் வெங்கட பெருமாள்.

"96லிருந்து ஹெச்.எம். போஸ்ட் காலியாத்தாங்க இருக்கு. இங்க வர்ற வாத்தியாருங்கல்லாம் ட்ரான்ஸ்பர் வாங்கிட்டு போறதையே குறிக்கோளா வச்சிருக்காங்க. இப்போ ஸ்கூல்ல மொத்தம் 303 பேர் படிக்கிறாங்க. போன வருஷம் டீச்சரே இல்லை! இப்போதான் புதுசா அப்பாய்ண்ட் பண்ணி மொத்தம் எட்டு டீச்சர்ஸ் வந்திருக்காங்க. இன்னும் ரெண்டு போஸ்ட் காலியாத்தான் இருக்கு. இந்த வருஷம் எப்படியும் எஸ்.எஸ்.எல்.சி.ல நல்ல

பாலகிருஷ்ணன், பள்ளியின் மைதானத்தையும், 'டாய்லெட்' என்று அழைக்கப்படும் சிற்று மறைப்பையும் நமக்குக் காட்டினார். எளிதில் சரி பண்ண முடியாத மொட்டைக் கரடு மைதானம், கள்ளிச்செடி, முட்புதர்களுடன் காட்சியளித்தது.



• ஏழுமலை

இந்த வருடம் பத்தாவதில் இங்கே 33 பேர் படிக்கிறார்கள். ரிஸல்ட் பற்றிய கவலையுடன்தான் உலவுகிறார்கள்.



• முருகேசன்

அதெல்லாம் கிடக்கட்டும்; முதல்வரும் நாமும் தமிழில் இன்டர்நெட் இணையம் அமைப்பது பற்றிப் பேசிக் கொண்டிருப்போம்.

**—கே. பாலசுப்ரமணியன்,**

படங்கள்:

**ராதாகிருஷ்ணன்**



• மாரிமுத்து

— சொல்கிறார் பார்த்திபன்

முதலில் கொஞ்சம் 'டல்' அடித்து, பின் கலெக்ஷனில் சூடுபிடிக்கும் சினிமாக்களை 'லேட்-பிக்அப்' என்று குறிப்பிடுவார்கள். வாழ்க்கையே எனக்கு 'லேட்-பிக்அப்' ஆகத்தான் தொடங்கியது. அதாவது ஐந்தாம் வகுப்பில்தான் நான் ஏ,பி,சி,டி படிக்க ஆரம்பித்தேன்.

ஒன்பதாம் வகுப்பு வரை ஆங்கிலம், ரொம்பவே என்னை அழவைத்தது. மற்றப் பாடங்களெல்லாம் புரியும். தேர்வுகளில் நல்ல மதிப்பெண் வாங்கி விடுவேன். ஆனால் ஆங்கிலம்தான் பூதம் போல் மிரட்டிக் கொண்டிருந்தது.

பி.யூ.சி.யில் எலக்டிவ் இஞ்சினியரிங் படிக்கச் சந்தர்ப்பம் கிடைத்தது. கணக்கு நன்றாகப் போட வரும். ஆனாலும் ஆங்கிலம் இடிக்குமே? உயிரை விட்டுப் படிப்பேன். என் தகுதிக்கும் திறமைக்கும் மீறிய உழைப்பைப் படிப்புக்குத் தந்தேன். ஒருவகையில் ஆங்கிலம் தெரியாமல் அந்த எலக்டிவ் இஞ்சினியரிங் படிக்க முனைந்ததுதான் என் போராட்ட வாழ்வின் ஆரம்பம் என்று சொல்லலாம்.

எடுத்த காரியம் எத்தனை சிரமமாயிருந்தாலும் முடித்து விட வேண்டும் என்கிற வெறி எனக்கு இயல்பிலேயே இருந்ததால் நல்ல மதிப்பெண்களுடன் தேர்ச்சி பெற்றேன். இஞ்சினியரிங்கில் அறிமுகம் கிடைத்திருந்ததல்லவா? அதனால் அடையாறு பாலிடெக்னிக்கில் சேர்ந்தேன்.

அஞ்சல் துறையில் வேலை பார்த்து வந்தார் என் தந்தை. கைக்கும் வாய்க்கும் சரியாக இருக்கும், அவரது சம்பளம். ஆனால் என் மேற்படிப்பு தொடங்கிய போது குடும்பம் வறுமைக்கோட்டுக்குக் கீழே சூப்பர்சானிக் வேகத்தில் பயணமாகத் தொடங்கியது. என் படிப்பையே ஓர் அலங்கார விஷயமாகக் கருத வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது.

மிகுந்த மனவருத்தத்துடன் இஞ்சினியரிங் கனவுகளுக்கு விடைகொடுத்துவிட்டு, சினிமாக் கனவுகளில் மூழ்க ஆரம்பித்தேன்.

எப்படி வந்தது சினிமா ஆசை? பலமுறை யோசித்தும் இதற்குச் சரியான காரணம் புலப்படவில்லை. என் சித்தப்பா ஒருவர் சினிமா கம்பெனி கார் டிரைவராக இருந்தார். ஓரிருமுறை இரவு ஷூட்டிங் பார்க்க அழைத்துப் போய், திரும்புகையில் புகாரியில் பரூடா வாங்கித் தந்திருக்கிறார்.

அதனாலா? தெரியவில்லை. ஆனால் ஒரு நடிகனாக வேண்டும் என்கிற ஆசை கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து, கனவாகி, என் தூக்கத்தைக் கெடுத்து, ஒருவித பித்துநிலைக்குக் கொண்டு போனபோது எனக்குப் பதினேழு, பதினெட்டு வயது இருக்கும். அந்த வயதில் எனக்குக் காதல் அனுபவங்கள் ஏதும் கிடைக்கவில்லை. மனத்தில் சும்மா நினைத்துப் பார்க்கக் கூட ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுக்கவில்லை. மாறாக, சினிமா என் சிந்தனையை ஆக்கிரமித்திருந்தது. நான் ஒரு நடிகனாக

வேண்டும்.

என் விருப்பத்தை வெளிப்படுத்தியபோது என் தந்தை அதை எதிர்கொண்டவிதம் இன்னமும் வியப்புக்குரியதாக இருக்கிறது.

"நீ எதுவாக விரும்பினாலும் உன்னால் முடியும்! கண்டிப்பாக ஜெயிப்பாய்!" என்று நம்பிக்கையையும் ஆசியையும் ஒன்றாக வழங்கினார் என் தந்தை. அது மட்டுமல்ல; வாய்ப்புத் தேடி நான் அலைய ஆரம்பித்த போது வழிச் செலவுக்குப் பணமும் தருவார்! சுகமான சுமையாகக் கருதியிருப்பார் போலும்.

ஆனால் இது எனக்கு மிகவும் உறுத்தியது. நம்மால் உருப்படியாக வீட்டுக்கு ஏதும் செய்ய இயலாத நிலையில் அப்பாவிடம் காசு வாங்கிக் கொண்டு வாய்ப்புத் தேடி அலைவது கொலைபாதகமாகத் தோன்றியது.

காலனியில் 'உண்மை உறங்காது' என்று நானே ஒரு நாடகம் எழுதி, நடித்து, நடத்தினேன். இப்போதும் என்னிடம் அந்த ஸ்கிரிப்ட் இருக்கிறது. கதை, திரைக்கதை, வசனம், இணை இசை, இயக்கம் என்று வரிசையாகப் பொறுப்புகளை அடுக்கி, அடியில் என் பெயரைப் போட்டுக் கொள்வதில் அப்போதே ஒரு சுகம்!

அந்த நாடகத்தின் இறுதியில் நான் இறப்பதாக ஒரு காட்சி வரும். மேடையில் நான் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு அப்படியே தடாலென்று விழுந்தேன்.





உண்மையிலேயே எனக்கு என்னவோ ஆகிவிட்டதென்று காலனிவாசிகள் அலறிக் கொண்டு ஓடி வரும்படி இருந்தது என் நடிப்பு. நாடகங்களில் நடித்து ஏதாவது சம்பாதிக்கலாம்; அப்படியே நம் நடிப்பைப் பார்த்து சினிமாக்காரர்கள் கொத்திக் கொண்டு போய்விடுவார்கள் என்ற எண்ணம் எழுந்தது.

பல இடங்களுக்கு அலைந்து, இறுதியில் எஸ்.வி. ராமதாஸ் என்கிற வில்லன் நடிகரின் நாடகக் குழுவில் ஒருவாறு இடம்பிடிக்க முடிந்தது.

அவரது நாடகமொன்றில் ஒரு சாதாரண பட்லர் வேஷம் கிடைத்தது. கதையில் அதிக முக்கியத்துவமில்லாத, 'சும்மா வந்து போகிற' வேஷம். ஆனால் அதையும் மிக அக்கறையாக, கவனமாக, நான் மேடைக்குள் நுழைகிற காட்சி, மக்கள் மனத்தில் பதிகிறவிதமாக ஏதாவதொரு புதுமை செய்தபடி அமைத்துக் கொள்வேன்.

எனக்கு அவசியமே இல்லையெனினும் முழு நாடகத்தின் வசனங்களையும் மனப்பாடம் செய்து வைப்பேன். நடிகர்கள் வசனம் மறந்து போகும் போது எடுத்துத் தருவேன். என் பட்லர் கேரக்டரை வீரபாண்டிய கட்டபொம்மன் ரோல் மாதிரி ஒருவித தீவிரத்துடன், அதிகபட்ச சிறப்பாக நடிக்கப் பார்ப்பேன்.

மூன்று நான்கு வருடங்கள் அவரது குழுவில் நடித்துக் கொண்டிருந்தேன். நான் எதிர்பார்த்தபடி எந்த சினிமாக்காரர்களும் வந்து பார்த்து, வியந்து என்னை அள்ளிக் கொண்டு போகவில்லை. காரணம், அந்த நாடகம் செங்கல்பட்டுக்குத் தெற்கில் மட்டும் தான் நடந்தது. சென்னைப் பக்கம் எட்டிக் கூடப் பார்க்கவில்லை.

ஒரு நாடகத்துக்குப் பதினைந்து ரூபாய் சம்பளம் தருவார்கள். மூன்று ஷோக்கள் தொடர்ந்து நடித்து முடித்தால் இருபத்தைந்து ரூபாய் தருவார்கள்! வினோதமாக ஏதோ ஒரு கணக்குப் போட்டுத் தந்த சம்பளமும் கட்டுப்படியாகவில்லை. விட்டு விட்டு வந்து விட்டேன்.

**கா**லை ஏழு முப்பதுக்கு தினமும் மயிலாப்பூரில் டைரக்டர் பாலசந்தரின் வீட்டு வாசலுக்குப் போய் நிற்பேன். அவர் பார்வை படும்; நல்ல காலம் பிறக்கும் என்கிற எதிர்பார்ப்பு.

அவரது கார் வெளியே வரும் போது குறுக்கே பாய்ந்து விடலாம்; சினிமா போல் சடன் ப்ரேக் போட்டு வண்டியை நிறுத்தி, இறங்கித் திட்டி விட்டு, பிறகு என் பரிதாப நிலையையும் திறமையையும் கண்டு ஒரு வாய்ப்புத் தருவார்; ஒரே நாளில் இன்னொரு ரஜினியாகி விடலாம் என்றெல்லாம் கனவு காண்பேன்.

ஆனால், காரின் குறுக்கே விழுவதற்கல்ல; அவர் வரும் பாதை ஓரம் – கண்ணில் படும்படி நிற்பதற்குக் கூடக் கூச்சப்படுவதே என் இயல்பாயிருந்தது. தினம் தினம் போய் நிற்பேனே தவிர, ஒருநாள் கூட அவரை எதிர்கொள்ளத் தெம்பு வந்ததே இல்லை! கனவுகளைக் கலைத்துக் கொள்ள விரும்பாமல் திரும்பி விடுவேன்.

ராமதாஸ் நாடகக் குழுவில் கொஞ்ச நாள் குப்பை கொட்டிய அனுபவம் எனக்கு தொலைக்காட்சி, ரேடியோ நாடகங்களில் வாய்ப்புப் பெற ஓரளவு உதவி புரிந்தது. மதுவிலக்குப் பிரசாரமா? குடும்பக் கட்டுப்பாடா? எத்தனைவிதமான பிரசார நாடகங்கள் உண்டோ, அத்தனையிலும் நடித்தேன். தொலைக்காட்சியில் இருந்த தஞ்சைவாணன், ஒரு நாடகத்தை எழுதி நடிக்க எனக்கொரு வாய்ப்புத் தந்தார். எத்தனை அருமையான வாய்ப்பு! திறமையாகப் பயன்படுத்திக் கொண்டேன்.

**இ**ந்தக் காலகட்டத்தில்தான் பாக்யராஜ் சாரின் வளர்ச்சியை நான் கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தேன். அவரும் வெறும் கனவுகளுடன் வந்தவர்தான். முட்டி மோதி அஸிஸ்டெண்ட் டைரக்டராகி, வசனகர்த்தவாகி, பிறகு இயக்குநருமாகி, இப்போது தாமே நடித்து இயக்கும் அளவுக்கு உயர்ந்திருக்கிறாரே! கிராமத்திலிருந்து வந்தவர் சாதித்திருக்கிறார். எப்படி முடிந்தது? அவரது வெற்றியின் சூட்சுமம் என்ன என்று யோசித்துப் பார்த்தேன். கடும் உழைப்பு, தளராத முயற்சி தவிர வேறு காரணம் தெரியவில்லை.

இனி நாம் பாக்யராஜிடம் முட்டி மோதுவோம் என்று முடிவு செய்தேன்.

ஆனால் என் கூச்சம் இங்கும் என்னைத் தொடர்ந்து செயல்பட இயலாதவண்ணம் தடுத்தது. எப்போதாவது ஒருதரம்தான் அவரைப் போய்ப் பார்ப்பேன். நடிக்க வாய்ப்புக் கேட்பேன். அதற்குள் வியர்த்து விறுவிறுத்து விடும்.

அவர் அன்பாக வரவேற்பார்; பேசுவாரே

தவிர வாய்ப்புத் தரமாட்டார். அடுத்தப் படம், அடுத்தப் படம் என்று தள்ளிக் கொண்டே போகும்.

இன்று சினிமாவில் அதிரடியாக வசனம் பேசுகிறேன், தடாலடியாக கமென்ட் அடிக்கிறேன், இண்டல் பாட்டுப் பாடுகிறேன், கிழ வேஷம் போடுகிறேனே தவிர, இயல்பில் என் கூச்சம் எப்படிப்பட்டது என்பதை வார்த்தையால் விவரிக்கவே முடியாது. எனக்கு என்ன வேண்டும் என்பதை எடுத்துச் சொல்லிக் கேட்கக் கூட என்னால் இயலாது.

அவர் முந்தானை முடிச்சு படத்தை முடித்து விட்டு அடுத்தப் பட டிஸ்கஷனில் இருந்த நேரம். இப்போதும் போனேன். ஆனால் நடிக்கிற ஆசை சற்று வற்றிப் போயிருந்தது. நாடகங்கள் எழுதிய அனுபவம், எனக்கு வேறுவிதமான ஈடுபாட்டை உண்டாக்கியிருந்தது.

இம்முறை என்னைப் பார்த்ததும் பாக்யராஜ், "இந்தப் படத்துல நீ நடிக்கறே மூர்த்தி" என்றார்.

நியாயமாக நான் துள்ளிக் குதித்திருக்க வேண்டும். மாறாக, "வேணாம் சார். எனக்கு நடிக்க விருப்பமில்லை. உங்க அஸிஸ்டென்ட்டா சேர்த்துப்பீங்களா?'' என்று கேட்டு விட்டேன்.

அவர் என்னை உற்றுப் பார்த்தார்.

''அஸிஸ்டென்டா சேரணும்னா கதை சொல்லத் தெரியணும். நீங்க கதை சொல்லுவீங்களா?" என்றார்.

''சொல்லுவேன் சார். அற்புதமான கதையெல்லாம் வெச்சிருக்கேன்."

''அப்ப ஒண்ணு பண்ணுங்க. நேரா நாளைக் காலை பாம்குரோவ் ஹோட்டலுக்கு போங்க. அங்க என் அஸிஸ்டென்ட்ஸ் இருப்பாங்க. அவங்ககிட்ட கதை சொல்லுங்க. அவங்களுக்குப் பிடிச்சிருந்ததுன்னா என்கிட்ட சொல்லுவாங்க. நீங்க என்கிட்ட சேரலாம்!'' என்றார்.

மறுநாள். மிகுந்த எதிர்பார்ப்புடன் பாம்குரோவ் போனேன். வாசலிலேயே எனக்குப் பேரதிர்ச்சி காத்திருந்தது.

ரேஷனில் அரிசிக்கு நிற்கிற க்யூவை விடச் சற்று அதிகமான க்யூ ஒன்று அங்கே கதை சொல்லக் காத்திருந்தது. இன்றைக்குப் பிரபல இயக்குநர்களாக விளங்கும் கதிர், ஆர். வி. உதயகுமார் எல்லோரும் அன்று அந்த க்யூவில் நின்று கொண்டிருந்தனர்.

அத்தனை கூட்டத்தைப் பார்த்ததுமே என் ஆர்வம் பாதி விழுந்து விட்டது.

ஒவ்வொருவராக உள்ளே போவதும் கதை சொன்ன வேகத்தில் திரும்பி வருவதுமாக இருந்தார்கள். என் முறை வந்தது. போனேன்.

'சந்தோஷ நேரங்கள்' என்றொரு ஸ்கிரிப்டைச் சொன்னேன். பாக்யராஜ் ஹீரோவாக நடித்தால் கதை எப்படி இருக்க வேண்டும் என்று யோசித்து, முன்பே நான் தயார் செய்து வைத்திருந்த ஸ்கிரிப்ட் அது.

சொல்லி முடித்தேன். 'போய் வாருங்கள். பிறகு சொல்லி அனுப்புவோம்' என்றார்கள்; வந்து விட்டேன்.

இந்த முறை தோற்றால், டைரக்டர் கே. விஸ்வநாத் வீட்டில் ஏதாவது எடுபிடி வேலை செய்யச் சேர்ந்து விடுவது; அப்படியே அவரிடம் கதை சொல்லி, இம்ப்ரஸ் செய்து அவர் மூலம் சினிமாவில் நுழைவது என்று அடுத்தக் கட்ட திட்டம் கூடத் தயார்.

ஆனால், நான் எதிர்பாராத கணத்தில் பாக்யராஜ் ஆபீஸிலிருந்து கூப்பிட்டு அனுப்பினார்கள்.

போனேன். டைரக்டர் பேசினார் : "நீங்க சொன்ன கதை நல்லா இருந்ததா என் அஸிஸ்டென்ட்ஸ் சொன்னாங்க. வாங்க. நீங்களும் சேர்ந்துக்கலாம். ஆனா ஒரு விஷயம். இருபத்தி நாலு மணி நேரமும் இப்ப எடுத்துட்டிருக்கற படத்து மேலதான் உங்க கவனம் இருக்கணும். சம்பளம் குறைச்சலாத்தான் இருக்கும் முதல்ல. நடைமுறைல வரக்



கூடிய சிக்கல்களைப் பெரிதுபடுத்தக் கூடாது. சம்மதமா?"

நான் இரண்டு நிமிடங்கள் யோசித்தேன். டீவி, ரேடியோ நாடகங்களை மறந்து விடுவது என்று முடிவு செய்தேன். எப்பேர்ப்பட்ட வாய்ப்பு! சரியாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமே என்று படபடப்பாக இருந்தது.

"சரி சார்" என்று பதில் சொன்னேன்.

தாவணிக் கனவுகளில் பணியாற்ற ஆரம்பித்தேன்.

சினிமாவில் புதிதாகச் சேரும் அஸிஸ்டெண்ட் டைரக்டர்களுக்கு இன்னவிதமாகத்தான் பிரச்னை வரும் என்று சொல்ல முடியாது. சகலவிதமான சகஸ்ரநாம அர்ச்சனைகளுக்கும் தயாராக இருக்க வேண்டும்.

**'ஷவர் டாக்' செய்யுங்கள்!**

**உடல் உபாதைகள் மட்டுமின்றி, மன பாரமும் குறைய ''ஷவர் டாக்'' மிகவும் பயன் தரும் என்று மேல் நாடுகளில் ஆய்வு செய்து நிரூபித்துள்ளனர். ஷவரைத் திறந்து விட்டுக் குளிக்கும் போதே, ''என்னிடம் தோஷ் இல்லை'' என்றோ, ''என் மனம் அமைதியாக இருக்கிறது'' என்றோ திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே நீரில் நனைய வேண்டும். இதனால் நோயின் கடுமை படிப்படியாகக் குறைந்து விரைவில் குணமாகவும் செய்யும்.**

**வலம்புரி ஜான் உரையில் கேட்டவர்:**
**பத்மா தேசிகன்**



ஹோட்டல் அறையில் டிஸ்கஷன் நடக்கும். காலை - அதிகாலையே நான் ஹோட்டல் வாசலுக்குப் போய் விடுவேன். மற்ற சீனியர் அஸிஸ்டெண்டுகள் வாசலில் கூட்டமாக நின்றிருப்பார்கள். புதிதாகச் சேர்ந்தவன் எப்போதுமே வேற்று கிரக ஜீவராசிதான். கலபத்தில் ஏற்க மாட்டார்கள்.

டைரக்டர் வருவார். ஒரு பார்வை பார்த்து விட்டு, 'வா உள்ளே' என்று சொல்லி விட்டுப் போய் விடுவார்.

சீனியர்கள் உள்ளே போகும் போது நானும் நுழைந்தால், "உன்னை யாருய்யா வரச் சொன்னது?" என்று தடுத்து விடுவார்கள். ஒரு அதட்டலில் பயந்து அப்படியே நின்று விடுவேன்.

இதுவே சில நாட்கள் தொடர, ஒருநாள் டைரக்டர், "என்னய்யா டிஸ்கஷனுக்கு வராம எங்க சுத்திட்டு இருக்க? இருபத்தி நாலு மணி நேரமும் கூடவே இருக்கணும்னு சொல்லியிருக்கேனில்லை?" என்று அத்தனை அஸிஸ்டெண்டுகள் முன்னால் சத்தம் போட்டார்.

நான், என்னைத் தடுத்து நிறுத்திய அஸிஸ்டெண்டைப் பார்த்தேன். ''சொன்னால் தொலைத்து விடுவேன்!'' என்பது போல் அவர் விழிகளை உருட்ட, பேசாமல் தலை குனிந்து நின்றேன்.

டைரக்டர் புரிந்து கொண்டிருப்பார். அவரும் அஸிஸ்டெண்டாக இருந்து வந்தவர்தானே?

"சரி, சரி. இனிமே ஒழுங்கா வந்து சேரு."

புகை பிடிக்கும் பழக்கம் இல்லாதவன் என்பது எனக்குப் பெரிய பிளஸ் பாயிண்டாக இருந்தது.

முக்கியமான காட்சி பற்றிய டிஸ்கஷன் நடக்கும்போது டைரக்டர் தீவிரமாக புகைத்துக் கொண்டு யோசித்துக் கொண்டிருப்பார். அங்கிருந்த அத்தனை அஸிஸ்டெண்ட் டைரக்டர்களுக்கும் புகை பிடிக்கும் பழக்கம் உண்டு. அவர்களும் புகை பிடித்தபடியே யோசிக்க எழுந்து வெளியே சென்று விடுவார்கள். நான் மட்டும் சமர்த்தாக டைரக்டருடன் அமர்ந்திருப்பேன்.

''என்னய்யா சும்மா உட்கார்ந்திருக்க? ஏதாவது ஐடியா சொல்லேன்?'' என்பார் டைரக்டர்.

காத்திருந்தவன் போல, சட்டென்று ஒரு யோசனை சொல்வேன்.

அநேகமாக என் யோசனைகளை அவர் எப்போதுமே நிராகரித்ததில்லை.

நான் உலகப் படங்களைப் பார்த்தவனல்லன். வாசிப்பும் அறவே கிடையாது. அப்போது, நான் சொல்லக்கூடிய யோசனைகள் யாவும் என் சொந்தக் கற்பனையில் உதித்தவையாகவே இருக்கும்.

"நீ என்னை மாதிரியே இருக்கே மூர்த்தி. நானும் இப்படித்தான். படிப்பால இல்லாம, சொந்த அனுபவத்தை வெச்சே சீன் யோசிப்பேன். அதுதான் பெரும்பாலும் எடுபடும்!'' என்று பாராட்டுவார் டைரக்டர்.

நான் அஸிஸ்டெண்டாகச் சேர்ந்த முதல் படம் அது. எனக்கு முன்னால் பத்து உதவியாளர்கள் அவரிடம் இருந்தார்கள். அத்தனை பேரையும் விட்டு விட்டு அந்தப் படம் முடிந்ததும் என்னிடம், "நீ தனியா டைரக்ட் பண்ணு மூர்த்தி. நானே தயாரிக்கிறேன்'' என்றார் டைரக்டர் பாக்யராஜ். அவரது பெருந்தன்மை ஒரு பக்கம் என்றால், அத்தனை தூரம் அவருடனேயே கலந்து அவரது

சிந்தனையையே என்னுடையதாகவும், அவருடைய கவலைகளையே என் கவலைகளாகவும் நான் மாற்றிக் கொண்டிருந்தேன். பிறவி எடுத்ததே 'தாவணிக் கனவுகளின்' வெற்றிக்காகத் தான் என்பது போல் வெறித்தனமாகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன்.

அந்தப் படத்தில் ஒரு சிறு வேடம் எனக்குத் தந்திருந்தார் டைரக்டர். சில காட்சிகளே வந்து போகும் அந்த வேடத்தையும் ரசித்து, வியந்து 'யார் கண்டது? அடுத்த பாக்யராஜோ என்னவோ?' என்று விமர்சனம் எழுதியிருந்தது கல்கி.

டைரக்டருக்கே இது ஆச்சர்யம். எனக்குப் பெருமை பிடிபடவில்லை. முதல் அங்கீகாரமல்லவா? மனத்தில் ராட்சஸ பலம் வந்து சேர்ந்தது அப்போது.

சின்ன வீடு படம் தொடங்கிய நேரம். நான் டைரக்டரின் விழிகளாக, கரங்களாக என்னை மாற்றிக் கொண்டிருந்தேன். நேரம் காலம் பார்க்காமல் அவருக்காக வெறிபிடித்து உழைக்கத் தயாராக இருந்தேன். என் கருத்துக்களை தைரியமாக வெளிப்படுத்த அவர் எனக்குப் பரிபூரண சுதந்தரம் கொடுத்திருந்தார். வேலைகளை நான் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்ய ஆரம்பித்தேன்.

மற்ற உதவி இயக்குநர்கள், "படட்டும். எல்லா கஷ்டமும் அவனே படட்டும்" என்று நக்கலாகப் பேசி வெறுத்து ஒதுங்குமளவுக்கு நான் டைரக்டருடன் ஐக்கியமாகியிருந்தேன்.

படம் முடிந்து டைட்டில் கார்டு எழுதிக் கொண்டிருந்தேன். உதவி இயக்குநர்கள் வரிசையில் எல்லாருடைய பெயரையும் எழுதி விட்டு, கடைசியாக என் பெயரை எழுதியதை டைரக்டர் பார்த்துவிட்டுச் சிரித்தார்.

அதை வாங்கி, 'வசன ஒத்துழைப்பு' - மூர்த்தி என்று எழுதி விட்டு, என்னைப் பார்த்தார். நான் பேசாமல் இருந்தேன். என்ன நினைத்தாரோ - அதையும் அடித்து விட்டு, இணை இயக்குநர் என்று 'இளமுருகு' பேர் போட்டிருந்ததன் கீழே என் பெயரைச் சேர்த்து என்னைத் திக்குமுக்காடச் செய்தார்.

அதற்குப் பிறகு, 'ஆக்ரிராஸ்தா' - இந்திப் படம் செய்தோம். அந்தப் படம் சூப்பர் ஹிட் ஆனது. பிரஸ் மீட்டில், "இந்தப் படத்தின் வெற்றிக்கு என் அஸிஸ்டெண்ட் மூர்த்திதான் காரணம்" என்று தன் புகழை எனக்குத் தந்தார்.

இத்தனைக்கும் கிளைமாக்ஸை எடுக்கிற விதத்தில் டைரக்டருக்கும் தயாரிப்பாளருக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட, டைரக்டர் சொன்னபடிதான் எடுக்க வேண்டும் என்று வாதாடி, அதையே செய்ய வைத்தது தவிர நான் வேறொன்றும் செய்து விடவில்லை!

டைரக்டர் என்னைத் தனியே இயக்கச் சொன்னார். ஆனால் அவர் நடிக்காமல் - என் திறமையை நிரூபிக்க ஒரு சந்தர்ப்பமாக - புதுமுகங்களை வைத்துத் தொடங்கச் சம்மதித்தார். 'முதல் பார்வை' என்று டைட்டில் கொடுத்தேன்.

முதல் படம். ஏராளக் கனவுகள். சாதிக்கும் வெறி. உற்சாகமாகவே ஆரம்பித்தேன். ஆனால் மிக விநோதமான அனுபவங்களை அதில் சந்திக்க நேர்ந்தது.

தயாரிப்பாளர், பாக்யராஜ்தான் என்ற போதிலும் அவரே முழுக்க முழுக்க உடனிருந்து கவனிக்க இயலாதல்லவா?




ஆகவே தயாரிப்பு நிர்வாகத்துக்குச் சிலரைப் பொறுப்பாக நியமித்திருந்தார்.

அவர்கள் என்னிடம் அனுசரணையாக நடந்து கொள்ளாததால் ஒரு கட்டத்துக்கு மேல் இந்தப் படம் வெளிவந்தாலும் நம்மால் பிழைக்க முடியாது என்கிற நிலை ஏற்பட்டு விட்டது. என்னால், டைரக்டருக்கு மனவருத்தம் உண்டாகி விடக்கூடாதே என்று பயந்து, யாருக்கும் சொல்லாமல் கடிதம் எழுதி வைத்து விட்டு, திருப்பதிக்கு ஓடி விட்டேன்.

முழுப் பக்க விளம்பரம் போட்டதுடன் அந்தப் படம் நின்று போனது!




இன்டஸ்ட்ரியில் இது இருவிதமான கருத்துகளை உண்டாக்கியது.

'பாக்யராஜ் படத்தையே இயக்க மறுத்துப் போனவன் எப்பேர்ப்பட்ட முரடனாயிருப் பான்' என்று சிலபேர் பேசினர்.

வேறு சிலர், 'இதான்யா தன்னம்பிக்கை! சரிப்பட்டு வராட்டா இப்படித்தான் ஒதுங் கிடணும்' என்றும் பேசினர்.

மனிதர்களின் பலவிதமான முகங்களை அப்போது நான் கண்டேன்.

டைரக்டரைப் படம் பண்ணித் தரச் சொல்லிக் கேட்டு, அவர் நேரமின்மையால் பலருக்கு 'முடியாது' என்று சொல்லியிருக் கிறார்.

அதைத் தவறாகப் புரிந்து கொண்டவர் கள், என்னை வைத்துப் படமெடுக்க முன் வந்தார்கள். ''அவர் அப்படித்தான் சார்! நீங்க வாங்க. பிரமாதமா செஞ்சிருவோம்!'' என்று ஆசை வார்த்தை சொல்லி, என்னை என் குருவுக்கு எதிராகக் கொம்பு சீவி விடப் பார்த் தார்கள்.

அவர்களை அண்டவிடாமல் விலக்கி வைத்தேன்.

ஒரு கேஸட் கடை முதலாளி — ஹேம் நாத்பாபு என்று பெயர் — என்னை நன்கு அறிந்தவர்.

''நீ கதை ரெடி பண்ணு மூர்த்தி. பெரிய ஹீரோவெல்லாம் வேணாம். நீயே நடி. மினிமம் பட்ஜெட்ல படத்தை முடிப்போம். முதலுக்கு மோசமில்லாம செய்ய முடியும்!'' என்று நம்பிக்கை சொல்லி ஆரம்பித்தார்.

'கேள்விக் குறி' என்பது டைட்டில்.

படத்தை ஆரம்பித்தேன். மூன்று நான்கு நாள்தான் நடந்திருக்கும். அவர் எதிர்பார்த்த இடத்திலிருந்து பணம் கிடைக்காததால் படம் நின்று போனது. என் வாழ்க்கையே கேள்விக் குறியாகி விட்டது குறித்த சோகம் நெஞ்சை அழுத்தியது.

விநியோகஸ்தர் சுந்தரம் அவர்களைச் சந்திக்கப் போனோம், படத்தின் என்.எஸ்.சி. வினியோகப் பொறுப்பை ஏற்க முடியுமா என்று கேட்க. வினியோகப் பொறுப்பை அவர் ஏற்று, முன்பணம் தந்தால் படத்தைத் தொடரலாமே என்கிற எண்ணம்.

திரு. சுந்தரம் கதை சொல்லச் சொன்னார். சொன்னேன். அசந்து போனார். ''கதை பிரமாதமாக இருக்கிறது. நான் பார்ட்னரா கவே சேர்ந்து விடுகிறேனே?'' என்றார்.

ஆனால் பாபுஜிக்கு அந்த யோசனை பிடிக்காததால் திரும்பி விட்டோம்.

அந்தப் படத்தில் ஹீரோயினாக சீதாதான் ஒப்பந்தமாகியிருந்தார். படமே நடக்காத சூழ்நிலையில் வெறுமனே அவரை விதவித மாக நிற்கவைத்து ஸ்டில்கள் மட்டும் எடுத்து ஓர் ஆல்பம் தயாரித்தேன்.

யாராவது வினியோகஸ்தரிடம் அதைக் காட்டி, ''பாருங்கள். அற்புதமான பாடல் காட்சிகள் எடுத்தாகி விட்டது!'' என்று சொல்லிப் பணம் சேர்க்கப் பார்த்தோம்.

மறுபடியும், 'விவேக் சித்ரா' சுந்தரத்திடம் போனேன்.

''எனக்குக் கதை பிடித்திருக்கிறது. அவ ரால் எடுக்க இயலாதென்றால் நான் எடுக்கத் தயார்!'' என்று உறுதியாகச் சொன்னார்.

இம்முறை பாபுஜியும் ஒத்துழைத்து விலகிக் கொண்டார்.

சுந்தரம் எனக்கு ஒரே ஒரு கண்டிஷன் போட்டார். 'கேள்விக் குறி' என்கிற டைட் டிலை மாற்ற வேண்டும்.

ஏற்கெனவே பலர் அந்த டைட்டில் வேண்டாம், வேண்டாம் என்று பயமுறுத்த, படம் வேறு இழுத்தடித்துக் கொண்டே போக, வெறுப்பில் இருந்தேன்.

சுந்தரம் கேட்டதும் அதே கடுப்பில் ஒரு தாளை உருவி, புது வசந்தம், புதிய பாதை, புதிய பார்வை என்று தொடங்கி ஐம்பது டைட்டில்களை எழுதி வீசினேன்.

'புதிய பாதை' என்கிற டைட்டிலை அவர் 'டிக்' செய்தார்.

**ப**டம் தொடங்கியது. திரு. சுந்தரம் ஒரு

வித்தியாசமான ஆள். அவர் தயாரிப்பாளரே தவிர ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வர மாட்டார். அவரது பிரதிநிதிகள் யாராவது இரண்டு பேர் ஷூட்டிங்குக்கு வருவார்கள். அவ்வப் போதைய நடவடிக்கைகளை அவர்கள் போன் மூலம் சொன்னால் கேட்டுக் கொண்டு, அதையே வேதமாக எடுத்துக் கொண்டு விடுவார்.

"சார்! இந்த ஆள் எப்பப் பார் ட்ராயர் மேல தூங்கி கட்டிக்கிட்டு பொறுக்கி மாதிரி பீடியைக் கடிச்சிக்கிட்டு நடிக்கிறார். ஆர்ட் பிலிம் மாதிரி நகருது சார்" என்றொரு போன் போகும்.

அவ்வளவுதான். ஷூட்டிங் கேன்ஸல் என்று தகவல் வந்து விடும். நான் ஓடிப் போய் அவரைச் சமாதானப்படுத்த வேண்டும்.

"எப்பப் பார் டப்பிங் வெக்கறார் சார்" என்று போன் போகும்.

உடனே கூப்பிட்டு விடுவார்.

"டப்பிங்கெல்லாம் அஞ்சு நாள்தான் நடக்குமாமே? நீங்க என்ன அடிக்கடி டப்பிங் வெக்கறீங்க?" என்பார்.

நான், ஒரு பாடலைக் குறைக்கலாம், சண்டைக் காட்சியைக் குறைக்கலாம் என்று 'காம்பன்ஸேஷன்' ஏற்பாடு செய்து சரிக் கட்டுவேன். இப்படிக் குட்டிக் குட்டியாகக் கோடி பிரச்னைகள் வந்தன அந்தப் படத்தில்.

வேறொரு பாதையில், படத்தின் ஹீரோயின் சீதாவுடன் காதலும் வந்தது. இத்தனைக்கும் ஐம்பத்தைந்து நாள் நடந்த ஷூட்டிங்கில் (மொத்தப் படமே அத்தனை நாட்களுக்குள் எடுக்கப்பட்டதுதான்) வெறும் பத்தொன்பது நாள் கால்ஷீட்தான் சீதாவுக்கு.

ஒருவழியாகப் படம் முடிந்தபோது இன்னொரு பிரச்னை மலையாக வந்தது.

சுந்தரம் அந்தப் படத்தை வெங்கட்ராமன் என்பவரின் பெயரில்தான் தயாரித்திருந்தார். அந்த வெங்கட்ராமனுக்கு வேறு சில கடன்கள் இருந்தன - நீண்ட நாட்களாக அடைக்க முடியாமல்.

காத்திருந்த கடன்காரர்கள், இந்தப் படம் முடிந்ததும் கோர்ட்டுக்குப் போய் அவர்கள் தந்திருந்த கடனுக்குப் பிரதியாக, 'புதிய பாதை'யை அட்டாச் பண்ணி விட்டார்கள். அதாவது, அவரது கடன்களை அடைத்தால் தான் படத்தை ரிலீஸ் பண்ண முடியும்.

எதிர்காலமே இல்லை என்கிற நிலை. எத்தனை போராட்டம்! எத்தனை கவலை! எத்தனை இரவுகள் அழுதிருப்பேன்?

பொறுமையை இழக்காமல் சிக்கல்களை விடுவித்து, ஒவ்வொருவரிடமும் பேசிப் பேசித் தீர்த்துப் படத்தை வெளியே கொண்டுவந்த போது - சூப்பர் ஹிட்! தவிர, தேசிய விருது!

முப்பத்தெட்டு லட்சத்துக்குள் தயாரிப்புச் செலவுகளை முடித்துக் கொடுத்தேன். நாற்பத்தைந்து லட்சத்துக்கு மேல் வியாபாரமானது பெரிய விஷயமாயிருந்தது - அந்தக் காலகட்டத்தில். (1989)

அந்தப் படம் எனக்குக் கற்றுத் தந்த பாடங்கள் அநேகம். முதல் பட வெற்றியில் நான் நிலைகுலைந்து போகாமல், பட்ட கஷ்டங்களே என்னைத் 'தடுத்தாட்கொண்டன'.

எத்தனை உயர்ந்த விஷயத்தையும் சினிமாவாக எடுக்கலாம். ஆனால் அது ரசிகனுக்குப் புரியும் விதத்தில் அமைய வேண்டும் என்பதுதான் நான் கற்ற தலையாய பாடம்.

எனது இரண்டாவது படமான 'பொண்டாட்டி தேவை'யும் வெற்றியே அடைந்தது. ஆனால் புதிய பாதையின் ஆடம்பர வெற்றிக்கு முன்னால், இதன் வெற்றி பொருட்படுத்த இயலாமலாகி விட்டது.

மிகவும் சீரியஸாக 'சுகமான சுமைகள்' ஆரம்பித்தேன். மரண அடி! அந்தப் படத்தின் மெஸேஜ் மிகவும் நல்ல விஷயம்தான். ஆனால் முதலிரண்டுப் படங்களில் எனது ஜாலியான அணுகுமுறைக்குப் பழகிவிட்ட ரசிகர்கள் இதில் 'சீரியஸ் பார்த்திபனை' ஏற்க மறுத்து



**தி**னமும் குறைந்தது ஏழு பெண்களாவது மேற்கு வங்காளத்தில் தற்கொலை செய்துக் கொள்கிறார்கள்! 1996-ஆம் ஆண்டில் மட்டும் 2781 பெண்கள் தற்கொலை செய்து கொண்டு இருக்கின்றனர். நாட்டில் தற்கொலை எண்ணிக்கை மேற்கு வங்கத்தில்தான் மிக அதிகம்! ஆண்டுக்கு ஆண்டு தற்கொலை செய்து கொள்ளும் பெண்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போகிறது.

கணவன்-மனைவிக்குள் ரகசியமாக நடைபெறும் பிரச்னைகள் தற்கொலைகளுக்கு முக்கியமானதொரு காரணமாக இருந்து வருகிறது. நோய்கள், குடும்பத்தில் இறந்துபோன ஒருவரை மறக்க இயலாமை முதலிய வேறு காரணங்களும் உண்டு. வரதட்சிணைக் கொடுமையும் தற்கொலை புரிந்து கொள்ளத் தூண்டுகிறது.

ஆதாரம்: வீக்

தகவல்: சேலம் சக்திக் கொடி

விட்டார்கள்.

மறுபடியும் பழைய பாணியில் 'உன்னே வெளியே', 'சுகமான சுமை' தந்த சுகமில்லாத சுமைகளைத் தீர்க்க இந்தப் படம் பொருளாதார ரீதியில் வெகுவாக உதவினாலும் பெயர் கெட்டு விட்டது. பார்த்திபன் அந்தப் படத்தில் வைத்திருந்த 'செய்தி'யை விட ஐஸ்வர்யாவின் ஆடைக் குறைப்புதான் அதிகமாகப் பேசப்பட்டது; கண்டனத்துக்கு உள்ளானது.

தவறு புரிந்தது. உடனே மாற்றிக் கொண்டேன். அடுத்தடுத்தப் படங்களில் ஏற்றமும் இறக்கமுமாகப் பரமபதம் தொடர்ந்து கொண்டேதான் இருக்கிறது.

**சி**னிமாவில் சம்பாதிப்பது மட்டும்தான் நோக்கம் என்றால், அது பெரிய விஷயமில்லை. ஆனால் நம் முன்னோர்கள் அப்படியே எண்ணியிருந்தால் கறுப்பு வெள்ளைத் திரை, வண்ணத்திரை ஆகியிருக்குமா? பிற தொழில்நுட்ப முன்னேற்றங்கள்தான் சாத்தியமாகியிருக்குமா?

ஏதாவது புதிது புதிதாக முயற்சி செய்து கொண்டே இருக்கும் வெறி என்னை விடாமல் துரத்திக் கொண்டே இருந்திருக்கிறது.

பரீட்சைகள் வெற்றியும் தரலாம், தோல்வியும் தரலாம். ஆனால் நம் பரீட்சார்த்த முயற்சியின் தோல்வி அடுத்தவரை பாதிக்கக் கூடாது என்பதால்தான் என் படங்களை நானே தயாரித்துக் கொண்டிருக்கிறேன்.

வெளியார் படங்களில் வெறுமனே நடிப்பதுடன் சரி. பாரதி கண்ணம்மா ஓடியதா? நாலு பேர் பாராட்டியதும், 'ஐயோ. நாம் சும்மா இருக்கிறோமே' என்று கவலை தொடங்கி விடுகிறது. வெளியார் படங்களில் நடித்துச் சம்பாதிப்பதென்பது, வெறுமனே பணத்துக்கு என்னை விற்பது போலப்படுகிறது. உடனே கூசிப் போகிறேன். ரத்தம் சூடாக இருக்கும்போதுதானே புதிதாக ஏதாவது முயற்சிகள் செய்து பார்க்க முடியும்? இப்போது கிடைக்காத வெற்றி, நான் கிழவனானபின் எப்படிக் கிடைக்கும்?

வெற்றி என்பது புதிது புதிதாக எதையாவது முயற்சி செய்து கொண்டே இருப்பதுதான் என்று நினைக்கிறேன். சறுக்கல் வரும். தடை வரும். ஊரே கூடி எதிர்க்கவும் செய்யலாம். அதனாலென்ன? முட்டி மோதி, நமக்கான கதவுகளை நாமே திறக்காவிட்டால் வேறு யார் வந்து திறப்பார்கள்?

**மு**ற்றிலும் பரீட்சார்த்த முயற்சியாகத்தான் ஹவுஸ்ஃபுல் படத்தை எடுத்தேன். படம் சரியாகப் போகவில்லை என்பதை ஒப்புக் கொள்வதில் எனக்கு எந்த அவமானமும் இல்லை. இது ஒரு பாடம். இதே படத்தை ஜனரஞ்சகமாக, முற்றிலும் ரசிகர்கள் விருப்பத்துக்கிணங்க எடுக்கவும் என்னால் முடியும்.

நஷ்டம்தான். பிரச்னைதான். அதனாலென்ன? என் மனைவியிடம், "இத்தனை கடன் சுமை ஏறியிருக்கிறதே, என்ன செய்யலாம்?" என்று கேட்டேன்.

"அதனாலென்ன? நம் வீட்டை விற்று விடலாம். அடுத்தப் படத்தில் ஜெயித்து வேறு வீடு வாங்கினால் போயிற்று" என்றாள் சாதாரணமாக. புரிந்து கொண்டு உற்சாகமூட்டும் மனைவி அமைவது ஒரு வரம். நான் அவளுக்கு இப்போதும் கூடக் காதல் கடிதங்கள் எழுதுகிறேன். டீன் ஏஜில் வராத காதல், என் திருமணத்துக்குப் பின் வந்தது - மனைவி மீது. வலுவான குடும்பம் அமைந்து விட்டால் வாழ்க்கையில் எதுவுமே பிரச்னையாகத் தெரியாது.

என்னைப் பொறுத்தவரை வெற்றி - தோல்வி ஒரு பொருட்டே அல்ல. செயல்படுவது முக்கியம். உயிரோடிருப்பது பெரிய விஷயமல்ல; உயிர்ப்போடிருக்க வேண்டும்.

'ஹவுஸ்ஃபுல்'லின் தோல்வி, என்னைச் சில வெளியார் படங்களில் நடிக்க வைக்கும் என்பது உண்மைதான்.

ஆனால் மறுபடியும் வருவேன். புதிய சிந்தனைகளோடு. புதிய உத்வேகத்தோடு. புதிய தோற்றத்தோடு. நான் 'வாழ்ந்து' கொண்டிருப்பதை வெளிப்படுத்தியே ஆக வேண்டுமல்லவா? ●

சந்திப்பு : **ஔரங்கசீப்**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **ஸ்ரீஹரி**

✉ கோவைக்கு அத்வானி வந்ததிலிருந்து சென்றது வரை நகரமே காவல் துறையின் 'சேஃப்டி லாக்கருக்குள்' என்பது நூற்றுக்கு நூறு உண்மை. அத்வானி எதற்கு வருகிறார் என்பதே கோவை மக்களின் ஒருமித்த கேள்வியாக இருந்தது. கட்டுரை படிக்கப் படிக்க மனசுக்குள் பரபரப்பை பரவச் செய்தது.
கோவை - 14, ஏ. எஸ். இராமசாமி.

✉ தன்னை ஆட்சிக் கட்டிலிலிருந்து இறக்காதிருக்க ஊழலுக்கு உரம் போட்டு வளர்க்கும் பி.ஜே.பி. அரசின் போக்கினைச் சாடித் தாங்கள் தீட்டிய தலையங்கம் போற்றுதற்குரியது. ஜனநாயக விரோதப் போக்கு பா.ஜ.க.விடம் வளர்ந்து வருவது கவலைதரும் விஷயம்!
இனாம்மணியாச்சி, ச. ஆ. கேசவன்.

✉ பாடலாசிரியர் பழனிபாரதியின் ஜெயித்த கதை இன்றைய இளைஞர்களுக்குத் தன்னம்பிக்கை ஊட்டுவதாக உள்ளது.
திருவாரூர், ஏவிஎம். கணேசன்.

✉ சாருகேசி கற்பனையில் உருவாகியிருந்த முன்னாள் முதல்வர் ஜெயலலிதாவின் அறிக்கைகள் அபாரம். ஜெயலலிதாவே நேரடியாக இந்த அறிக்கைகளை ஊன்றிப் படித்தாரேயானால், சாருகேசிக்கு போயஸ் தோட்டத்தில் வேலை நிச்சயம்!
தோட்டக்குறிச்சி, இரா. வளையாபதி.

✉ சச்சினும் கும்ளேவும் விக்கெட் விழுவதற்குக் கண்டுபிடித்த சென்டிமென்ட்டைப் படித்தவுடன் சிரிப்பதா அல்லது வியப்பதா என்றே தெரியவில்லை. சடகோபன் ரமேஷ் தமிழகத்தின் தங்க மகன். அவர் இந்திய அணிக்குக் கிடைத்துள்ள வைரக்கல்!
மதுரை - 7, ஆர். வி. மயில்வாகனன்.

✉ வையவனின் நான்கு வாரத் தொடரில் தீபிகாவுக்கும் பாலுவுக்கும் இடையேயான உணர்வுகள் மிக நாசூக்காக சித்திரிக்கப்பட்டிருந்தன. அரஸின் ஓவியங்கள் தொடருக்குச் சிறப்பைக் கூட்டின.
நெய்வேலி, இந்துமதி.

✉ 'அப்பா என்னும் வில்லன்' கதையல்ல; பல இல்லங்களில் நடக்கும் நிஜம். என் குழந்தைகளை உட்கார்த்தி வைத்துப் படித்துக் காட்டினேன். பல இடங்களில் 'புல்லரிக்க' வைத்தது.
சென்னை - 91, புழுதிவாக்கம் சீனு.

✉ 'கள்ளழகர்' பற்றி இல. கணேசனின் விமரிசனம் மிகவும் கண்ணியமாகவே இருந்தது. 'மததீவிரவாதத்தை ஒழிக்க, அந்தந்த மதத்தினரே ஆர்த்தெழுந்து, தீவிரவாதிகளைப் புறக்கணிக்க வேண்டும்' என்ற கருத்து கவனத்திற்குரியது.
தஞ்சாவூர், ஜி. ராமதாஸ்.

## இல. கணேசனுக்கு ஒரு மறுப்பு!

✉ சர்ச்சில் தேசபக்தி பற்றிப் பாதிரியார் பேசுவது சினிமாவில் மட்டுமே நடப்பது என்பது மாதிரி 'கள்ளழகர்' விமர்சனத்தில் இல. கணேசன் சொல்லியிருக்கிறார். சுதந்திர தினத்தன்று ஏதாவது ஒரு கத்தோலிக்க சர்ச்சில் அதிகாலை நடைபெறும் (திருப்பலி) வழிபாட்டிற்குச் சென்று பார்க்கட்டும். தேசபக்தி எந்த அளவுக்கு வலியுறுத்தப்படுகிறது என்பது தெரியவரும். நாடு முழுவதுமே சர்ச்களில் இதனைக் காணலாம். பொதுவாகவே கத்தோலிக்க ஆலயங்களில் தேசபக்தி போற்றப்படுகிறது.
சென்னை - 28, எம். தன்ராஜ்.




✉ 'ஹைர ஹைர ஹைரோப்பா' பயணக் கட்டுரை மூலம் ஜெயஸ்ரீராஜ் எங்களை ஐரோப்பாவின் பெரும் பகுதிகளுக்கு நேரில் அழைத்துச் சென்ற உணர்வைத் தந்து விட்டார். பாராட்டுகள்!
மதுரை - 16, வி. பி. காந்திமதி.

✉ "ஹைர ஹைர ஹைரோப்பா" தொடருக்கு 'குட்-பை' சொல்லியதைப் படித்த போது, வெளியூர்களில் உல்லாசமாகச் சுற்றி விட்டு சொந்த ஊர் திரும்பும்போது, ஒரு சோகம் தொற்றிக் கொள்ளுமே அது எங்களையும் தொற்றிக் கொண்டது!
திருச்செங்கோடு, டி.ஏ.சி. பிரகாஷ்.

**"நடப்பு அரசியலைப் பற்றிப் பேச மாட்டேன்..." என்ற நிபந்தனையுடன் ஆரம்பித்தார் மம்தா பானர்ஜி. டெல்லி திரும்பும் முன் விமான நிலைய ஓய்வு அறையில் அவரைச் சந்தித்தோம்.**

"மார்னிங் ஐ மெட் மேடம் (ஜெயலலிதா); ஷி வாஸ் ஸோ நைஸ்; கோயமுத்தூரில் ஏப்ரலில் நடைபெற இருக்கும் அ.தி.மு.க. பொதுக் கூட்டத்தில் பங்குபெற அழைத்திருக்கிறார்" என்று ஒரே பெருமை!

"அப்பா பானர்ஜி காங்கிரஸ் தியாகி. தேச விடுதலைப் போராட்டத்தில் பங்குகொண்டவர். எங்கள் வீடு அலிப்பூர் சென்ட்ரல் ஜெயில் அருகே இருந்தது. அப்போது எனக்குப் பதிமூன்று வயதிருக்கும் என்று நினைக்கிறேன். நக்ஸல்பாரி இயக்கம் துடிப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருந்த காலம் அது. வாழ்க்கையின் வசந்தமான நாட்களை அனுபவிக்க வேண்டிய இளைஞர்கள், தினசரி ஜெயிலுக்குள் அடைக்கப்பட்ட வண்ணம் இருப்பார்கள். அநீதிகளுக்கு எதிரான அவர்களது போராட்டம் என்னை ஆழமாகப் பாதித்தது. இருந்தாலும் அவர்கள் தேர்ந்தெடுத்த வழிமுறையில் எனக்கு நம்பிக்கை இல்லாததால், இளைஞர் காங்கிரஸில் இணைந்து என் பொது வாழ்க்கையைத் துவங்கினேன். போராட்டம், போஸ்டர் ஒட்டுவது, தோரணம் கட்டுவது என்று துணிந்து களத்தில் குதிப்பேன். பெண்தானே என்று ஒதுக்கி அலட்சியப்படுத்த நினைத்தவர்கள் கூட என் ஆர்வத்தையும், தைரியத்தையும் கண்டு ஊக்கமளிப்பார்கள்!" என்று பழைய நினைவுகளில் மூழ்கினார்.

"உங்களுக்குக் கடவுள் பக்தி உண்டா?"

"நிச்சயமாக!"

"எந்தக் கடவுள்? கல்கத்தா காளி...?"

"குறிப்பாகச் சொல்ல முடியாது. இந்தியாவில் ஒவ்வொரு பகுதியிலும், ஒவ்வொரு கடவுளை வழிபடுகிறோம். என்னைக் கேட்டால், 'மனித நேயமே' கடவுள் என்பேன். இந்து, இஸ்லாம், கிறிஸ்துவர்கள் என்று பரவிக் கிடக்கும் நமது நாட்டில், இப்போதிருக்கும் நிலையில் நல்லிணக்கம் வளர வேண்டுமானால் மனிதப் பண்புகள் வளர வேண்டும். எல்லா தெய்வங்களையும் நான் வழிபடுவேன்."

"ஓய்வு கிடைத்தால் என்ன செய்வீர்கள்?"

"இலக்கியம் மற்றும் சமூக நடப்புகளைப் பற்றிய புத்தகங்களைப் படிப்பேன். கவிதை எழுதுவேன். இதுவரை பத்து கவிதைத் தொகுப்புகள் வந்துள்ளன! என்னுள்ளே கவிதை ஊற்றைப் பீறிடச் செய்ததில் தாகூர் கவிதைகளுக்குப் பெரும் பங்கு உண்டு. சிறிய வயதிலேயே அவரது கவிதைகள் நூற்றுக்கணக்கில் எனக்கு மனப்பாடம்."

# ஆம்லெட், தயிர், அப்புறம்



"என்னைப் பொறுத்தவரை இளம் வயது முதல் அரசியலே வாழ்க்கையாகி விட்டது. இந்த நிலையில் திருமண வாழ்க்கையில் ஈடுபட்டால் சுயநலவாதியாக மாறி என் கணவர், என் குடும்பம் என்று செயல்படத்தான் தோன்றுமே தவிர, நாடு, மக்கள் என்று நினைத்துச் செயல்பட முடியாது."

"போராட்ட வாழ்க்கையில் உங்களால் மறக்க முடியாத சம்பவம்?"

"1990-ல் ஜோதிபாசுக்கு எதிராக நடந்த போராட்டத்தில் போலீஸின் லத்தி என் இடுப்பு எலும்பைப் பதம் பார்த்தது. மாதக்கணக்கில் படுக்கையில் இருக்க வேண்டியதாகி விட்டது. 1984 தேர்தலில் கம்யூனிஸ்ட் தலைவர் சோம்நாத் சாட்டர்ஜியை எதிர்த்து ஜாதப்பூர் தொகுதியில் வெற்றி பெற்றது ஒரு குறிப்பிடத்தக்க விஷயம்."

"சோனியா தலைமையில் உள்ள காங்கிரஸுக்குத் திரும்புவீர்களா?"

"வங்காளத்தில் த்ருணமூல் காங்கிரஸ் கடல் போன்று பரந்து இருக்கிறது. காங்கிரஸ் வற்றிய நதியாக இருக்கிறது. கடல், நதியைத் தேடிப் போவதுண்டா?"

"வாஜ்பாயை அடிக்கடி பயமுறுத்துகிறீர்களே?"

"என் அரசியல், மேற்கு வங்க மக்களின் நலனை அடிப்படையாகக் கொண்டது. நாட்டின் மற்ற சில பகுதிகளைப் பார்க்கும்போது மே. வங்கத்தில் ரயில்வே போன்ற துறைகளில் வளர்ச்சி விகிதம் மிகவும் குறைவு. எனவேதான் போராடுகிறேன். இன்றையச் சூழலில் நாட்டை நடத்துவதற்கு வாஜ்பாயை விடச் சிறந்த தலைவர் கிடையாது. எந்தக் காரணம் கொண்டும் அவரது ஆட்சி கவிழ த்ருணமூல் காங்கிரஸ் காரணமாக இருக்காது.

# கொஞ்சம் அரசியல்!

"பிடித்த உணவு?"

"கொஞ்சம் காரசாரமாய் இருந்தால் ஒரு பிடி பிடிப்பேன். ஆம்லெட்டும், தயிரும் இருந்தால் சாதம் கூடுதலாய் உள்ளே இறங்கும்."

"நீங்கள் ஏன் திருமணம் செய்து கொள்ளவில்லை?"

பேட்டி : **ஸ்ரீனிவாசன்**

படம் : **ஸ்ரீஹரி**

# நடக்குமென்பார், நடக்கும்!

**அக்னிசர்மா பக்கம்**

**மார்ச் 3 முதல் 9 வரை**


மகர ராசிக்காரரான முன்னாள் சி.பி.ஐ. இயக்குநர் சி.வி. நரசிம்மன் புதுசா வீடுகீடு வாங்குவார் போலிருக்கே?

**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

அரசாங்கம் தொடர்பான காரியங்கள் ஏதும் பெண்டிங் இருந்துதுன்னா, ஒரு நல்ல திருப்பத்தை எதிர்பார்க்கலாம். நிர்வாகத் துறையில் இருக்கறவங்களுக்கு உற்சாகமான பாதை தெரியும். நண்பர்கள், உடன் பிறந்தவர்களெல்லாம் அளவோடு உதவிக்கு வருவாங்க. ஆனாலும் கடுமையா உழைக்க வேண்டியிருக்கும். எதிலும் அவசரம் காட்டாம நிதானம் காட்டணும். தொழிலாளர்களுக்குச் சிறு சிறு பிரச்னைங்க வரலாம். அசையாச் சொத்துகள் வாங்கறதுக்கு இந்த வாரம் உகந்ததில்லை. ஸ்பெகுலேஷன் கூடவே கூடாது.

**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

துணிச்சலும் தன்னம்பிக்கையும், பளிச்சினு தெரியற வாரம். அப்புறமென்ன! எந்தக் காரியமானாலும் அதில் அனுகூலமான போக்குத்தானே வந்தாகணும்? சட்டம், காவல், பொறியியல் துறைகளில் இருக்கறவங்களுக்கு வெற்றியும் பாராட்டும் உறுதி. வருவாய் கூடும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் வாங்கல் போன்றவற்றிலும் ஆதாயம் இருக்கும். சிலருக்குப் புதிய வாகன யோகமும் இருக்கு. கலைத்துறையினருக்குச் செழிப்பான வாரம்னே சொல்லலாம். பயணத்தால சிலரும் வெளிநாட்டுத் தொடர்பால சிலரும் ஆதாயம் பெறலாம். மொத்தத்தில் சந்தோஷமான வாரம்னாலும், தந்தையின் ஆரோக்கியத்தில் அவசியம் கவனம் செலுத்துங்க.

**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

சின்னச் சின்னப் பிரச்னைகள், சங்கடங்கள் வரத்தான் செய்யும்னாலும் அதெல்லாம் வந்த வேகத்திலேயே காணாமலும் போயிடும். பண விஷயம் அப்படியும் இப்படியுமாத்தான் இருக்கும். கவலைப்படாதீங்க. உங்க திறமை வீணாப் போயிடாது. அது நல்ல பலன்களைக் கொண்டு வரவே செய்யும். சிலருக்குப் புதையல் மாதிரியான அதிர்ஷ்டத்துக்கும் வாய்ப்பிருக்கு. கொடுக்கல் வாங்கல், ஸ்பெகுலேஷன் மாதிரியான விஷயங்களில் எச்சரிக்கையா இருங்க. புது ஆளுங்களை நம்பி ஏமாந்துடாதீங்க. குழந்தைங்க ஆரோக்கியத்தில் அக்கறை காட்டுங்க.

**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

கல்யாணம், வளைகாப்பு, குழந்தைப்பேறு... இப்படி ஏதாவதொரு விசேஷம் உங்க குடும்பத்தில் நடந்தே தீரும். வெளிநாட்டுத் தொடர்பால பலன் கிடைக்கும். சிலருக்கு வெளிநாடு போறதுக்கான சான்ஸும் இருக்கும். பெண்களுக்கு உற்சாகமான சூழ்நிலைக்கு உத்தரவாதமே தரலாம். எப்படின்னு கேட்கறீங்களா? நகை, கிரைண்டர், வாஷிங்மெஷின்னு எதையாவது வாங்கினா அவங்க உற்சாகப்படாம என்ன செய்வாங்க! ஆனாலும் அலைச்சலைத் தவிர்க்கறது நல்லது. அதனால உங்க ஹெல்த் பாதிக்கப்படலாம். தொழிலில் அதிக கவனம் காட்டலேன்னா, சிக்கலாயிடும். உஷார்.

**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

பாறையிடுக்கில செடி முளைக்கிற மாதிரி, எத்தனை எதிர்ப்பு இருந்தாலும் அதையெல்லாம் சமாளிச்சு ஜெயிச்சுக் காட்டுவீங்க. கோர்ட் கேஸுன்னு ஏதும் இருந்தா உங்களுக்குச் சாதகமான திருப்பம் ஏற்படும். மின்னணு, கணினி மாதிரியான தொழில் செய்யறவங்களுக்கு நல்ல ஆதாயம் கிடைக்கும். கலைத் துறையினருக்கு லாபத்தோட போனஸா புகழும் கிடைக்கும். பிசினஸ் பண்றவங்களுக்குத் தொழில் அபிவிருத்திக்கான சான்ஸ் நிறையவே இருக்கு. இருந்தாலும் நிதானமும் பக்குவமும் இல்லாம இருந்துடாதீங்க. அதனால பிரச்னைகளும், மேலதிகாரிகளோட அதிருப்திக்கும் ஆளாயிடுவீங்க.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்*

திரை 2-ம் பாதம் வரை)

வியாபாரத்தில் வளர்ச்சின்னாலே, உங்க முகத்துல மலர்ச்சிதானே! அதோட மத்தவங்க ளோட உதவியும் கிடைக்குதுன்னா, கேட்கவா வேணும்! பண விஷயத்திலும் பஞ்சமில்லைங்கிற நிலைலதான் நீங்க உஷாரா இருக்கணும். அதுவும் உங்களுக்கு ஜால்ரா அடிக்கறவங்களை நீங்க புரிஞ்சுக்கலேன்னா சிக்கல்ல மாட்டிக்கு வீங்க. கூட்டுத் தொழில், அலுவலகப் பணி யாளர்கள் ஆகியோருக்கு நல்ல வளர்ச்சி தெரி யுது. ஆனாலும் வீண் வம்புகளில் மாட்டிக்காம இருக்கறது நல்லது. வீடு, மனை வாங்கற விஷயமெல்லாம் இந்த வாரம் வேணாம்.



**துலாம்** : (சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)

கிரக சஞ்சாரம் எதுவுமே திருப்தி கரமா இல்லாததால உங்கள் ஆரோக் கியத்திலேர்ந்து, அந்தஸ்து வரைக்கும் எல்லாமே சாதாரணமாத்தான் இருக்கும். எதுவானாலும் திருப்தியான வெற்றியே இருக்காது. சாதாரணக் காரியங்களுக்குக் கூட கடுமையா உழைக்க வேண்டியிருக்கும். பண விஷயமும் சாதாரண மாவேதான் இருக்கும்றதால, குடும்பத்தில் சிறு சிறு பிரச்னைகள் வரவே செய்யும். வீண் விவா தங்கள் கூட வம்புல போய் மாட்டி விடற சான்ஸ் இருக்கு. இத்தனைக்கும் நடுவுல பிரச்னைகளைச் சமாளிக்கக்கூடிய சக்தியும் உஙகளுக்கு இருக்கறதால கவலைப்படறதுக்கு எதுவுமில்லை. திடீர் அதிர்ஷ்டத்துக்கும் சான்ஸ் இருக்கு.



**விருச்சிகம்** : (விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)

உங்க மனசுக்குப் பிடிச்ச - இனி மையான நிகழ்ச்சிகள் நடக்கற வாரம் இது. விருந்து, கேளிக்கை, சந்தோஷ நிகழ்ச்சிகளுக்குக் குறைவே இருக்காது. வியாபாரிகளுக்கு வளர்ச்சி, உத்தியோகஸ்தர்களுக்கு புரமோஷன், கேட்ட இடத்துக்கு மாறுதல்னு எல்லாமே சுலபமா நடக்கும். பண நடமாட்டத்துக்கும் பஞ்சமில்லை. சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டத்துக்கும் சான்ஸ் இருக்கு. அதுக்காக தாம்தூம்னு செலவு பண்ணி டாதீங்க. வீண் அலைச்சலைத் தவிர்க்கறதும் சிக்கனத்தைக் கடைப்பிடிக்கறதும் ரொம்ப ரொம்ப அவசியம்.



**தனுசு** : (மூலம், பூராடம், உத்தி ராடம் முதல் பாதம் வரை)

உங்க ஆற்றலும் பராக்கிரமமும் வெளிப்பட்டு நிக்கற வாரம்கிறதால, எத்தனை எதிர்ப்புகள் வந்தாலும் ப்பூன்னு ஊதித் தள்ளிட்டு ஜெயிப்பீங்க. நிர்வாகிகளுக்கு முன்னேற்றமான வாரம். பெண்டிங்கா இருக்கற ராஜாங்க காரியங்களில் பாதிக்குப் பாதியாவது நடந்து முடியற சான்ஸ் இருக்கு. விருந்து, கேளிக்கை, உல்லாசம் மாதிரியான விஷயங் களில் அதிக ஈடுபாடு காட்டுவீங்க. சிலருக்கு அதால ஆதாயமும் கிடைக்கும். ஆனால் பலருக்கு அது டாம்பீகச் செலவாத்தான் முடி யும். புதிய ஒப்பந்தங்களுக்கு ஏற்ற வாரம்னாலும் பயணத்தில் எச்சரிக்கையா இருங்க.



**மகரம்** : (உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)

உங்க வாக்கு சாதுர்யமே பல காரி யங்களைச் சாதிச்சுக் குடுத்திடுமே! அசையாச் சொத்துக்கள் வாங்கற யோகமோ அல்லது அதால ஆதாயமோ கிடைக்கும். போலீஸ், மிலிட் டரிக்காரர்கள் வீரதீரச் செயல்களில் ஈடுபட்டுப் பாராட்டுப் பெறுவாங்க. இருந்தாலும் குடும்பத் தில் சிறு சிறு சலசலப்புகள் வரத்தான் செய்யும். அன்போடும், பரிவோடும் பழகித்தான் சமாளிக் கணும். புது முயற்சிகள் வேண்டாம். வீண் செலவு வேண்டாம். அலைச்சலும் கூடாது. கொடுக்கல் - வாங்கலில் எச்சரிக்கை அவசியம். பொருளாதாரம் ஏற்ற இறக்கமாத்தான் இருக்கும்.



**கும்பம்** : (அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)

உங்கள் திட்டங்கள் நிறைவேறு வதற்கான வாய்ப்புகள் கூடி வரும். உங்கள் திறமையும் பேச்சாற்றலும் வெளிப்பட்டு ஆதாயம் தேடித் தரும். குடும்பத்தில் சுப காரியங்கள் நடைபெறும். சிலருக்குக் குழந்தை களால் குதூகலம் கிடைக்கும். விருந்துகளில் பங்கு பெறுகிற வாய்ப்பும் இருக்கு. ஸ்பெகு லேஷன், கொடுக்கல் - வாங்கலில் லாபம் கிடைக்கவே சான்ஸ் இருக்கு. சிலருக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் உண்டு. வெளி நாட்டுத் தொடர்பால லாபமும் உறுதி. உத்தி யோகஸ்தர்களுக்கு, புரமோஷன், ஊதிய உயர்வு களுக்கான சான்ஸ் நிறையவே இருக்கு.



**மீனம்** : (பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

சந்தர்ப்பங்கள் உங்களுக்குச் சாதகமாகவே இருக்கும். உங்கள் மதிப்பும் அந்தஸ்தும் உயரும். கலைத் துறை யினருக்குப் புகழ் கூடும். பக்தி, ஞானமார்க் கத்தில் உள்ளவர்களுக்கு ஒரு புத்தொளி பிறக்கும். பண விஷயம் தாராளமாவே இருக்கும். அதே சமயம், சின்னச் சின்ன தொந்தரவுகளுக் குப் பஞ்சமிருக்காது. எதிலும் அவசரமும் பதற்ற மும் வராம பார்த்துக்கறது அவசியம். தொழி லாளர்கள் தங்கள் வேலைகளில் அசிரத்தை காட்டினா பிரச்னைகள் வந்து சேரும். சட்டம், காவல் துறையினருக்குச் சவாலான காரியங் களைச் சந்திக்க வேண்டியிருக்கும்!

சஞ்சீவ் கபூர். Zee டீ.வி.யில் கடந்த ஐந்தாண்டுகளுக்கு மேலாக ஒளிபரப்பாகிவரும் 'கானா கஜானா' ('உணவுப் பொக்கிஷம்' என்று பொருள் கொள்ளலாம்) என்கிற சமையல் நிகழ்ச்சி மூலம் வெகு பிரபலமாகி விட்டவர். இவர் எழுதியுள்ள 'கஜானா அஃப் இண்டியன் ரெசிபீஸ்' என்ற சமையல் கலைப் புத்தகம் விற்பனையில் சாதனை புரிந்து கொண்டிருக்கிறது. டெல்லியில், கேடரிங் டெக்னாலஜி படித்து விட்டு, மத்திய சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் அசோக் குரூப் ஓட்டல்களில் பணிபுரிந்தவர். இவருக்கு அயல் நாடுகளில், இந்திய உணவுத் திருவிழாக்களில் பங்கேற்ற அனுபவமும் உண்டு. சென்னைக்கு வந்திருந்த சஞ்சீவ் கபூர், லேண்ட் மார்க் புத்தகக் கடையில், நேயர்களின் சமையல் சந்தேகங்களுக்கு விடையளித்தார். இடையிடையே தமது நகைச்சுவை உணர்ச்சியையும் வெளிப்படுத்தி, கைதட்டல் பெற்றார். அவர் அனுபவங்கள் ஒன்வொன்றும் ஒவ்வொரு ரகம் - சமையலுக்கு அவர் பயன்படுத்தும் வித விதமான மசாலாக்கள் போல...!



● டெல்லியில் காமன் வெல்த் நாட்டுத் தலைவர்களின் மாநாடு நடந்தது. பன்னாட்டுத் தலைவர்களும் வந்திருந்தனர். விருந்துக்கு முழுப் பொறுப்பு நான்தான். நிறைவு நாளன்று பிரத்யேகமான டின்னர் ஒன்றை அளித்தார் இந்தியப் பிரதமர். உணவு சாப்பிட்டபின், அனைவருக்கும் ஒரு பௌலில் தேர்ந்த திராட்சைகளையும், அவசியம் என்றால் அதனைத் தண்ணீரில் கழுவிச் சாப்பிட வசதியாக இன்னொரு பௌலில் தண்ணீரும் வைத்தோம். ஒரு குறிப்பிட்ட நாட்டின் தலைவர் திராட்சை, தண்ணீர் இரண்டு பௌல்களையும் மாறி மாறிப் பார்த்தார். சில திராட்சைகளை எடுத்து வாயில் போட்டு, மென்று விழுங்கியபின், பௌலில், (திராட்சையைக் கழுவ) வைத்திருந்த தண்ணீரை இரண்டு வாய் குடித்தார். மறுபடி திராட்சை. அடுத்து தண்ணீர். இப்படியே இரண்டையும் காலி செய்தார். அங்கே உணவு பறிமாறியவர்களுக்கோ, பயங்கர சிரிப்பு. ஆனால் அங்கே சிரிக்க முடியாதே! வாயை மூடிக் கொண்டு, சிரிப்பை அடக்கினது ஆயுசுக்கும் மறக்காது.

● ராஜீவ் காந்தி பிரதமராக இருந்த போது, ஷில்லாங் நகரத்தில் சார்க் நாடுகள் சந்திப்பு. சிரபுஞ்சி என்ற ஊரில் ஒரு லஞ்சுக்கு ஏற்பாடாகியிருந்தது. (உலகில் அதிக மழை பெய்யுமிடம் இது என்று, நாலாங் கிளாஸ் பூகோளத்தில் படித்திருப்பீர்களே! ஆனால் இப்போது இல்லையாம்!) சீதோஷ்ண நிலையும் மோசம். ஷில்லாங்கிற்கும், சிரபுஞ்சிக்கும் இடையே மலைப் பாதையில் மூன்று மணி நேரப் பயணம். பகல் ஒரு மணிக்கு விருந்து.

ஷில்லாங்கிலேயே சமைத்து, சிரபுஞ்சிக்கு எடுத்துக் கொண்டு போவதாக ஏற்பாடு. அப்படியே அனைத்து ஐட்டங்களும் சிரபுஞ்சி போய்ச் சேர்ந்தன. ஒவ்வொரு ஐட்டமாக நான் பரிசோதித்துக் கொண்டே வந்தபோது, மூன்று நான்கு ஐட்டங்கள், தட்ப வெப்பம், மலைப்பாதைப் பயணம் இவை காரணமாகக் கெட்டுப் போய் விட்டன. எனக்கு பகீரென்றது. கெட்டுப் போன உணவை

விருந்தினர்களான பன்னாட்டுத் தலைவர்களுக்குப் பறிமாற முடியுமா? உடனே, உள்ளூர்காரர்களை அழைத்து காய்கறிகள் எது கிடைத்தாலும் கொண்டு வரச் செய்தேன். கிச்சன் கேட்டேன். ஆன் தி ஸ்பாட் முடிவெடுத்து, அவசரம் அவசரமாகச் சமையல் செய்து முடித்தேன்.

டின்னர். எப்படி இந்த தகவல் இடைவெளி ஏற்பட்டது? அது ஒரு சுவாரசியமான கதை. பிரதமர் அலுவலகத்திலிருந்து, இந்திய சுற்றுலா வளர்ச்சிக் கழக சேர்மனுக்கு, ஏழரை மணிக்கு டின்னர் என்று தகவல்

# துரோகத்தைத் தாங்கினேன்! மீரா பிரசன்னம்!



பிரதமர் ராஜீவிடம் மட்டும், எதிர்பாராத பிரச்னை காரணமாக மெனுவில் சில மாற்றங்களைச் செய்ய வேண்டியதாகி விட்டதை ரகசியமாகத் தெரிவித்தேன். அவரும் நிலைமையைப் புரிந்து கொண்டு, 'பரவாயில்லை' என்றார். அவசரம் அவசரமாய்ச் சமைத்தவற்றைத்தான், அந்தக் குழுவினர்களுக்குப் பறிமாறினேன். எல்லாரும் ரொம்ப ரசித்தார்கள்.

● இந்திரா காந்தி பிரதமராக இருந்த போது, அவர் விருந்து அளித்தாலும் சரி, இல்லை கலந்து கொள்ளுவதாக இருந்தாலும் சரி, மாதுளை ஜூஸ் தயாராக இருக்க வேண்டும். எப்போது கேட்பார் என்று தெரியாது. அதே போல ராஜீவ், குளிர்ந்த காப்பியை விரும்பிக் கேட்பார். டெல்லியில் ஒரு குறிப்பிட்ட ஐஸ்கிரீம் பார்லரில் கிடைக்கும் ஐஸ்கிரீமை அவர் விரும்பிச் சாப்பிடுவது வழக்கம் என்பதால், ராஜீவ் விருந்துக்கு வருகிறார் என்றால், அந்த ஐஸ்கிரீம் பார்லரிலிருந்து, அனைத்து ஃபிளேவர் ஐஸ்கிரீம்களையும் வரவழைத்து விடுவோம். எது கேட்டாலும் கொடுக்க வசதியாய் இருக்குமே!

● நரசிம்மராவ் பிரதமராக இருந்த சமயம், ஹைதராபாத் இல்லத்தில் ஒரு விருந்து அளித்தார். பிற்பகல் மூன்றரை மணிக்கு விருந்து ரெடியாகி விட வேண்டும் என்று எங்களுக்குத் தகவல் வந்தது. அதன்படி, எல்லா ஐட்டங்களும் ரெடியாகி விட்டன. மேலதிகாரிக்குத் தகவல் கொடுத்தோம். சிறிது நேரத்தில் எங்களுக்கு அதிர்ச்சியான தகவல் வந்தது. இரவு ஏழரை மணிக்குத்தான் வந்திருக்கிறது. பிரதமர் சம்பந்தப்பட்ட விஷயம் என்பதால், அவர் தமது கீழ் பணியாற்றிய அதிகாரியிடம், ஏழு மணிக்கு பிரதமரின் டின்னர் என்று சொல்லி, எல்லாம் தயாராக இருக்கட்டும் என்று சொல்லியிருக்கிறார். அவர், தமக்கடுத்த அதிகாரியிடம் ஆறரை மணிக்கு விருந்து தயாராக இருக்கட்டும் என்று உத்தரவிட்டிருக்கிறார். இப்படி, ஒவ்வொருவரும் தமக்கடுத்தவரிடம், விருந்து நேரத்தை அரை மணி முன்னதாகச் சொல்லி விட்டார்கள். கடைசியாக, எனக்கு மூன்றரை என்று தகவல் தந்திருக்கிறார்கள். அப்புறம் என்ன! தலையிலடித்துக் கொண்டு சமைத்தவற்றை மறுபடி ஏழு மணிக்கு சூடு பண்ணிப் பறிமாறினோம்!

● ருஷ்யாவில் 'ஃபெஸ்டிவல் அஃப் இந்தியா' இருபத்தியோரு நாட்களுக்கு, கோலாகலமாய் நடை பெற்றது. உணவுப் பிரிவுக்கு நான்தான் பொறுப்பு. என் கீழ் பணி புரிய ஒன்பது பேர் இருந்தனர். எதிர்பார்த்ததைவிட ஏகப்பட்ட கூட்டம். எதைத் தயாரித்துக் கொடுத்தாலும், நிமிடத்தில் காலியாகி, இன்னமும் தேவை என்கிற நிலைமை. நாங்கள் பத்துப் பேர் மட்டுமே சமையல் என்பதால், டைனிங் பகுதியில் விற்பனையை ருஷ்யர்களே கவனித்துக் கொண்டிருந்தனர். எங்களுக்கு வேலை செய்து மாளவில்லை. இந்திய உணவு வகைகள் ருஷ்யர்களை அந்த அளவுக்குக் கவர்ந்துவிட்டன. அப்போது ஏற்பட்ட ஒரு தமாஷான அனுபவம்! ஒரு நாள் 'இப்போது கொடுத்தனுப்பினீர்களே ஒரு ஐட்டம். அது உடனடியாக இன்னும் வேண்டும்' என்று தகவல் வந்தது. எனக்கு எந்த ஐட்டத்தைக் குறிப்பிடுகிறார் என்று புரிய

வில்லை. நேரடியாக விற்பனைப் பகுதிக்குப் போய்ப் பார்த்தபோது, அதிர்ச்சி. விற்பனைக் கவுண்டரில் ஒரு பிளேட் பிரியாணியில் சமோசாவையும், ஜிலேபியையும் வைத்து விற்றுக் கொண்டிருந்தனர். (அனைத்தும் ஒரே ஐட்டம் என்று நினைத்து விட்டார்கள்) இவை மூன்றும் வேறு வேறு ஐட்டங்கள் என்று விளக்கினால் அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. நானும், சரி போனால் போகிறதென்று, மூன்று ஐட்டங்களையும் தயார் செய்து நீங்கள் விரும்பிய காம்பினேஷனில் விற்றுக் கொள்ளுங்கள் என்று சொல்லி விட்டேன்.

● அலகாபாதில், கும்பமேளா நடைபெற்ற போது அங்கே ஒரு ரெஸ்டாரன்ட் திறந்தோம். மூணு கோடி பேருக்குச் சமைத்துப் போட்ட அனுபவம் அங்கு கிடைத்தது. என் கீழ் நூறு பேர் பணிபுரிந்தனர். அவரவருக்குப் பணியைப் பிரித்துக் கொடுத்து விட்டு எங்கே உதவி தேவையோ அங்கே என்று மாறி மாறி வேலை செய்தேன் நான். அதிகபட்ச டிமாண்டு ஜிலேபிக்குத்தான். எனவே பெரும்பாலான நேரம் நான் ஜிலேபி தயாரிப்பிலேயே கழித்தேன். இப்போது, நான் கண்ணைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்தால் கூட அவ்வளவு நன்றாக ஜிலேபி பிழியுமளவுக்கு அனுபவம் பெற்று விட்டேன்!

● வாரணாசிக்கு, சுமார் நூறுபேர் அடங்கிய பிரிட்டிஷ் சுற்றுலாப் பயணிகள் குழு ஒன்று வந்தது. அவர்களுக்கு, பிரத்யேகமாக சமைத்துப் போட நான் அனுப்பப்பட்டேன். குழுவின் தலைவர் ஒரு பெண்மணி. அவருடன் தினமும் என்ன சமைப்பது என்று கலந்தாலோசித்துச் சமைப்பேன். ஒரு நாள் இன்றைக்கு, 'குரோக்கடம்' செய்து போடுங்கள் என்று சொல்லி விட்டார். எனக்கு அது என்ன 'குரோக்கடம்' என்று தெரியவில்லை. இந்திய உணவு வகைகளின் நடமாடும் என்சைக்ளோபிடியா என்று குறிப்பிடப்படும் எனக்கு, ஓர் ஐட்டம் செய்யத் தெரியாது என்று சொல்ல முடியாத ஈகோ. 'ஓ எஸ்', தயார் பண்ணிவிடுகிறேன் என்று அந்தப் பெண்மணியிடம் சொல்லி விட்டு விடை பெற்றேன். என் அறைக்குப் போய் 'குரோக்கடம்' என்றால் என்ன என்று பலவித ரெசிபி புக்ஸையும் புரட்டினேன். மற்ற 'குக்'களிடம் விசாரித்தேன். ஒரு பயனுமில்லை. மறுபடியும் அந்த பிரிட்டிஷ் பெண்மணியிடமே போனேன். ஆனால், குரோக்கடம் பண்ணத் தெரியாது என்று சொல்லுவதற்கு' இல்லை. அப்புறம்? "மேடம் உங்களுக்கு என்ன மாதிரி குரோக்கடம் பிடிக்கும்?"

"ஓ! குரோக்கடத்தில் பல வகைகள் இருக்கின்றதா?"

"ஆமாம்! உங்களுக்கு மிகவும் பிடித்தது எது என்று சொல்லுங்கள்! நீங்கள் என் மரியாதைக்குரிய விருந்தினராயிற்றே!"

"இனிப்பாக இருக்குமே!"

"அது சரி! (அட! அது ஒரு ஸ்வீட் வகை என்று க்ளு கிடைத்து விட்டது!) இனிப்பிலேயே வெரைட்டி உண்டு. உங்களுக்குக் குறிப்பாக எது பிடிக்கும்? (வாரணாசியின் குறிப்பிட்ட கடையின் பெயரைச் சொல்லி) அந்தக் கடையில் மிகப் பிரபலமாக விற்கிறதே! அதே வெரைட்டிதான் வேண்டும்!"

"நோ பிரப்ளம். அதையே ரெடி பண்ணி

## போடு சக்கை!

ஒன்றல்ல, இரண்டல்ல! கிட்டத்தட்ட 74 தங்க மெடல்களை அள்ளிக் கொண்டு வந்து விட்டார்கள், சென்னை மீனாட்சி கல்லூரி மாணவிகள்! 1997 மற்றும் 98 ஆம் ஆண்டு இக்கல்லூரியில் பயின்று பட்டம் பெற்ற மாணவியர்களுக்கான பட்டமளிப்பு விழா சமீபத்தில் நடைபெற்றது. மொத்த

"ஊர் எல்லைல
திருடினது தப்பாப் போச்சு."
"என்னாச்சு?"
"ரெண்டு ஏரியா போலீசும்
மாமூல் கேட்டு நச்சரிக்கிறாங்க!"
– சீர்காழி ரேவதி



மாக 256 மாணவியர், பல்வேறு உயர் நிலைகளை எட்டி மெடல்கள் பெற்றனர். இவர்களுள் பல்கலைக் கழகத்தின் முதல் பத்து ரேங்குகளில் தேறியவர்களுக்குக் கிடைத்தவையே இந்த 74 தங்கப் பதக்கங்கள்!

பெருமிதத்தின் உச்சியில் காணப்பட்ட மீனாட்சி கல்லூரியின் முதல்வர் லக்ஷ்மியிடம், "இப்படி சக்கை போடு போடறாங்களே பெண்கள்?" என்று ஆரம்பித்ததுதான் தாமதம்.

"பொதுவாகவே படிப்பைத் தவிர இதர விஷயங்களில் பெண்களின் கவனம் அதிகமாகத் திரும்புவதில்லை! முன்னேற வேண்டும், அதைவிட சாதிக்க வேண்டும் என்ற உத்வேகம் இன்றைய பெண்களிடம் அதிகம் காணப்படுகிறது. பெண்கள் கல்லூரியிலும் படிப்பை அசட்டையாக எடுத்துக் கொள்பவர்கள் உண்டுதான்... ஆனால், நாங்கள் அவர்களை லேசில் விடுவதில்லை!" என்றார் சிரித்தபடியே.

— பத்மா கோவிந்த்



• மூன்று பாடங்களில் பதக்கம் வென்ற மாணவியுடன் முதல்வர் லட்சுமி மற்றும் மேற்படிப்புத் துறைச் செயலர் பி. செல்வம்.

விடுகிறேன்!" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டேன்.

எனக்கோ சிரிப்பு தாங்கவில்லை. காரணம் அவர் குறிப்பிட்ட குரோக்கடம், வாரணாசியில் மிகப் பிரபலமான 'கிர் கதம்' என்கிற ஸ்வீட். மேலே, 'பேடா' போல இருக்கும். ஆனால் உள்ளே மினி சைஸ் ரசகுல்லா இருக்கும். சாப்பிட்டால், வெகு ருசியாக இருக்கும். அப்புறம் என்ன? நேரே ஒரு ஆளை அந்தக் கடைக்கே அனுப்பி, குரோக்கடம் அதாவது கிர் கதம் வாங்கி வரச் செய்து விருந்தினர்களுக்குப் போட்டு சபாஷ் வாங்கி விட்டேன்.

● ஜப்பான் நாட்டின் ஒஸாகாவில், இந்திய உணவுத் திருவிழா. இரண்டு உதவியாளர்களுடன் நான் ஜப்பான் போனேன். உணவுத் திருவிழா நடந்த ஓட்டலின் தலைமை செஃப் ஒரு ஜெர்மன்காரர். போய் இறங்கியவுடனேயே, 'இங்கே இந்திய உணவுக்கு அத்தனை மவுசு இல்லை. எனவே கூட்டம் வராது' என்றார். நான், 'பல நாடுகளில் இதுபோன்று உணவுத் திருவிழாக்கள் நடத்தியிருக்கிறேன். மிக நல்ல ரெஸ்பான்ஸ் இருக்கும். எனவே நல்ல கூட்டம் வரும் என்று எனக்கு நம்பிக்கை இருக்கிறது' என்றேன். 'பெட் என்ன?' என்றார்.

'நான் எதிர்பார்க்கும் ரெஸ்பான்ஸ் இல்லையென்றால், உங்கள் ஹோட்டல் ஊழியர்கள் மொத்த பேருக்கும் நான் உணவு சமைப்பேன். நான் ஜெயித்தால் எனக்கு மட்டும், உங்கள் கையால் சமைத்துப் போட வேண்டும்' என்றேன். அவரோ 'எப்படியும் உங்கள் கையால் சமைத்துப் போட்டு சாப்பிடுகிற பாக்கியம்தான் எனக்குக் கிடைக்கப் போகிறது' என்றார் கிண்டலாய்.

குறிப்பிட்ட நேரம் வந்தது. உணவகத்தில் ஆளே இல்லை. ஒரு மணி நேரம் கழித்து, அவர் வந்தார். கிண்டலாய் 'இரண்டு டேபிள் ஃபுல்' என்றார். இன்னும் ஒரு மணி நேரம் போனது, 'இன்னும் மூணு பேர் வந்திருக்கிறார்கள். நீங்கள் வேண்டுமானால், சவால்படி எனக்குச் சமையல் தயார் பண்ணப் போங்களேன்' என்றார். எனக்கோ ஒரே கடுப்பு. அப்புறம் இரண்டு மணி நேரத்துக்கு ஆளையே காணோம். என்ன ஆயிற்று அவருக்கு என்று அறிய உணவகத்தினுள் தலையை நீட்டினேன். ஆச்சரியம்! ஹவுஸ் ஃபுல். சவால் விட்ட செஃப் எங்கே என்ற போது, உணவகத்துக்கு வெளியே இருப்பதாகச் சொன்னார்கள். போய்ப் பார்த்தால், சாப்பிட வந்தவர்கள் கியூவை சமாளித்துக் கொண்டிருந்தார்.

**ச**ஞ்சீவ் கபூருக்குத் திருமணமாகி ரசிதா, கிருதி என்று இரண்டு பெண்கள். மனைவி பெயர் அல்யோனா.

*"வீட்டில் யாருடைய சமையல் சஞ்சீவ்?"*

*"யார் பெட்டராக சமைப்பார்களோ அவர் தான்! அதாவது என் மனைவிதான்!" (சிரிக்கிறார்)* ●

சந்திப்பு : **மௌலி**

படம் : **ஸ்ரீஹரி**

நஜ்மா ஹெப்துல்லா ராஜ்ய சபாவின் துணைத் தலைவர். சபையின் நடவடிக்கைகளை மிக சாதுர்யமாக நடத்துபவர் என்ற பெயர் இவருக்கு உண்டு. இவரது நகைச்சுவை உணர்வு மிகப் பிரபலம். பெண்களுக்கு முப்பத்து மூணு சதவீத இட ஒதுக்கீட்டை வலியுறுத்தி சென்னையில் நடத்தப்பட்ட கருத்தரங்கில் கலந்து கொள்வதற்காக வந்திருந்த அவர் கல்கிக்கு அளித்த பிரத்தியேகப் பேட்டி:

# அடக்கமாட்டாமல் அழுது விட்டேன்...

*"பாராளுமன்றம் அடிக்கடி கூச்சல், குழப்ப மன்றமாகி விடுகிறதே. இதற்கு என்ன காரணம்?"*

"லோக் சபா நடவடிக்கைகள் பற்றி நான் பேசுவது முறையில்லை. ராஜ்ய சபாவைப் பொறுத்த வரை, என்னால் பேச முடியும். உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் தம் கருத்துக்களைச் சொல்லுகிற உரிமை இருப்பதைப் போலவே, மற்ற உறுப்பினர்கள் சொல்லும் கருத்துக்களைக் கேட்கும் கடமையும் உண்டு. உறுப்பினர்கள் தமது கடமையை மறந்துவிடுவதன் விளைவுதான் கூச்சலும், அமளியும்.

"கட்சி ரீதியாகப் பார்த்தால், ஒரு கட்சி எதிர்க்கட்சி வரிசையில் இருக்கும்போது, எது எதை ஆட்சேபிக்கிறார்களோ, அதையே அவர்கள் ஆளும் கட்சியாக வந்து செய்யும்போது, பிரச்னை எழுப்பப்படுகிறது. பா.ஜ.க. எதிர்க்கட்சியாக இருந்த போது, ஆளும் கட்சி, அவசரச் சட்டம் கொண்டு வந்தால், பாராளுமன்றத்தில் மசோதா கொண்டு வந்து சட்டம் நிறைவேற்றுவதுதான் முறை. அவசரச் சட்டங்கள் மூலமே ஆண்டு விடலாம் என நினைப்பது தவறு என்று எதிர்த்தார்கள். ஆனால் அவர்களே ஆட்சிக்கு வந்தபின் அவசரச் சட்டங்கள் போட்டார்கள். எதிர்ப்பு வந்தது நியாயம்தானே? அதே போல், முந்தைய ஆளும்கட்சிகள் செய்தவற்றை இப்போது ஆளும் பி.ஜே.பி. செய்கிறபோது அதைத் தவறு என்று மற்ற கட்சிகள் சொல்கின்றன. ஆக, அரசியல்

— நஜ்மா ஹெப்துல்லா பேட்டி

• ஐயப்பபணிக்கர்



**ஒரு சமயம் ஹிந்திக் கவியரசி மகாதேவி வர்மாவைக் கவிஞர்கள் சிலர் சந்தித்துத் தம் கவிதைகளை வாசித்தார்கள். ஒரு தமிழ்க் கவிதை படிக்கப்பட்ட போது ஒரு நண்பர் ''அதை ஹிந்தியில் சொல்லட்டுமா?'' என்று கேட்டார்.**

**மகாதேவி வர்மா சிரித்துக் கொண்டே சொன்னார்: ''வேண்டாமே. எனக்கு இந்தக் கவிஞனின் ஆத்மாவைப் புரிந்து கொள்ள முடிகிறது; அது போதுமே!''**

**அண்மையில் சாகித்ய அகாதெமி நடத்திய கவிதை வாசிப்பு ஒன்றில் மலையாளக் கவிஞர் அய்யப்பப் பணிக்கர் சங்கீதக் குரலில் தம்முடைய கவிதைகளைப் படித்தபோது மேற்சொன்ன நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது.**

**ஒரு கவிஞர் தம் கவிதைகளைத் தாமே படிப்பது– அதுவும் பணிக்கர் போல நல்ல குரல் வளமுடையவராயிருந்தால்– சுகமோ, சுகம்!**

கட்சிகள், வசதிக்கேற்பத் தங்கள் நிலைப்பாடுகளை மாற்றிக் கொள்ளுவதுதான் அடிப்படை பிரச்னை.''

*''கூச்சலும், குழப்பமும் ஏற்படும் டென்ஷனான சமயங்களில், அதை எப்படிச் சமாளிப்பீர்கள்?''*

''நிலைமை அத்து மீறும் என்று தோன்றினால், உடனடியாக அவை நடவடிக்கைகளை ஒத்தி வைத்து விடுவேன். அவசியமானால், சம்பந்தப்பட்ட உறுப்பினர்களை என் சேம்பருக்கு அழைத்து, சமாதானமாகப் பேசுவேன். ராஜ்ய சபையைப் பொறுத்தவரை அடிதடி அமளியெல்லாம் இல்லை என்று சொல்லி விடலாம்.''

*''பாராளுமன்றம் நடைபெற ஒரு நிமிடத்துக்குப் பல்லாயிரம் ரூபாய் செலவாகிறது என்கிறார்கள். ஆனால், பாராளுமன்றத்தில் பயனுள்ள முறையில் விவாதங்கள் நடைபெறுவதில்லை என்று குற்றம் சாட்டப்படுகிறதே!''*

''பொதுவாக, காலப் போக்கில், எல்லா விஷயங்களும் தரம் குன்றிப்போய் விட்டன. இது பாராளுமன்றத்திலும் பிரதிபலிக்கிறது. பாராளுமன்ற அவைகளுக்கு வருபவர்கள் யார்? நம் நாட்டு மக்களால் தேர்ந்தெடுத்து அனுப்பி வைக்கப்படும், நம் நாட்டுக் குடிமகன்கள்தானே! முனிசிபாலிடிகளால் தீர்க்கப்படவேண்டிய குடிநீர், சாலை வசதிப் பிரச்னைகளைக் கூட, பாராளுமன்றத்தில் பேசுகிறார்கள். இதுபோன்ற சமயங்களில், நிலைமையைப் புரிய வைக்கிறேன்.''

*''ராஜ்ய சபை நியமன உறுப்பினர்களாக வருகிறவர்கள், அலங்கார பொம்மைகள் போல் இருப்பார்கள். விவாதங்களில் கலந்து கொள்ள மாட்டார்கள் என்பது எவ்வளவு தூரம் உண்மை?''*

''எம்.எஃப். ஹுசைன், பண்டிட் ரவி சங்கர், ஆர்.கே. நாராயணன், மால்கம் ஆதிசேஷையா போன்ற பலர், அவரவர் சம்பந்தப்பட்ட, அல்லது அவருக்கு நெருக்கமான சப்ஜெக்ட் பற்றி விவாதம் நடக்கிறபோது ஆர்வமாய்க் கலந்து கொள்ளுவார்கள். ஆர்.கே. நாராயணன், பள்ளிக் கூடம் செல்லும் குழந்தைகள் மூட்டை போல புத்தகப்பை சுமந்து செல்வதைக் கண்டித்துப் பேசியது நாடு தழுவிய விவாதத்தை ஏற்படுத்தியது நினைவிருக்கிறதா? இந்தியாவின் அறிவியல், தொழில் நுட்பக் கொள்கைகள் விவாதிக்கப்படுகிறபோது விஞ்ஞானிகளான எம்.பி.கள் பேசியிருக்கிறார்கள். பத்திரிகையாளர் எம்.பி.கள் கருத்துச் சுதந்திரம் பற்றி நிறைய பேசியது உண்டு. இவர்கள் எல்லாம் அனைத்து வித விவாதங்களிலும் பங்கேற்பார்கள் என்று எதிர்பார்க்கக் கூடாது.''

*''தமிழக எம்.பி.க்கள் எப்படி?''*

''தமிழ்நாட்டுப் பிரச்னை குறித்த விவாதம் என்றாலே எனக்கு உள்ளூர டென்ஷன்தான். தி.மு.க., அ.தி.மு.க., இரண்டு கட்சி எம்.பி.களும் கடுமையாய் வாக்குவாதம் செய்வார்கள். சிறு விஷயங்களுக்குக் கூட மோதிக் கொள்வார்கள். திடீரென்று தமிழில் வாக்குவாதம் செய்யத் தொடங்கி விடுவார்கள். எனக்கு ஒன்றும் புரியாமல் சில விநாடிகள் திகைத்துப் போவேன். ஒரு தடவை சென்னையில் நடைபெற்ற துப்பாக்கிச் சூடு பற்றி இருகட்சி எம்.பி.களும் விவாதித்தனர். நிலைமை ரொம்ப சூடாகிப் போனது. நான் தலையிட்டு 'துப்பாக்கிச் சூடு நடந்த இடத்தில்கூட, நிலைமை இப்படி சூடாக இருக்குமா என்பது சந்தேகம். நீங்கள் இப்படி மோதிக் கொள்ளுகிறீர்களே!' என்று சொல்லி, நிலைமையைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தேன்.''

*''உங்களது சாதனையாக, நீங்கள் பெருமைப்படும் விஷயம் எது?''*

''முன்பெல்லாம், பல்வேறு பாராளு

# சுகமோ சுகம்!

**மலையாளக் கவிதைகளை அவர் இசை யாப்பு பொழிய, அவருடைய மாணவர், பிரபல எழுத்தாளர் நீல.பத்மநாபன் தமிழில் வழங்கி னார். 'பணிக்கர் சார்' மாதிரி தம்மால் பாட முடியவில்லையே என்று வருத்தப்பட்டார். ஆனா லும் காயப்படாத கவிதை வரிகள்.**

**எழுபதுகளில் 'அவசரநிலை' அரசோச்சிய போது எதிர்ப்புக்குரல் தந்தவர்களுள் அய்யப்பப் பணிக்கரும் ஒருவர். சட்டமீறல்கள், அதிகாரவர்க்கம் வளைத்துக் கொள்வது போன்றவற்றை அங் கதமுறையில் சாடிய பாடல் ஒன்று. 'கார்ட்டூன் கவிதைகள்' என்று சொன்னார். ''மாற்றிடுக மாற்றிடுக சட்டங்களை. இன்றேல் அவை மாற்றிடும் உங்களை'' என்று முடியும் அந்தக் கவிதை மேலோட்டமாகப் பார்த்தால், துணி, கோழி, பசு மாடு திருடுவதைச் சொல்லும். தன்னுடைய தேவைக்காகத்தான் திருடினேன் என்று சாதிக்கும் போக்கு.**

**இந்தக் கவிதை அப்போதைய ஆளுந்தரப்பு நண்பர் ஒருவரின் பத்திரிகையிலேயே வெளியானதாம்! கவிதையின் உட்பொருளைப் புரிந்து கொள்ளாமலே, இதைத் திருவனந்தபுரம் வானொலி நிலையம் பலமுறை ஒலிபரப்பியதாம்!**

**— சுப்ர. பாலன்**

• நீல. பத்மநாபன்

மன்றக் கமிட்டிகளுக்கும், லோக் சபா உறுப்பினர்கள்தான் தலைவர்களாக இருப்பார்கள். அவர்களுடன் போராடி, மூன்றில் ஒரு பங்கு கமிட்டிகளுக்கு ராஜ்ய சபை உறுப்பினர்களைத் தலைவர்களாக நியமிக்கும்படி செய்தது நான் பெருமைப் படும் சாதனை.''

*''நினைவில் நிற்கும் அனுபவங்களில் சிலவற்றைச் சொல்லுங்களேன்?''*

''ராஜீவ்காந்தி, பிரதமராக இருந்த நேரம். போபர்ஸ் பிரச்னை உச்சகட்டத்திலிருந்தது. மொத்த எதிர்க்கட்சியினரும் அரைமணி நேரம், ராஜ்யசபை மையப் பகுதியில் கூடி நின்று கடுமையாய் எதிர்ப்புத் தெரிவித்தது மறக்க முடியாதது. ராஜீவ்காந்தி, முதலில் பஞ்சாயத்து ராஜ் சட்டம் மூலம் பெண்களுக்கு அதிகாரத்தைப் பகிர்ந்தளிக்க முன் வந்தபோது அந்த மசோதா லோக் சபையில் அங்கீகரிக்கப்பட்டது. ஆனால் ராஜ்ய சபாவில் நள்ளிரவு வரை விவாதம் நடந்து, இறுதியில் தோல்வியடைந்தது. அன்று இரவு, ராஜீவ் காந்தியுடன் டெலிபோனில் தொடர்பு கொண்டு உங்கள் முற்போக்கான நல்ல முயற்சி தோல்வியடைந்து விட்டதே என்று நான் வேதனையுடன் சொன்ன போது, என்னையும் மீறி அடக்க மாட்டாமல் அழுதுவிட்டேன். இன்று தோல்வி கண்டாலும், என்றாவது ஒரு நாள் அது நனவாகும் என்று என்னைச் சமாதானப் படுத்தினார். மறுபடியும் அவரே அதை வெற்றிகரமாகச் செயல்படுத்தியது பாராட்டுக்குரிய விஷயம்.''

*''சீரியஸ் விஷயங்கள் ஒரு பக்கமிருக்கட்டும்; தமாஷான சம்பவங்கள் ஏதாவது சொல்லுங்களேன்!''*

''நான் பெண்மணி என்பதை மறந்துவிட்டு, பல உறுப்பினர்கள், சார்! என்று அழைத்துப் பேசுவது சகஜம். ஆந்திராவைச் சேர்ந்த ஒரு எம்.பி. என்னை 'மேடம் சார்!' என்று விசித்திரமாக அழைப்பார். அசோக் சென் மத்திய சட்ட அமைச்சராக இருந்த போது, கோர்ட் ஞாபகத்தில் என்னை 'மைலார்டு' என்று குறிப்பிட்டுவிடுவார். ஒரு தடவை, அவர் அப்படி அழைத்தபோது நல்லவேளை 'மை லேடி!' என்று அழைக்காமல் இருந்தீர்களே! அப்புறம் யாராவது தவறாக அர்த்தம் பண்ணிக் கொண்டு விடுவார்கள்' என்று ஜோக்கடித்தபோது உறுப்பினர்கள் ரசித்தனர்.

''கட்சித்தாவல் தடுப்புச் சட்டம் நிறைவேறிய சில நாட்களில் நடந்தது இந்தச் சம்பவம். எதிர்க்கட்சிகள் அமரும் பகுதியில் பிலுமோடிக்கு சீட். அவர், தம் இருக்கையிலிருந்து எழுந்து, எதிர்ப்புறம் நோக்கிச் சென்றார். அது ஆளும் காங்கிரஸ் எம்.பி.களுக்கானது. அங்கு வந்தவர் சில விநாடிகள் நின்று என்னைப் பார்த்து, 'நான் காங்கிரஸ் கட்சிக்கு வந்து விட்டதாக நினைத்து, கட்சித் தாவல் தடுப்புச் சட்டத்தைக் காட்டி பதவியைப் பறித்து விடாதீர்கள்; எனக்கு வேறுவழியில்லை. இந்தப் பக்கம் வந்து தான் தீர வேண்டிய கட்டாயம். காரணம் ஆண்களுக்கான டாய்லெட்டிற்கு, இப்படித்தானே போக வேண்டும்?' என்று சொன்னாரே பார்க்கலாம்! அவை முழுக்க சிரிப்பு அலை!''

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**
படம்: **ரவிசங்கரன்**

பகவான் நம் மீதுள்ள கருணையினாலே அவதரிக்கிறான் என்று சொன்னேன். எப்படி அவதரிக்கிறான்...? அவன் திருமேனி சுத்த சாத்விகமான திருமேனி. அந்தத் திருமேனியோடுதான் அவதரிக்கிறான் பரமாத்மா.

இந்த சுத்த சாத்விகமான திருமேனி நம்மைப் போன்ற ஜீவாத்மாக்களுக்கு அமைவதில்லை. நமக்கு ரஜோ குணம், தமோ குணம் உண்டு. சத்வ குணத்தை நாம் தேடித் தேடி அலைய வேண்டும்! சுத்த சாத்விகம் பகவானுடையது. அந்தக் குணத்தை நாம் சம்பாதிக்க வேண்டுமானால் ரொம்ப சிரமப்பட வேண்டும். ஏகப்பட்ட நியமங்கள். ஆகாரத்தில் சுத்தி வேண்டும். எவ்வளவோ நியமங்கள் சொல்லப்படுகின்றன.

தமோ குண, ரஜோ குணத்தைக் குறைத்துக் குறைத்துக் குறைத்து சாத்விகத்தை விருத்தி பண்ணிக்கொண்டு, பகவானை சேவித்து, உயர்ந்த கதி அடைய வேண்டும்.

பகவான் சுத்த சாத்விக மயனாக இருப்பதனாலே அவனை தியானம் பண்ணினால் அந்த ரஜோ குணம், தமோ குணம் போய் விடும். இதை அந்த பிரும்மாவிடத்திலே வேதங்களைக் கொடுத்தும், அதை அவர் தொலைத்தபோது மீட்டுக் கொடுத்தும் உணர்த்துகிறார் பகவான்.

எவ்வளவு கஷ்டப்பட்டு அத்யயனம் பண்ணின வேதம்! அதைத் தொலைத்தார் பிரும்மா. அந்த வேதத்தை மது என்று ஓர் அசுரனும் கைடபன் என்று ஓர் அசுரனுமாக அபகரித்துக்கொண்டார்கள்.

மது என்பவன் ரஜோ குணத்துக்கு உருவகம். கைடபன் தமோ குணத்துக்கு உருவகம். பிரும்மா பகவானைப் பிரார்த்தனை பண்ணினார். சாத்விகமயமான அவன் அந்தப் பிரார்த்தனைக்கு இரங்கிப் போனான். தமோ குணமாகிற கைடபனையும் ரஜோ குணமாகிற மதுவையும் அழித்து வேதத்தை மீட்டுக் கொண்டு வந்து கொடுத்தான்.

ஆகையினாலே, நம்மிடத்தில் உள்ள தமோ குணம், ரஜோ குணம் இரண்டும் அசுரர்கள். அவர்களை விரட்ட நாம் சுத்த சாத்விகமான மூர்த்தியை மனத்தில் பிரதிஷ்டை பண்ணிக் கொள்ள வேண்டும்.

ஆக, மது-கைடப விருத்தாந்தத்திலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால், அவன் அவதார காலத்திலே என்னென்ன பண்ணினானோ, அது மொத்தமும் நம் உடம்பிலேயே இருக்கிறது. அதை எடுத்து, ஒவ்வொரு சரித்திரத்தையும் உடம்பிலே சேர்த்து, சேர்த்து அன்வயம் பண்ணிப் பார்த்தோமானால்... வெளியிலே சரித்திரமாக நடந்தது - இந்த லோகத்திலே பாரத தேசத்திலே பகவான் நடத்திக் காட்டியது மொத்தமும் நம்முடைய சரீரத்திலேயே நடந்திருக்கிறது என்பதை நாம் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலேயும் பார்க்கலாம்.

ஆகையினாலே, நமக்கு நன்மை பயக்கக்கூடியவன், எதிர்காலத்திலே க்ஷேமத்தை உண்டு பண்ணக்கூடியவன், அக்னிக்கு அந்தர்யாமியாய் இருக்கும்படியான அந்த விஷ்ணுவே ஆனதனாலே, பகவான் விஷ்ணுவுக்குப் புரோஹிதன் என்று பெயர்.

இதை நான்மறைகளும் சொல்கின்றன. கர்ம காண்டம் சொல்கிறது, பிரும்ம காண்டம் சொல்கிறது. ஈசாவாஸ்ய உபநிஷத் சொல்கிறது. பதினெட்டு மந்திரங்கள் கொண்ட இந்த ஈசாவாஸ்ய உபநிஷத்தான் பிற்காலத்தில் பகவத்கீதையாகப் பரிணமித்தது. அதிலே மோக்ஷ சன்யாஸம் என்று சொல்லக்கூடியது பதினெட்டாவது அத்தியாயம்.

யஜுர் வேதம் ‘ அக்னே! என்னை நல்ல மார்க்கத்தில் அழைத்துப் போ!' என்று கூப்பிட்டுச் சொல்கிறது. 'நீதான் அழைத்துப் போக வேண்டும்' என்கிறது.

அந்த பகவான்தான் நம்மை நல்ல மார்க்கத்தில் அழைத்துப் போகக் கூடியவன். பகவானை 'வித்வான்' என்று கொண்டாடுகிறது வேதம். எல்லாம் தெரிந்தவன் வித்வான் நன்கு எல்லாவற்றையும் உணர்ந்தவன்.






புரோஹித சப்தத்துக்கு இப்படி யஜுர் வேதத்திலே விளக்கம் கிடைக்கிறது. அதற்கும் மேலே பிரார்த்திக்கிறது:

என்னிடத்தில் இருக்கும்படியான பாபக் குவியல்களை நீக்குவாயாக என்று வேண்டுகிறது.

பாபங்கள் - 'ஏன:' என்று குறிப்பிடப் படுகின்றன. ஏன: என்றால் மூன்று விதமான பாபங்கள் - சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமி என மூன்று பாபங்கள். மூன்றையும் சேர்த்து ஒரே பதமாகச் சொல்வதானால் ஏன:

சஞ்சிதம் என்றால் சேர்த்து வைத்தது. 'நீ........ள வந்துள்ளதே' என்பார் சுவாமி தேசிகன். 'நீள' சப்தத்தை நீள இழுக்க வேண்டும்!

எத்தனையோ நாளாக, எத்தனையோ ஜன்மாக்களாக - 'புனரபி ஜனனம் – புனரபி மரணம்!' என்று ஆதி

சங்கர பகவத் பாதாள் சொன்னமாதிரி - நீள ஜன்மம் ஜன்மாக வந்து, அதிலே சஞ்சிதம் நிறைய சேர்ந்திருக்கிறது. பாப மூட்டை கட்டி வைத்துக்கொண்டிருக்கிறோம்.

இப்போது நாம் மனிதனாகப் பிறந்து, இந்த நாம - ரூபத்துடன் பல விதமான நாமாக்கள் ரூபம், பலவித மான கோத்திரங்கள், பலவிதமான குடும்பத்தில் வந்து பிறந்த பிறகு நமக் கொரு நாமம், நமக்கொரு வாழ்க்கை அமைந்திருக்கிறது இப்போது. இதை நாம் பார்த்துக் கொண்டிருக் கிறோம் - பிரத்யக்ஷமாக. - இது என் னது? இதுதான் பிராரப்தம்! முன்னே சொன்ன மூட்டையிலிருந்து கொஞ் சம் எடுத்துச் செலவழித்துக் கொண் டிருக்கிறோம்! இப்போது நடை பெற் றுக்கொண்டிருப்பதெல்லாம் பிராரப்த வினை.

பிராரப்தத்தில் இப்படி வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறபோதே சாமான்ய மாய் புண்யமும் பாபமும் பண்ணிக் கொண்டேதானிருக்கிறோம். புத்தி பூர்வமாய் எத்தனையோ பாபங்கள்; அபுத்தி பூர்வ மாகவும் வேறு பாபங்கள்!... இவை மொத் தமும் வந்து கொண்டேயிருக்கும்.

இப்படி வருவது, ஏற்கெனவே வந்ததைக் காட்டிலும் அதிகம்! சஞ்சிதத்தைக் காட் டிலும் அதிகமானது இப்படிச் சேர்கின்ற பாபங்கள். இதற்குப் பெயர் ஆகாமி!

சஞ்சிதம் ஒரு பக்கம், ஆகாமி ஒரு பக்கம். இது இரண்டுக்கும் இடையில் பிராரப் தத்திலே உட்கார்ந்திருக்கிறோம் நாம்.

இவ்வளவும் சேர்ந்து ஏன:! இத்தனை யையும் வைத்துக்கொண்டு நாம் எப்போது முன்னேறுவது!? 'சாண் ஏறினால் முழம் சறுக்குகிறது' என்று சொல்வார்கள் பாருங்கள்... அப்படித்தான், கொஞ்சம் மேலே போனால் கீழே தள்ளி விட்டு விடுகிறது!

முக்கூர் ஸ்ரீமத் அழகிய சிங்கர் ஓர் உபன்யாஸத்திலே ரொம்ப அழகாகச் சொன் னார்:

கண்ணன் வந்து எழுந்தருளியிருக்கிறான். நாமெல்லாம் பாபத்தைப் பண்ணிவிட்டு உட்கார்ந்திருக்கிறோம் அவன் எதிரிலே.

பாபம் எப்படித் தீரும்?

இங்கேயிருந்து ஒரு மைல் தூரத்துக்குப் பாபமே பாபமே என்று எழுதிக் கொண்டே போனால் எவ்வளவு பாபமோ, அவ்வளவு பாபத்தை நாம் பண்ணியிருக்கிறோம்.

அது மொத்தமும் எப்போது போகும்?... இங்கே வந்து டோலையிலே உட்கார்ந்திருக் கிறானே எம்பெருமான், அவன் சொன்னான் அல்லவா... 'என் திருவடியையே பற்று' என்று... அதைப் பண்ணி விட்டோ மானால் இந்தப் பாபமெல்லாம் போய் விடும்.

உலகத்தில் உள்ள மணல் துகள் அளவுக்கு இருக்கின்றன நம் பாபங்கள். 'பாபம் தவிர வேறு என்ன எனக்குத் தெரியும்?' என்று கேட் கிறார் ஆழ்வார். நான் 'மஹா அபராத சக்ரவர்த்தி' என்று ஆளவந்தார் பேசுகிறார்.

அந்த எம்பெருமானைப் பார்த்து இதை யெல்லாம் நீக்கு என்று கேட்டுக் கொள் கிறோம்.

இவ்வளவு உபகாரம் பண்ணுகிறாயே, எம் பெருமானே! உனக்கு என்னாலே என்ன பண்ண முடியும்? நம : நம: என்று சொல்லு வேன். அதைத் தவிர வேறு என்ன பண்ண முடியும்?

சேவிப்பது இல்லாவிட்டாலும், அஞ்சலி பண்ணுவது இல்லாவிட்டாலும் நம: என்று சொன்னாலே போதும் என்று சொல்லி விட்டது வேதம்.

நம: என்று சொல்வதே பகவானுக்கு அதிக மாகப் போய்விடுமாம். 'நம:' என்று சொல்லி விட்டானே! அவனுக்கு நான் என்ன பண்ணு வது?' என்று தவித்துப் போய் விடுவானாம். விழுந்து சேவிப்பதையெல்லாம் பண்ணி னால் அவன் இன்னும் என்னதான் பண்ணு வான்!

நம்மிடம் மிக சொற்பமானதையே எதிர் பார்க்கிறான் பரமாத்மா. ஆனால் மிகப் பெரிய பலனைக் கொடுக்கிறான்.

## அருள்வாக்கு

நம்முடைய லோக ஸேவையால்தான் லோகம் நடக்கிறது என்ற பிரமை ஒருக்காலும் இருக்கக்கூடாது. மரம் வைத்தவன் தண்ணீர் விடுகிறான். லோகத்தைப் பண்ணின ஒருத்தன் இருக் கிறானே அவனே அதை ரக்ஷித்து விட்டுப் போவான். அதற்கு நாம் ஒரு கருவிதான். நம் முடைய பாபகர்மா கழி யவே பரோபகாரமே தவிர, நாமில்லாவிட்டால் அந்த உபகாரம் லோகத்துக்குக் கிடைக்காமல் போய் விடாது என்ற ஞானம் இருந்தால் அளவோடு நிற் போம். ஜீவனத்துக்கு அவசியமான சொந்தக்



காரியங்கள், குடும்பக் கடமைகள் இவற்றைப் பண்ணிக் கொள்வதிலும் கர்ம நாசம், சித்த சுத்தி ஏற்படத்தான் செய்யும். ஈச்வராநுக்ரஹத்தில் இப்படிப்பட்ட பொறுப்புக்கள் அதிகமில்லாதவர்கள் நிரம்பப் பரோபகாரப் பணிகளில் ஈடுபட்டே ஆத்மாவைப் பரிசுத்தி பண்ணிக் கொள்ள வேண்டும்; அப்படிப்பட்டவர்களுக்கு இதுவே ட்யூட்டி ஆகிறது. டொமெஸ்டிக் ட்யூட்டிபோல ஸோஷல் ட்யூட்டியும் உண்டுதான். எத்தனை டொமெஸ்டிக் ட்யூட்டி இருந்தாலும், **அதைப் பண்ணிவிட்டு, அதைப் பண்ணின அப்புறந் தான்** ஸோஷல் ட்யூட்டியும் செய்ய வேண்டும். ரொம்ப அதிகம் குடும்பப் பொறுப்பு இருக்கிற ஒரு சிலரைத் தவிர, மற்ற எல்லோருக்குமே நியாயமான சொந்தக் கடமைகளைப் பண்ணின பிறகும், ஸமூஹக் கடமை பண்ண அவகாசம் இருக்கவே செய்யும். எப்படியானாலும் தன் காரியத்தைப் பிறர் கையில் விட்டு விட்டும், அகத்து வேலையைக் கவனிக்காமலும் ஊர்க்காரியம் என்று போவதில் பிரயோஜனமில்லை. ''இப்படிப் போனதில் என் பையன், வீடு என்றாலே எரிச்சல் படுகிறான் என்பர் சிலர்.'' இப்படிக் கோபமும் தாபமும்தான் பரோபகாரம் பண்ணினதில் ஒருத்தனுக்கு மிஞ்சினது என்று ஏற்பட்டால் அது சித்த சுத்திக்குப் பதில் சித்த அசுத்திக்குத் தான் வழி பண்ணியிருக்கிறது என்றே ஆகிறது. அதாவது, பரோபகாரம் நல்ல பலன் தராதது மட்டுமில்லாமல், விபரீத பலனே உண்டாக்கியிருக்கிறது! சாஸ்த்ர ரீதியான கடமையை விட்டதற்காக இப்படி நல்லதே தண்டனையாக ஆகிறது!

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

ஆகையினாலே, 'ஓம் விஷ்ணுவே நம:' என்று சொல்லி ஒரு புஷ்பத்தைப் போட்டோமானால் சர்வ வேதார்த்தங்களும் அதற்குள்ளே வந்து விடுகிறதா இல்லையா...?

ஒரு திருநாமத்தைச் சொல்லி நாம் பகவானுடைய திருவடியிலே அர்ச்சனை பண்ணினோமானால், அந்த விஷ்ணுவினுடைய பெருமைகள் எல்லாவற்றையும் மனத்தில் நினைத்துக் கொள்ள வேண்டும் நாம்.

நினைத்துக்கொண்டே அர்ச்சனை பண்ணினோமானால், பூரண பலன் கிடைக்கும். மனஸ் ஓர் இடம், வாக்கு ஓர் இடம் என்று இருந்தால் பலனை அடைய முடியாது.

"நித்யம் விஷ்ணவே நம: என்று அர்ச்சனை பண்ணுகிறேன்; பலனே இல்லையே..." என்றார் ஒருத்தர்.

''அர்ச்சனை பண்ணும்போது மனசு எங்கே இருந்தது...?''

''மனசு லோகமெல்லாம் சுற்றிக் கொண்டேயிருந்தது!''

வாக்கு மட்டும் அர்ச்சனை பண்ணுகிறது. என்ன பிரயோஜனம்? என்ன லாபம்?

ஆகையினால் மனசு சேர வேண்டும். வாக்குக்கும் மனத்துக்கும் சேர்தல் என்பது ரொம்ப கஷ்டம்.

அதனால்தான் 'கரணத்ரய சாரூப்யம் – இதி ஸௌக்ய ரஸாயனம்' என்றார் சுவாமி தேசிகன். ஸௌக்யத்துக்கு எத்தனையோ ரஸாயனம் இருக்கிறது. ரஸாயனம் என்றால் மருந்து. எத்தனையோ மருந்துகள் பார்க்கிறோம் உலகத்தில். ஒவ்வொன்றுக்கும் ஒரு மருந்து சாப்பிடுகிறோம். அதெல்லாம் சௌக்யமில்லை. அதெல்லாம் மருந்தில்லை என்று சொல்லி விட்டார்.

எது சௌக்யம் என்று கேட்டால் கரண த்ரிய ஸாரூப்யம் – த்ரிகரண ஸாரூப்யம். ஸாரூப்யம் என்றால் ஒரே மாதிரி இருத்தல். கரணத்ரயம் எது...? வாக்கு, மனம், செயல். – இது மூன்றும் ஒரே மாதிரி இருக்க வேண்டும். வேதமே இதை நமக்கு விளக்கிச் சொல்கிறது.

எதை நீ மனத்தால் நினைக்கிறாயோ, அதையே வாக்கினால் சொல்ல வேண்டும். அதேமாதிரி செயலினால் அதைக் காட்ட வேண்டும். மனத்தால் நினைத்தால் போதாது; வாயால் சொன்னால் போதாது; செயலினால் அது பரிபூரணமாய் விளங்க வேண்டும்.

இன்னொரு இடத்தில் சாஸ்திரம் சொல்கிறபோது, மகான்களுடைய நிலை எப்படி...? துராத்மாக்களுடைய நிலை எப்படி...? என்று பேசுகிறது.

துராத்மாக்கள் துஷ்ட புத்தி உடையவர்கள். மனத்தால் ஒன்று நினைப்பார்கள், வாக்கால் வேறு சொல்லுவார்கள், செயலிலோ வேறு ஒன்றைச் செய்து கொண்டிருப்பார்கள். – மூன்றும் மாறுபட்டதாக இருக்கும்.

மகான்களுக்கோ – கர்மன் ஏகம், மனஸ் ஏகம், வசஸ் ஏகம் – மூன்றும் ஒரே மாதிரி இருக்கும்.

இப்படிப்பட்ட ஒரு மகானை உதாரணம் சொல்லணும் என்றால் சொல்லலாம்... அடுத்த வாரம் சொல்கிறேன்.

(தொடரும்)

# வீக்கம் Vs

"தொ பாரு கண்ணு, நீ இன்னாவேணா சொல்லு. படிக்காதவன்னு மட்டும் சொல்லாத. தலைஎய்த்து வூட்டு வேல செய்றேன்."

"அப்படி என்ன படிச்சிருக்கே?"

"ஓங்கப்பா காலத்து மூணாங்கிளாசு. நீ இந்தக் காலத்து பி.ஏ.வா...."

"கன்னிம்மா! நான் பி.ஏ. இல்ல சி.ஏ.!"

"சரி... அடுத்த எய்த்து; போயேன்."

"தலையெழுத்து!"

"அத்த வுடு! வர்ற மொத தேதிலேர்ந்து என் சம்பளத்த அம்பது ரூவா கூட்டிக் குடு."

"ஏன்?"

"நீ புட்டிப்பால் குடிச்சப்பலிருந்து இங்க வேல செய்றேன்."

"சரி."

"நீதான் புட்டிலேர்ந்து பாக்கட்டுக்கு பூட்டே!"

"அதுக்கா இந்தச் சம்பள உயர்வு கோரிக்கை?"

"ஆங்... தமாசு? எல்லா வெலவாசியும் எகிறிடுச்சில்ல?"

"அப்படியா?"

"ஏன் ஒனக்கு ஏறலியா?"

"இதென்ன கிக்கா ஏற? எனக்குத் தெரிஞ்சு எல்லாம் இறங்குது!"

"கொறயுதா?"

"பின்ன? ரெண்டு ஃப்ளாட் வாங்கினா ஒரு ப்ளாட் இனாம். மாருதி கார் முப்பதாயிரம் கம்மியாயிடுத்து."

"அத்த வுடு. சோத்து அயிட்டம் சொல்லு!"

"டீசல் லிட்டருக்கு ஒரு ரூபா குறைச்சிட்டாங்க."

"சரி, டீசல துன்ன முடியுமா?"

"கன்னிம்மா நான் சும்மா சொல்லல. பணவீக்கம் 14%லேயிருந்து எட்டு மாசத்தில 5.1%க்கு விழுந்திடுச்சு."

"தொபாரு வீக்கங்கீக்கன்னு சொன்னே கொதிப்பு வர்து."

"கொதிப்பா?"

"ரத்தக் கொதிப்புதான்! அரிசி வெல ரெண்டு ரூவா ஏறிடுச்சி, பருப்பு வெல பறக்குது, கறி விக்கிற வெலல கண்ணாலதான் துன்னனும். நீ இங்க கத வுட்ற!"

"சொல்விட்டியா? கேளு. சராசரி மனுஷன் உபயோகிக்கற எல்லா பொருள்களோட விலை நிலைய வைச்சு பணவீக்கம்... சாரி... பணக் கொதிப்பு நிர்ணயம் செய்யறாங்க. அதனால அது குறைஞ்சா விலைவாசி குறைஞ்சதாத்தான் அர்த்தம்."

"சொல்விட்டா பூட்ச்சா? கடைங்கள்ல வெல ஏறிக்கிட்டேயில்ல போவுது?"

"ஒரு லட்ச ரூபா வித்துக்கிட்டிருந்த கம்ப்யூட்டர் இப்ப இருபதாயிரம்!"

"பூதம்! நீ ரொம்ப கொளப்பற! வெரல் சூப்பற கொயந்தக்குக் கூட தெரியும் வெலவாசி கூடிப் போச்சினு. நீயும் வேணா வெரல் சூப்பிப் பாரு!"

"கன்னிம்மா!"

"கம்னு அம்பது ரூவா குடு."

"உன் வயசுக்கும், சர்வீஸுக்கும் மரியாதை கொடுத்து நிதானமா பேசறேன்."

"பேசு!"

"வயசுக்கு மட்டும் மரியாதை கொடுத்தா, கன்னிம்

மாதுரி

மானில்ல 'கிழம்மா'னு உன்னைக் கூப்பிடணும்."

"அய்ய்ய... இத்தப் பாரேன்!"

"நான் செய்யறேனா? இல்ல. அதனால நீயும் என்ன பூதம்னு கூப்பிடாதே. நான் மாத்ருபூதம், மாத்ரு இல்ல மாத்னு கூப்பிடு. அடுத்தது விலைங்க இறங்கிடுச்சுனு சொன்னா இறங்கிடுச்சுதான். ஏன்னா நாட்டில இருக்கிற அதிபுத்திசாலி அதிகாரிகள் கணக்குப் போட்டு சொல்றது இந்த பணவீக்க விகிதம். நீயே பாரேன் இன்டர்நெட்ல போக மணிக்கு நூறு ரூபா வாங்கிட்டிருந்தவங்க இப்ப, இருபது வாங்கறாங்க. கம்மியாயிடுச்சா இல்லையா?"

"பூதம் இன்டர வுடு. இட்லி வெல பேசு. ரூவாக்கி ரெண்டு போயி ரெண்டு ரூவாக்கு ஒன்னாயிடுச் சில்ல. அதுவும் ரூவா சைஸ், கேட்டா 'மினி'ங்கறான் பாவி."

"நாடு அடுத்த நூற்றாண்டை நோக்கி ஓடுது. உனக்கு இட்லி முக்கியமா போச்சு!"

"துன்ன வேணா?"

"நாடு இருக்கிற நிலமைல இப் பெல்லாம் பிரதமரே துன்றதில்ல!"

"ஆமா!"

"நாட்டில தொழில் வளர்ச்சி எவ்வளவு தெரியுமா? 3% கூட இல்ல. பாதி கம்பெனிங்கள்ல தொழிலாளிகள் காலி. மீதில சம்பளம் பாதி!"

"ஆங்..."

அரசாங்கம் பென்ஷனெல்லாம் டபுளாக்கிட்டானாம். நாளைக்கு



# கொதிப்பு

"எனக்கே பாரு, பத்தாயிரம் ஃபீஸ் கொடுத்தவங்க நாலாயிரம் கூட தர்றதில்ல. அத வசூல் பண்ண போன், ஆட்டோன்னு ரெண்டாயிரம் ரூபா போயிடும். அப்படியிருக்கு காலம். சோ, விலைவாசி குறையுது. குறைஞ்சுதான் தீரணும்."

"அய்யோ கொடயாத கண்ணு. அம்பது ரூவாக்கு இன்ன தான் சொல்ற?"

"ஏன்டா மாத்ரு? அவ்வளவு நேரமா கன்னிம்மாவோட என்ன பேச்சு?" என்றபடி அவன் பாட்டி உள்ளிருந்து வந்தாள். "தொழில் மந்தமானாலும் உன் நிலமை இத்தனை கேவலமா போக வேண்டாம்!"

"பின்ன என்ன பாட்டி? நாட்டில பயங்கர பணப் பற்றாக் குறை. அண்டை நாடு, சண்டை நாடு யார்கிட்டேயும் பணமில்ல. நிதி மந்திரிக்குத் தலை சுத்தல்!"

"அவருக்கு மட்டுமா?" இடித்தாள் பாட்டி.

"அதானே? எனக்கு ஏகப்பட்ட தலை சுத்தல். இப்ப போயி கன்னிம்மா அம்பது ரூபா சம்பளம் ஜாஸ்தி கேக்கறா. நாட்டு நிலமையை விவரமா எடுத்து சொல்லிண்டிருந்தேன்."

"மாரடிச்சது போதும்! ருக்கு இப்ப ஃபோன் பண்ணினா. பேப்பர்ல நியூஸ் வருமாம். இனிமே தாத்தாக்கு...."

"ஏ...! வாழ்க தாத்தா!" என்று துள்ளிக் குதித்து பாட்டியை பிடிக்குள் நசுக்கினான். "தாத்தா இருந்தாலும் ஆயிரம் பொன்; இறந்தாலும் ஆயிரம் பொன்!"

"பூதம், என் அம்பது ரூவா?"

"பார்த்தேயில்ல கன்னிம்மா? முற்பகல் செயின் பிற்பகல் விளையும். இப்ப நீ நல்லா வேலை செய். உன் பேரனுக்குக் கிடைக்கும் அம்பது ரூபா!" ●

● ஆர். சாலமன், ஆலங்குளம்.

*? இந்த வருடத்துக்குள் பாராளுமன்ற இடைத் தேர்தல் வரும் என்கிறாரே கலைஞர்?*

! வழக்குகள் பணாலாகும் வரை இடைத் தேர்தல் வருவதை 'ஜெ' விரும்ப மாட்டார். எனவே ஒரு பக்கம் மிரட்டிக் கொண்டே மறுபக்கம் ஆதரவும் தந்து தமது லட்சியத்தை அடையவே முயற்சி செய்வார். மற்ற கட்சியினர் காலை வாரி விட்டால்தான் உண்டு.

● பி. எம். வள்ளி, அரசரடி.

*? கல்கத்தா டெஸ்டில் டெண்டுல்கர் ரன்-அவுட் ஆன பிறகு ரசிகர்கள் நடந்து கொண்ட விதம் பற்றி...?*

! நாட்டுக்குத் தலைகுனிவையும் தமிழ்நாட்டு கிரிக்கெட் ரசிகர்களுக்குக் கூடுதல் நற்பெயரையும் பெற்றுத் தந்து விட்ட சம்பவம். டெண்டுல்கர் அவுட் ஆனதற்குக் காரணம் சச்சினே என்பது என் கருத்து. ரன் எடுக்க ஆரம்பிப்பதற்கு முன் பந்து செல்கிற திசையையும் அதன் நிலையையும் பார்க்க வேண்டும்; முடிவெடுத்து ஓட ஆரம்பித்த பிறகு எங்கே போகிறோம் என்று பார்க்க வேண்டும்; பந்தைப் பார்த்துக் கொண்டே கண்மூடித்தனமாக ஓடுவது விபரீதத்தை எதிர்கொள்கிற காரியமே!

● ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

*? 'கன்னடர்களிடம் உள்ள மொழி வெறி தமிழர்களிடம் இல்லாமல் போய்விட்டதே' என்று டாக்டர் ராமதாஸ் மனம் வருந்துகிறாரே?*

! மொழிப்பற்று இருந்தால் போதும். வெறி? அது மனிதனுக்கு வருவதல்ல.

● ஜெ. ரஜினி ராம்கி, பூனே.

*? தமிழகத்தில் சட்டம் ஒழுங்கு சரியில்லை என்ற மம்தாவின் கருத்து தவறா? தந்திரமா?*

! இரண்டுமில்லை; போயஸ் தோட்டத்துக்குள் சென்று வந்தபோது கண்டதை – உணர்ந்ததை தமிழகத்தின் மீது ஏற்றிச் செல்கிறார், அவ்வளவே!

● கே. வி. ராமன், சென்னை – 73.

*? மக்கள் தொலைபேசிக் கட்டணம் செலுத்தா*

# மம்தாவின் கருத்து தவறா? தந்திரமா?

*விட்டால் தொலைபேசி தொடர்பு துண்டிப்பு. ஆனால், முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர்களிடமிருந்து அரசுக்கு வரவேண்டிய தொலைபேசிக் கட்டணம் சுமார் நாலு கோடி ரூபாய் பாக்கியுள்ளது. அவர்களுக்கு மட்டும் தொடர்பு துண்டிக்கப்படவில்லையே...*

! இதுபோன்று ஆயிரம் அக்கிரமங்கள் நடக்கின்றன. பொதுப் பணம் வீணாவது பற்றிக் கவலைப்பட யார் இருக்கிறார்கள்!

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

*? தமிழர்களை நியமித்த மத்திய அதிகாரிகளுக்குக் கன்னட அமைப்பினர் கொலை மிரட்டல் விடுத்துள்ளனராமே...?*

! எப்போது மொழிவாரி மாநிலங்களுக்கு அனுமதி அளித்தார்களோ, அப்போதே பிரதேசப் பித்துக்கும் மொழி வெறிக்கும் வித்திட்டு விட்டார்கள். நம்மை முன்பு ஆண்ட பிரிட்டிஷார் நமக்குச் சில நன்மைகளும் செய்திருக்க முடியும் என்பதை நம்ப மறுத்ததன் விபரீத விளைவுகளுள் ஒன்று இது.

● எம். இராஜேந்திரன், லால்குடி.

*? ஒரிஸ்ஸாவின் புதிய முதல்வர் பற்றி...?*

! கிரிதர் கோமங் ஓர் இசைக் கலைஞர். டாம்ப் (Damph) என்கிற பழங்குடியினரின் தாள வாத்தியத்தை நன்றாக வாசிக்கக்கூடியவர். முன்பு மத்திய அமைச்சரவையில் சுரங்கத்துறை அமைச்சராக இருந்தபோது, சென்னைக்கு வந்திருந்த அவர், சுதா ரகுநாதனுக்குப் பக்கவாத்தியம் வாசித்திருக்கிறார். தனி ஆவர்த்



• வீண் வருத்தம்



• ஒட்டவைப்பு!



• 'பக்கா'வாத்தியம்

தனத்தின்போது சக்கை போடு போட்டதை 'ஹம்சத்வனி' சபா செயலர் ராமச்சந்திரன் சொல்லிச் சொல்லி மாய்ந்து போகிறார். இப்போது சோனியாவுக்குப் பக்கவாத்தியம் வாசிக்க வேண்டியிருந்தாலும் சரி, முதல்வர் என்கிற தனியாவர்த்தனத்திலும் சரி... வெளுத்துக் கட்டுவாரா...? - பார்ப்போம்!

● **ஒன்லி, கோழிக்கோடு.**

? ***நீங்கள் வாழ்க்கை பற்றி என்ன நினைக்கிறீர்கள்?***

! வாழ்வதற்கே என்று நினைக்கிறேன். எப்படி வாழ்வது என்பதுதான் சவால். சவாலை ஏற்று சிறிய - பெரிய சாதனைகளும் புரியலாம், வேதனைகளும் அடையலாம். அவரவர் சாமர்த்தியம் அது!

● **ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.**

? ***தற்போது சின்னாபின்னமான நிலையில் இருக்கிறேன் என லல்லு பிரசாத் யாதவ் தெரிவித்துள்ளது குறித்து...?***

! பின்னங்களை மறுபடியும் சேர்த்து ஒட்ட வைத்து உருக் கொடுக்க சோனியா செய்து வரும் முயற்சி சின்னாபின்னமடைய வேண்டும் என்பதுதான் இப்போதைய கவலை!

● **கலை அரசு, கோவை - 42.**

? ***ஜெயலலிதாவும் அவரது அமைச்சர்களும் லஞ்சம் வாங்கினார்களா இல்லையா என்பது எப்போது தெரியும்?***

! இப்போதே தெரியும்!

● **பி. பிரகாஷ், மதுரை - 16.** ❑

? ***தி.மு.க. அரசைக் கலைக்க வேண்டும் என்ற ஜெயலலிதாவின் கோரிக்கை நியாயமானதே என்கிற மம்தா பானர்ஜியின் கூற்று நியாயமா...?***

! முகத்திலடித்தாற்போல் அதைத் திருப்பி விட்டாரே வாஜ்பாய் - கோரிக்கையைப் பரிசீலிக்கக் கூட முடியாது என்று. இடமும் வலமுமாக நின்று மிரட்டியவர்கள் இப்போது சேர்ந்து எதிரே நின்று மிரட்டுகிறார்கள் என்பதால் அது நியாயமாகி விடுமா என்ன!

● **டி.ஏ.சி. பிரகாஷ், நாமக்கல்.**

? ***சமீபத்திய செய்திகளில் நீங்கள் மிகவும் துயரப்பட்டது எதைக் குறித்து?***

! தேசிய விளையாட்டுப் போட்டிகள் குறித்துச் சில அவலச் செய்திகள் கேட்டு... துவக்க விழாவன்று போட்டோவுக்குப் போஸ் கொடுக்க முட்டி மோதிய விளையாட்டு வீரர்கள் அலங்கார ஊர்வலத்துக்கே இடையூறு செய்திருக்கிறார்கள்; அதன் பின்னர் ஒரு பாக்ஸிங் வீரர் மாரடைப்பால் திடீர் மரணம். குடிபோதையில் ஒரு தடகள வீரர் தறிகெட்டு ஒரு வீராங்கனையை பலாத்காரம் செய்ய முயற்சி...

● **எஸ். பிரசன்னகுமார், காட்பாடி.**

? ***வங்கி ஊழியர்களுக்குப் பத்து சதவிகிதம் சம்பளம் உயர்த்தினால், பத்தாயிரம் கோடி ரூபாய் செலவு ஏற்படுமாமே?***

! கூடுதல் செலவைச் சமாளிக்க வாடிக்கையாளர் பாக்கெட்டில்தான் கையை நுழைப்பார்கள். ஏற்கெனவே வங்கி சர்வீஸ் கட்டணங்கள் மூச்சுத் திணறச் செய்கின்றன. தாங்காதடா சாமி! ○



• இரட்டை...



• மிரட்டல்



• சச்சினால் அவுட்!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
பி. பிரகாஷ்,
28ஏ, மேற்கு பொன்னகரம்
ஏழாவது தெரு, மதுரை - 16.

## 2

தனபாக்கியம் வாயிலும் வயிற்றிலும் அடித்தபடி, 'செந்திலு, என் ராசா' என்று அவலமாகக் கதறிக்கொண்டே ஓடி வந்தாள்.

ஈர உடம்புடன் இருந்த முத்துக்குமார் அவளைப் பார்த்தான். தாய்மையின் தவிப்பு தெரிந்தது.

"பயப்படாதம்மா. கொழந்தைக்கு ஒண்ணும் ஆவலை. மயக்கமா இருக்கான். அவ்வளவுதான்" என்று சொல்லிக் கொண்டே தோளில் ஏந்தியிருந்த செந்திலைக் கீழே இறக்கினான்.

"செந்திலு... ராஜா செந்திலு" என்று தனபாக்கியம் அவனை மடியில் தூக்கிப் போட்டுக் கொண்டு அரற்றினாள். "ஒனக்கு என்ன வேணும்டா கண்ணு? டீ வேணுமா? சமூசா வேணுமா? நீ ஏன் கண்ணு தண்ணியில போனே? உங்கப்பா என்னை மோசம் பண்ணது பத்தாதுன்னு நீ வேற அம்மாவை மோசம் பண்ணிட்டுப் போறதுக்கு இருந்தியேடா."

தனபாக்கியத்தின் அழுகையும், பதைப்பும் அவளுடைய மடியின் ஊசலும் சேர்ந்து செந்திலின் கண்களை மெல்லத் திறக்கச் செய்தன.

"அம்மா"

"அம்மா இதோ இருக்கேம்பா. என்ன வேணும் நைனா?"

"அப்பா வேணும்."

"ஐயோ, ஐயோ. நான் என்ன பண்ணுவேன்? கொழந்தைக்கு நான் என்ன சொல்லுவேன்?" என்று துக்கம் தாங்காமல் மார்பில் அறைந்து கொண்டு அழுதாள் தனபாக்கியம்.

"நான் அப்பாவைத் தேடி இட்டாரத்துக்குத்தாம்மா கடலுக்குள்ள போனேன். ஒரு பெரிய அலை வந்து என்னைக் கவுத்து இழுத்துக்கினு போவப் பாத்துதா... அப்பாதாம்மா என்னை வந்து தூக்குனாரு. கடல்ல ஒளிஞ்சிக்கிட்டிருந்த அப்பாவை நான் கண்டுபுடிச்சிட்டேன். எங்கேம்மா அந்த அப்பா?"



தனபாக்கியத்தின் தலை சுழன்றது. பயமாக இருந்தது. செந்திலின் தலையில் எங்கேயாவது அடிபட்டு விட்டதா? புத்தி பிசகி விட்டதா? என்னென்னவோ பேசுகிறானே.

"செந்தில்" என்று அழைத்தான் முத்துக்குமார். குரல் கேட்டு செந்தில் சட்டென்று திரும்பிப் பார்த்தான். அவன் கண்களில் ஓர் உற்சாகப் பொறி.

"நீதான என்னைத் தண்ணிலேர்ந்து தூக்குனே?"

"ஆமா. இனிமே நீ தண்ணிப் பக்கமெல்லாம் போகக் கூடாது. புரிஞ்சுதா?"

"எனக்கு பால் ஐஸ் வாங்கித் தருவியா?"

"தரேன்."

"ரஜினி சினிமாவுக்குக் கூட்டிகினு போவியா?"

"ஆவட்டும்."

"ராத்திரி வர சொல்லொ கதை சொல்லியா?"

"கதைதானே? சொன்னாப் போச்சி."

"அப்படின்னா நீதான் என் அப்பா."

"டேய் செந்தில்" - தனபாக்கியம் பதறினாள்.

"நீ மீனு விக்கப் போ. ஆப்ப ஆயா வூட்டுக்கு கருவாடு காயப் போடப் போ. எங்க வேணாப் போ. எனக்குத்தான் அப்பா ஆம்பட்டுக்கினாரே."

"செந்திலு. இங்க வா" என்று தனபாக்கி

சுபா

# படகில் ஒரு பெண்



யம் திகில் பரவிய முகத்துடன் மகனைப் பக்கத்தில் அழைத்தாள்.

"வரமாட்டேன். நான் எங்கப்பாவைவுட்டு எங்கயும் வரமாட்டேன்" என்றான் செந்தில். முத்துக்குமாரை இறுக்கமாகப் பற்றிக்கொண்டான்.

முத்துக்குமாருக்கு தனபாக்கியத்தைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

"கவலைப்படாதேம்மா. சின்னக் கொழந்தைதானே? அதுக்கு என்ன தெரியும்? எல்லாம் ரெண்டொரு நாளுல சரியாய்டும்" என்றான் ஆறுதலாய்.

அந்த விவகாரம் முத்துக்குமார் சொன்னது போல் இரண்டொரு நாட்களில் சரியாகவில்லை. செந்திலுக்கு, முத்துக்குமாரை விட்டு ஒரு நிமிடம் கூடப் பிரிந்திருக்க மனம் வரவில்லை. கல்யாணமான புது மாப்பிள்ளை எந்நேரமும் மனைவியையே சுற்றிச் சுற்றி வருவது போல அவன் முத்துக்குமாருடனேயே திரிந்தான். டீக்கடை, சினிமா தியேட்டர் என்று அவனோடு சுற்றாத இடம் இல்லை. முத்துக்குமார் பிழைப்பைக் கவனிக்கப் போகும்போது கூடவே அவனையும் கூட்டிக் கொண்டு போய் விடுவான். மாலையில் திரும்பி வந்து செந்தில் தூங்கும் வரை உடன் இருந்து அவன் கேட்கும் கதையெல்லாம் சொல்லிவிட்டு, அவன் தூங்கியபின், 'வெள்ளை' சொக்கலிங்கத்தின் சிற்பக கூடத்திற்குப் புறப்பட்டுப் போவான்.

ஒரு விடியற்காலையில் தனபாக்கியம் செந்திலை இழுத்துக் கொண்டு சிற்பக் கூடத்திற்கே அவனைத் தேடி வரும்படி ஆனது.

"அப்பா வேணும், அவரைத் தேடிக் கிட்டுப் போறேன்னு கடலுக்குள்ள உன்னைத் தேடிக்கிட்டு ஓடறான்பா. என்னால சமாளிக்க முடியலை."

முத்துக்குமாரின் இதயத்தில் சாரல் அடித்தது போல் ஓர் உணர்வு தோன்றியது.

எப்போது மலர்கிறது என்னும் தேவ ரகசியத்தை வெளிப்படுத்தாமலேயே மலரும் பூவைப் பார்க்கும்போது ஏற்படும் மகிழ்ச்சி, செந்தில் அவன் மேல் வைத்திருக்கும் பாசத்தை அறிந்து அனுபவித்த போதும் உண்டாயிற்று.

கூடவே ஆச்சரியமாகவும் இருந்தது. இப்படியா யாரோ ஒருவனை தகப்பன், தகப்பன் என்று ஒரு குழந்தை ஏற்றுக் கொள்ளும்?

முத்துக்குமாரை நோக்கிக் கைகூப்பி, "செந்திலுக்காவது நீ வீட்டோட இருந்துடு சாமி" என்று வேண்டிக் கொண்டாள், தனபாக்கியம்.

வேறு வழியின்றி முத்துக்குமார் அவன் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டான்.

தனபாக்கியத்தின் பாடுதான் தர்மசங்கடமாகி விட்டது. தண்ணீர் பிடிக்க டேங்

குக்குப் போனால் முன்பெல்லாம் பரிதாபத்தோடு அவளைப் பார்த்த குப்பத்துப் பெண்கள் இப்போது இகழ்ச்சியுடன் பார்க்கிறார்கள்.

தண்ணீர்க் குடத்தை எடுத்து அகன்றவுடன் கசமுசவென்று பேச்சுக் குரல் எழுவதை அவளால் கேட்க முடிந்தது.

நான்காவது குடிசையில் இருக்கும் மரகதத்தின் பொண்ணுக்கு பதிமூன்று வயது கூட ஆகவில்லை. சினிமா நடிகை மேலுள்ள மோகத்தால், அவளுக்கு மரகதம் 'ஸ்ரீதேவி' என்று பெயர் இட்டிருந்தாள். அந்த ஸ்ரீதேவி தனபாக்கியத்துடன் ஞாயிறுக்கு ஞாயிறு தானும் ஒரு மீன் கூடையை எடுத்துக் கொண்டு விற்க வருவது வழக்கம்.

''அக்காவ், நீ அந்த முத்துக்குமாரை வச்சினு இருக்கியாமே'' என்று ஒருநாள் எந்தப் பீடிகையும், நாசூக்கும் இன்றி பட்டென்று கேட்டாள் அவள்.

''ஒன்கைவில யாருடி சொன்னது?'' என்று பதைத்துப் போய்க் கேட்டாள் தனபாக்கியம்.

''அஞ்சலை ஆயா சொல்லிச்சின்னு அம்மா எங்கைல சொல்லிச்சி. வச்சிக்கிறதுன்னா என்னாயக்கா?''

''ஒன் தலை. மீனை வித்தமா, துட்டை எண்ணோமான்னு பாத்துகினு போய்னே இரு.''

குப்பம் திருவிழாக் கோலம் பூண்டிருந்தது. அலங்கார விளக்குகள் சரம் சரமாகத் தொங்கின. ஒலிபெருக்கிகளில் இருந்து 'மாரியாத்தா...' பாடல் பிரதேசத்தை நிறைத்துக் கொண்டிருந்தது.

பெண்கள் அனைவரும் பக்திப் பரவசத்துடன் பொங்கல் இடுவதும், கூழ் ஊற்றுவதுமாக இருந்தார்கள்.

ஆண்கள் எல்லாம் வசூல் பண்ணி வந்த பணத்தில் மெல்லிசைக் கச்சேரி, கோயிலின் சிமெண்ட் கோபுரத்திற்கு பெயிண்ட், கோயிலுக்குப் பந்தல் என்று பட்டை கிளப்பிக் கொண்டிருந்தார்கள். திருவிழா என்றால் ஆண்களைப் பொறுத்தவரை சாராயம் குடிக்காமல் அது நிறைவு பெறாது.

முத்துக்குமார் செந்திலுடன் திருவிழாவிற்கு வந்திருந்தான். செந்திலுக்கு ரங்கராட்டினம் சுற்ற வேண்டும். மிட்டாய் வாட்ச் கட்டிக் கொள்ள வேண்டும். ஆரஞ்சு ஐஸ் சாப்பிட வேண்டும்.

செந்தில் ரங்கராட்டினத்தில் சுற்றிக் கொண்டிருந்தபோது முத்துக்குமார் கடற்கரையில் இன்னொரு காட்சியைக் காண நேரிட்டது.

கன்னியப்பன், சேகர், கபாலி, மாணிக்கம் நான்கு பேரும் கடற்கரை மணலில் உட்கார்ந்து குடித்துக் கொண்டிருந்தார்கள்.

பத்தடி தள்ளி, ஒரு பெரும் வலைக்குவியலுக்குப் பின்னால் நான்கு சிறுவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். ஒவ்வொருவர் கையிலும் ஒரு காலி தம்ளர். கபாலியின் மகன் சுந்தரமூர்த்தி ஓர் உறையைப் பல்லால் கடித்துக் கிழித்து அதில் இருந்த சாராயத்தை நான்கு தம்ளர்களிலும் கொஞ்சம் கொஞ்சமாய் ஊற்றினான். அவர்கள் எதிரே விரிந்திருந்த பேப்பரில் கொறிப்பதற்கான தின்பண்டங்கள். கண்ணாடி தம்ளர்களை மெல்ல இடித்துக் கொண்டார்கள். 'சியர்ஸ்' என்று சொல்லிச் சிரித்தார்கள். உதடுகளில் தம்ளர்களைப் பொருத்தப் போன தருணத்தில் முத்துக்குமார் அவர்கள் எதிரில் போய் நின்றான்.

செய்தி அறிந்து கபாலியின் போதை சட்டென்று தெளிந்தது. உடன் தனது குடிசைக்குள் ஓடினான். திரிகைவால் மீன் சாட்டை ஒன்றை எடுத்துக் கொண்டு சுந்தரமூர்த்தியை நோக்கி ஓடி வந்தான். முத்துக்குமார் கபாலியைத் தடுத்து நிறுத்தினான்.




''அவன் மேல தப்பு இல்ல. ஒன் மேலத்தான் தப்பு கபாலி. நாலு கெழமை அன்னிக்கு குடிச்சா சந்தோஷமா இருக்குதுன்னு நீ குடிக்கிறே. நீ மட்டுந்தான் குஷியா இருக்கணுமான்னு நெனைச்சி அவனும் குடிக்க ஆரம்பிச்சிருக்கிறான். ஒங்கப்பன் குடிச்சதைப் பாத்து நீ இப்படி ஆயிட்டே. இப்ப உன் பையன். உங்க பசங்களை எல்லாம் கொஞ்சமாவது படிக்க வைங்க. அப்புறம் பாரு. எது நல்லது, எது கெட்டதுன்னு தீர்மானிக்கிற பக்குவம் வந்திருக்கும். அவனே ஒனக்குப் படற மாதிரி புத்தி சொல்ல ஆரம்பிச்சிடுவான்.''

கபாலி சாட்டையைக் கீழே போட்டான். அன்று இரவு தனபாக்கியத்தின் குடிசை அருகே இருந்த தெரு விளக்கின் கீழ் முத்துக்குமார் குப்பத்துக் குழந்தைகளுக்குப் படிப்பு சொல்லித்தரத் தொடங்கினான்.

தனபாக்கியம் முழங்கால் மேல் மோவாயை ஊன்றிக் கொண்டு எதிரே எரிந்த

விறகடுப்பில் பார்வையைப் பதித்திருந்தாள். அடுப்புப் பானையில் பால் போன்ற நுரையுடன் சோறு கொதித்துக் கொதித்துப் பொங்கியது. விறகுத் தழல் அவள் முகத்தில் செம்மையைப் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. மனம் போராடிக் கொண்டிருந்தது.

முத்துக்குமாரும் செந்திலும் பிரிக்க முடியாத அளவு ஒன்றாகி இருந்தனர். வேலுச்சாமி இருந்தபோது, அவன் அதிகமாகக் குடித்திருந்தால் செந்திலை முரட்டுத்தனமாகக் கையாளுவான். அதனால் செந்தில் அவனை நெருங்கக் கூடப் பயப்படுவான். முத்துக்குமாரிடம் அந்தப் பயம் இல்லை. முத்துக்குமாரின் முகத்தில் உற்சாகம், சிரிப்பைத் தவிர வேறு எதுவும் இல்லை.

செந்திலுக்கு மட்டுமில்லை. குப்பத்து ஆண்களுக்கும் அவனைப் பிடித்திருந்தது. சின்னப் பையன்களுக்கெல்லாம் படிப்பு சொல்லித் தருகிறானே. சிறுவர்களிடம் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. பெரியவர்களிடம் மரியாதை காட்டுகிறார்கள். ஆண்களும் அவ்



வப்போது முத்துக்குமாரின் இரவு நேரப் பள்ளியில் வந்து உட்காருகிறார்கள். குடிப் பழக்கம் கொஞ்சம் குறைந்திருக்கிறது. அதனால் பெண்களுக்கும் முத்துக்குமாரிடம் ஒரு பரிவு.

முத்துக்குமார், தனபாக்கியம் பொங்கிப் போடும் சாப்பாட்டைத்தான் சாப்பிடுகிறான். ஆனால் சும்மா சாப்பிடுவதில்லை. செந்தில், அவன், முத்துக்குமார் – மூன்று பேருக்கும் சேர்த்து ஒருநாளைக்கு என்ன செலவு ஆகுமோ, அதைக் கொடுத்து விட்டுத்தான் சாப்பிடுகிறான். அவளுடைய மறுப்பு அவனிடம் எடுபடுவதேயில்லை.

அவளைக் கூட ஹோட்டலுக்கு மீனெடுத்துக் கொண்டு போய்க் கொடுக்க வேண்டாம் என்றுதான் சொல்கிறான். தனபாக்கியத்திற்கு உள்ளூர அது பிடித்துத்தான் இருந்தது. ஹோட்டலில் அவளிடம் மீன் வாங்கிக் கொள்ளும் பாண்டியன் மீன்களைத் தவிர வேறு எதையோ அவளிடம் எதிர்பார்க்கிறான் என்று புரிந்தது. தெரியாதது போல் அவன் மேல் அவன் விரல் படுவதும், மீன் கூடையை இறக்கும் போது அவன் கை அவள் உடலில் படுவதும் நிச்சயம் தற்செயல் இல்லை.

இந்த சாக்கடை மனிதர்களை எல்லாம் தவிர்க்க வேண்டும் என்றால் அவள் ஹோட்டலுக்கு மீன் விற்கப் போகாமல் இருப்பது தான் சரி. ஆனால், முத்துக்குமார் கொண்டு வந்து கொடுக்கிறான் என்பதற்காக எத்தனை நாட்களுக்கு அவன் சட்டைப் பையையே சரண்டிக் கொண்டிருக்க முடியும்? இன்றோ நாளையோ அவன் விலகிப் போய்த்தானே ஆக வேண்டும்?

முத்துக்குமார் விலகிப் போய் விடுவான் என்ற எண்ணம் தோன்றியவுடன் அவள் முகம் வாட்டமுற்றது. என்ன இது? முத்துக்குமார் விலகிப் போனால் அவளுக்கு என்ன வந்தது? எதற்காக சோகப்பட வேண்டும்?

**"த**னம்... யம்மா தனபாக்கியம்" என்று அழைத்துக் கொண்டே வந்த ஆப்பக்கார ஆயாவின் குரல் கேட்டது.

"என்ன ஆயா?" என்று தனபாக்கியம் உடனே பதறிப் போய் பதில் அளித்தாள். இனிப்பைத் திருடும்போது மாட்டிக் கொண்ட குழந்தையைப் போல் விழித்தாள்.

ஆயா பொக்கை வாயைத் திறந்து சிரித்தாள்.

"என்னா? எதுனா கனா, இனா கண்டுக்கினு இருந்தியா? கூப்புடக் கூப்புட நீ பாட்டுக்குக் குந்திக்கினே இருந்தியே?"

"இல்லியே ஆயா" என்றாள் தனபாக்கியம் மென்று விழுங்கிக் கொண்டே.

"யம்மாடீ, நான் ஒன்னு சொல்லுவேன். கோச்சிக்க மாட்டியே?"

"சொல்லு ஆயா."

"ஒம்புள்ளை அந்த முத்துக்கொமாருப் பையனோட சேந்துக்கினு அங்க மணல்ல ஒரே கோஷ்டம் போட்டுக்கினு இருக்குது. எதுக்கெடுத்தாலும் அந்தக் கொமாரு பையனை உம்புள்ளை அப்பா, அப்பான்னு கூப்புடுது. கொழந்தையும் தெய்வமும் ஒண்ணுன்னு சொல்லுவாங்கடீயம்மா. நான் சொல்றேனேன்னு தொடப்பக் கட்டையைத் திருப்பிக்கப் போறே. உம்மூஞ்சி ஒரு பூவும், பொட்டும் இல்லாம பாழாக் கெடக்குது. இந்த சண்டாளச் சிறுக்கிங்க எல்லாம் நீ அவனை வெச்சினுகிறே, வெச்சினுகிறேன்னு கூவுறாளுங்களே. அவளுங்க வாயையெல்லாம் ஒரே யடியா அடைக்கறாப்போல அந்த முத்துக்கொமாரு பையனையே நீ கட்டிக்கயேன்..."

"ஆயா" என்று அதிர்ந்து போய்க் கூவினாள் தனபாக்கியம்.

(தொடரும்)



• இலக்கியச் சாரல் நடத்திய கல்கி விழா மேடையில்....




• செந்தமிழ்க் கல்லூரியில் கல்கி விழா

# தமிழ் வாழும் இடமெல்லாம் கல்கி விழா!

**க**ல்கி நூற்றாண்டு விழாவைத் தமிழ் மக்கள் தம் குடும்ப விழாவாகவே கொண்டாட ஆரம்பித்து விட்டார்கள். எங்கெல்லாம் தமிழ் வாழ்கிறதோ, அங்கெல்லாம் கல்கி விழா நடை பெற்று வருகிறது!

சமீபத்தில் புதுக்கோட்டை மாவட்டம் மேலைச் சிவபுரி 'கணேசர் செந்தமிழ்க் கல்லூரி' யும் திருச்சி 'இலக்கியச் சாரல்' அமைப்பும் கல்கி நூற்றாண்டு விழாவை ஒரு திருவிழா போலவே கொண்டாடின.

செந்தமிழ்க் கல்லூரி நடத்திய விழாவை மூன்று அமர்வுகள் கொண்ட கருத்தரங்கமாக நடத்தினார்கள்.

சிந்தனையைத் தூண்டும் நகைச்சுவையைக் கல்கி தம் எழுத்துக்களில் எவ்வாறு கையாள் கிறார் என்பதை உணர்ச்சிமயமாக எழுத்தாளர் அய்க்கண் வெளிப்படுத்த, கல்லூரியின் நூலகர் டாக்டர் முருகேச பாண்டியனோ, கல்கி வாழ்ந்த காலகட்டத்தை அடிப்படையாகக் கொண்டு அவரது நாவல்களை ஆய்வு செய்தார்.

கல்கியின் கட்டுரைகளைப் பற்றிப் பேராசிரியர் மோகன் வழங்கிய ஆய்வுரை, சிவகாமி யின் சபதத்தில் காணப்படுகிற வரலாற் றுச் சான்றுகள் பற்றிய குழிபிறை கஸ்தூரி நாதனின் பேருரை போன்றவை ஆழமான சிந்தனைக் கருவூலமாக அமைந்த தென்றால், மாணவர்கள் ராஜசிங் கம், ஜான் பீட்டர் ஆகியோர் கல்கி யின் சிறுகதைகள் பற்றிப் பேசியவிதம் மூக்கு மேல் விரல் வைக்கச் செய்து விட்டது.

நிறைவுரை வழங்கிய அய்க்கண், கல்கி யின் எழுத்துக்கள் இளையதலைமுறைக்கு வழிகாட்டியாக உள்ளன என்று முடித்ததுதான் எத்தனை பொருத்தம்!

**தி**ருச்சி தேசியக் கல்லூரி அரங்கில் இலக் கியச் சாரல் அமைப்பு கல்கி விழா கொண் டாடியதற்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. கல்கி படித்த பள்ளி அல்லவா அது?

இதனை நினைவுகூர்ந்தே தம் உரையை அமைத்திருந்தார் கவுன்சில் செயலாளர் கே. சந்தானம்.

முதுபெரும் எழுத்தாளர்கள் ஆர்.வி. மாயூரன், வழக்கறிஞர் ராஜவேலு, மைத்ரேயி வித்யாலயாவின் தாளாளர் கே. குமாரவேல் ஆகி யோருக்கு சிறப்புக் கேடயங்கள் வழங்கப்பட்டன.

உலகத் தையல் கலைஞர் பத்திரிகை ஆசிரி யர் மணி, திரைப்பட நடிகர் அலெக்ஸ், கவிஞர் கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் சிறப்புரையாற்ற, குழந் தைகள் கலை நிகழ்ச்சிகளும் நடந்தது விழாவின் தனிச்சிறப்பாக அமைந்து விட்டது!

— நமது நிருபர்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

